# நெடுந்தொகைச் செல்வம்

டாக்டர் - மு. வரதராசன், எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.
தமிழ்த்துறைத் தலைவர், பச்சையப்பன் கல்லூரி

விற்பனை உரிமை :
பாரி நிலையம்
59, பிராட்வே, சென்னை-1

ரூ. 2.50

முதல் பதிப்பு : டிசம்பர், 1954
இரண்டாம் பதிப்பு : அக்டோபர், 1957

உரிமை ஆசிரியர்க்கு

ஆசிரியரின்
மற்ற இலக்கிய நூல்கள்

மணல் வீடு
முல்லைத்திணை
ஓவச்செய்தி
குறுந்தொகை விருந்து
குறுந்தொகைச் செல்வம்
நற்றிணை விருந்து
நெடுந்தொகை விருந்து
தமிழ் நெஞ்சம்
இலக்கிய ஆராய்ச்சி
கொங்குதேர் வாழ்க்கை
திருவள்ளுவர் அல்லது
வாழ்க்கை விளக்கம்
கண்ணகி
மாதவி
நடைவண்டி

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை - 14

# முன்னுரை

கணக்குக் கற்கும் முறை வேறு. வரலாறு கற்கும் முறை வேறு. நிலவியல் முதலியவற்றைக் கற்பதற்கு உரிய முறை வேறு. நீதிநூல்களையும் சமய நூல்களையும் கற்கும் முறை வேறு. கதைகளையும் காவியங்களையும் கற்கும் முறை வேறு.

கணக்குக் கற்கும் ஒருவன் தன் முயற்சியின் வெற்றி தோல்வியை ஒட்டிச் சிறு சிறு உணர்ச்சிகளை அடைவானே தவிர, கற்கும் கணக்கில் ஒருவகை உணர்ச்சியும் உறுவதில்லை. கணக்கில் அவனுடைய மூளை ஈடுபடுகிறது; பற்றற்று ஈடுபடுகிறது. சில வேளைகளில் தன்னை மறந்தும் கணக்கில் ஈடுபடுகிறான்; ஆனால் தன்னை இழப்பது இல்லை; தான் கலப்பது இல்லை. நிலவியல் முதலியவற்றைக் கற்பவனுடைய நிலையும் அத்தகையதே.

வரலாற்றைக் கற்பவன், சிலர் வாழ்ந்த வாழ்வைக் கற்கின்றான். ஆயினும், அந்த வாழ்வு கழிந்தது, பழங்கதை என்ற நினைவோடு கற்கின்றான். ஒரு சில இடங்களில் - உணர்ச்சி மிகுந்த இடங்களில் - தவிர, மற்ற இடங்களில்,

பெரும்பாலும் தான் கலக்காமல், தன்னை இழக்காமலே கற்கின்றான். வரலாற்று மாந்தரின் இன்ப துன்பங்களைக் கற்கும்போது, அயலார்வீட்டுக் குழந்தையின் இன்ப துன்பங்களைக் கேட்டறிவது போன்ற மனநிலையில் இருக்கின்றான்.

நீதி நூல்களையும் சமய நூல்களையும் கற்பவன், ஆடையை வரிந்து கட்டிக்கொண்டு மலை ஏறுபவன் போல், தன் உள்ளத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு உயர்நிலைக்குச் செல்ல முயல்கின்றான் ; ஆதலின் அவனுடைய மனநிலையும் வேறு.

கதைகளையும் காவியங்களையும் கற்பவன், அவற்றில் வாழும் மாந்தர்களின் உலகத்திற்கே சென்றாக வேண்டும் ; தன்னை இழந்து கற்க வேண்டும் ; தான் கலந்து கற்க வேண்டும். கதைகளிலும் காவியங்களிலும் உள்ள இன்ப துன்ப உணர்ச்சிகளை எல்லாம் தான் உற்றிடல் வேண்டும். அயலார்வீட்டுக் குழந்தைகளின் இன்ப துன்பங்களைக் கண்டு ஒரு சிறிது சிரித்தும் ஒரு சிறிது இரங்கியும் கடந்து செல்லுதல் போல் அல்லாமல், தன் வீட்டுக் குழந்தைகளின் இன்ப துன்பங்களில் இரண்டறக் கலத்தல் போன்ற மனநிலை வேண்டும். தன் குழந்தை இடறி விழும் போது, தாயின் நெஞ்சம் துணுக்குறும் ; அவள் அறியாமலே அவளுடைய கைகள் இடறித் தாவும். குழந்தை துள்ளி மகிழும்போது அவளுடைய உள்ளமும் துள்ளி மகிழும். குழந்தையின் துள்ளல், அவளுடைய உடல் நரம்புகளில்

எல்லாம் துள்ளலாய் அமையும். குழந்தையின் மகிழ்ச்சி அவளுடைய மனத்தில் இன்ப ஊற்றாய், முகத்தில் புன்முறுவலாய்த் திகழும். இவ்வளவுக்கும் காரணம், தான் வேறு குழந்தை வேறு என்று இராமல், குழந்தையின் வாழ்வில் தன் வாழ்வை இழக்கும் தியாக மனப்பான்மையே ஆகும்.

இத்தகைய தியாக மனப்பான்மை கதையும் காவியமும் கற்பவர்க்கு, கற்கும் அந் நேரத்திற் கேனும் வேண்டும். இல்லையேல், அவற்றைக் கற்கும் தகுதி இல்லாதவர் ஆவர்.

சிலம்பு நாடகத்தை மேடையில் நடிக்கக் காண்பவர், கண்ணகியின் வாடிய மேனியைக் கண்டு வாடுதல் வேண்டும் ; அதே நிலையில் கண்ணகியின் நெஞ்சத்துப் பொறுமையும் உறுதியும், நாடகத்தைக் காண்பவரின் நெஞ்சத்திலும் ஓரளவு பதிதல் வேண்டும். மாதவியின் மகிழ்ச்சியில் உள்ளம் கலந்து மகிழ்தல் வேண்டும். கானல்வரிப் பாட்டில் மனம் இயைதல் வேண்டும். கோவலனைப் பிரிந்த பின்பு, மாதவி உறும் துயரம் எல்லாம் காண்பவரும் உறுதல் வேண்டும். மதுரைமாநகரில் கண்ணகியின் சீற்றம், பின்னர் அவலம் ஆகிய எல்லாம், காண்பவர் உள்ளத்தில் எழுதல் வேண்டும். இல்லையேல் நாடகம் காணும் தகுதி இல்லாமலே காலத்தைப் போக்கியர் ஆவர்.

நாடகத்தைக் கண்டு வீட்டிற்குத் திரும்பிய பின் ஒரு காட்சி நினைவுக்கு வரின், மேடையில் கண்டபோது அந்தக் காட்சியால் பெற்ற

உணர்ச்சியில் ஒரு பகுதியையாவது திரும்பப் பெறுதல் வேண்டும். மறுநாள், தெருவில் செல்லும் ஒருவன், "காய்கதிர்ச் செல்வனே கள்வனோ என் கணவன்?" என்ற சிலப்பதிகார அடியை வாய்விட்டுப் பாடிச் சென்றால், அதைக் கேட்டவுடன், நாடக மேடையில் கண்ட அதற்கு உரிய காட்சி மனக்கண்ணில் தோன்ற, வீரம் செறிந்த அந்தத் துன்ப உணர்ச்சியும் உள்ளத்தே தோன்றுதல் வேண்டும். இதுவே, கலையில் உள்ளம் பதிந்தது என்பதற்குச் சான்றாகும்.

அறிவியல் துறையில் அருந்தொண்டு புரிந்த க்யூரி அம்மையாரின் வாழ்க்கையைத் திரைப் படமாக ஆக்கியுள்ளனர். கணவர் கடைத்தெருவில் வண்டியில் அகப்பட்டு உயிர் துறக்கும் காட்சிக்குப் பின்னர், அந்தச் செய்தி க்யூரி அம்மையார்க்குத் தெரிவிக்கப்படும் காட்சி உள்ளது. அறிவில் சிறந்த அம்மையார் அப்போது உறும் துயரம், திடுக்கிடாய்ப் பேரமைதியாய்த் திகைப்பாய்ப் பேச்சற்ற நிலையாய்ப் பெருமூச்சாய் விம்மலாய் வளர்கின்றது. அந்தப் பெருந்துயரம், க்யூரி அம்மையாரின் கண்ணீர் வாயிலாகத் தோன்று முன்னமே, காண்பவரின் கண்களைக் கலக்குகின்றது. காண்பவர்க்குத் திடுக்கிடு விளையாமற் போயினும், பேச்சற்ற நிலையும் பெருமூச்சு விடும் நிலையும் விம்மும் நிலையும் வந்துவிடுகின்றன. இவ்வாறு திரைப்படத்தில் நிழலின் காட்சி

யாய் உள்ள துயரம், காண்பவர்க்கு உண்மைத் துயரமாய்த் தோன்றி உள்ளத்தை உருக்குகின்றது அன்றோ? இவ்வாறு உள்ளம் உருகப்பெற்றவரே, திரைப்படம் காணும் தகுதி உடையோர். சில நாட்கள் கழிந்து, அந்தக் காட்சி நினைவுக்கு வரின், உடனே உள்ளத்தில் ஒரு மாறுதல் உற்று நெகிழும் துயர நிலை ஏற்படுமாயின், அத்தகையவரைக் கலைநெஞ்சம் உடையவர் என்று கூறலாம்.

நாடகமேடையிலும் திரைப்படத்திலும் பெறும் இத்தகைய அனுபவங்களைக் கதையும் காவியமும் கற்கும்போதும் பெறுதல் வேண்டும். கதை கற்பதற்கும் காவியம் கற்பதற்கும் உரிய தகுதி இதுவே ஆகும்.

தன்னை மறப்பதோடு அமையாமல் தன்னை இழந்து கதையின் உணர்ச்சிகளிலும்காவியத்தின் உணர்ச்சிகளிலும் கலந்து உணர்தலே, இவற்றைக் கற்கும் முறை ஆகும். கணக்கு, நிலவியல், நீதிநூல், வரலாறு முதலியவற்றைக் கற்பவர்க்கு இது வேண்டா.

கதையிலும் காவியத்திலும் அமைந்துள்ள கலைத்திறனுக்கு ஏற்பக் கற்பவரின் நெஞ்சம் உணர்ச்சி வயப்படும் என்பது உண்மையே. ஆயினும், கற்பவரின் நெஞ்சப் பண்பாடும் ஒரு வகைக் காரணமாக உள்ளது. கலைப் பண்பாடு இல்லாதவர் உயர்ந்த கதையும் சிறந்த காவியமும் கற்பினும் போதிய பயன் அடைய முடியாது. ஆகவே நெஞ்சப் பண்பாடு தேவையாகிறது.

கலைநெஞ்சம் பெற்றவர் நாடகத்தையும் திரைப் படத்தையும் கண்டு அந்தக் கற்பனையுலகத்திற் குச் செல்வதற்குத் தடை ஒன்றும் இல்லை. காணும் கண்ணே வாயில். கண்ணுக்கு உதவி யாக ஒளி இருப்பின் அமையும். இது எளிய வாயில்; கற்றவர் கல்லாதவர் அனைவர்க்கும் அமைந்துள்ள எளிய வாயில்.

ஆயின்,கதையும் காவியமும் கற்பவர்க்குக் கண் மட்டும் போதாது; செவியும் போதாது. சொற் கள் வாயிலாகவே கதைஉலகத்திற்கும் காவிய உலகத்திற்கும் செல்ல வேண்டும். அந்தச் சொற் களின் பொருளை அறிந்திட மூளையின் உதவி வேண்டுவதாக உள்ளது. அறியாத சொற்களின் பொருளை அறிவதற்கு உழைப்பு வேண்டும். இன்றைய மொழியாக இல்லாமல், பழங்காலத்து மொழியாக இருப்பின், அக் காலத்தில் சொற் களுக்கு அமைந்திருந்த பொருள்களை உணர்தல் வேண்டும். அந்தச் சொற்கள் பழங்காலத்து நிகழ்ச்சிகளை உணர்த்தும்போது, பழங்காலத்து வாழ்க்கைப் போக்கும் அறிந்திருக்க வேண்டும். சொற்களின் பொருளை உணர, இலக்கியப் பயிற்சி ஓரளவுக்கு வேண்டும். பழங்கால வாழ்க் கைப் போக்கை உணர வரலாற்று அறிவு ஓரள வுக்கு வேண்டும்.

இவை வேண்டும் எனவே, இவற்றையே - இவற்றை மட்டுமே - தேடிக்கொண்டு காலம் கழிப்பதால் பயன் இல்லை. நாடகத்தைக் காணச்

சென்றவர், கண்ணையும் ஒளியையுமே நினைந்து போற்றிக்கொண்டிருந்தால் பயன் விளையாது; தன்னை மறந்து நாடகத்தில் ஈடுபடல் வேண்டும்; தன்னை இழந்து இன்ப துன்பம் உறுதல் வேண்டும். அவ்வாறே கதையும் காவியமும் கற்பவர், சொற்பயிற்சியும் வரலாற்று அறிவும் வாய்த்தவுடன், அவற்றையும் மறந்து கதை உலகிற்கும் காவிய உலகிற்கும் விரைந்திடல் வேண்டும்.

ஆகவே, சொற்பயிற்சியையும் வரலாற்று அறிவையும் கருவிகளாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமே தவிர, அவற்றையே குறிக்கோளாகக் கொண்டு உழைத்தல் கூடாது. பாட்டுக்களின் சொற்களுக்கு விளக்கம் செய்தலும், பாட்டுக்களில் உள்ள வரலாற்றை ஆராய்தலும் காவியக் கலையின் பயன் ஆகா. இவற்றின் பொருட்டுக் காவியத்தைக் கற்பதைவிட, அகராதிகளை நெட்டுருச் செய்துகொண்டும் வரலாற்று நூல்களைத் தேர்ந்துகொண்டும் காலம் கழிப்பது நன்று. காவியக் கல்வி, இவற்றைக் கடந்தது; இவற்றைக் கருவிகளாகக்கொண்டு, கற்பனையுலகத்து உணர்ச்சிகளை எய்துவது.

காவியத்திலுள்ள நாட்டு வரலாறு பழக்க வழக்கம் முதலியவற்றை ஆராய்தலும் பயனுடையது அன்றோ எனின், அது நாடகம் காணச் சென்று மேடையில் நடிப்பவரின் உடையழகையும் உடலழகையும் அங்குள்ள திரைகளின் பலவகை வண்ணங்களையும் தூண்களின்

அமைப்பையும் போற்றி மகிழ்தல் போன்றதே ஆகும். நாடகம் தொடங்கும்போது இவையும் நினைவில் பதியலாம். ஆனால் உணர்ச்சியுடன் நாடகம் நடிக்கப்படும்போது இவற்றை மறந்து ஈடுபடுதல் வேண்டும். அவ்வாறே, காவியம் கற்கத் தொடங்குவார்க்குச் சொல்லாராய்ச்சியும் வரலாற்று ஆராய்ச்சியும் துணைக்கருவிகளாக அமையும். கற்றுப் பயின்றபின், அந்தக் கருவிகளை மறக்கும் நிலை எய்தல் வேண்டும்.

கலைப்பயனைப் பெறுதற்கு இன்றியமையாத மற்றொன்று அனுபவச் செல்வம். நாடகமேடையில் நடப்பவற்றை முதியவர் ஒருவரும் பார்க்கிறார்; சிறுவன் ஒருவனும் பார்க்கிறான். கண்ணகி மதுரையின் மேற்குவாயிலை விட்டு நீங்கும் போது, 'கிழக்கு வாயிலின் வழியாக நுழைந்த போது கணவரோடு புகுந்தேன்; இப்போது மேற்குவாயிலின் வழியாக வெளியேறும்போது தனியே செல்கின்றேன்' என்று பெருமூச்சுவிட்டு வளையல்களை உடைக்கும் காட்சி வரும்போது, முதியவர் பெருமூச்சு விடுகிறார்; அவருடைய உள்ளம் உடைகிறது. ஆனால் அதே காட்சியைப் பார்க்கும் சிறுவன் என்னவோ சொல்கிறாள் என்று புறக்கணிக்கிறான்; கையில் உள்ள வளையல்களை உடைக்கிறாள் என்றும், பைத்தியக்காரி என்றும் எண்ணுகிறான். இவர்க்கும் கட்புலன் உள்ளது; ஒளி பொதுவாக உள்ளது; நாடக மேடையும் இருவர்க்கும் பொதுவாகவே உள்

ளது. ஆயினும் முதியவர் பெருமூச்சு விட்டு உள்ளம் குழைகிறார் ; சிறுவன் என்னவோ எண்ணிப் புறக்கணிக்கிறான். காரணம் என்ன? நாடக மேடையில் உணர்த்தப்படும் உணர்ச்சி முதியவரின் நிறைந்த அனுபவத்திற்கு எட்டக் கூடியது ; சிறுவனுடைய சிறு அனுபவத்திற்கு எட்டாதது. பிரிவுத் துன்பம் என்பதை எவ்வெவ் வகையிலோ முதியவர் உணர்ந்திருக்கிறார். சிறுவன் இன்னும் அதைத் தன் வாழ்க்கையில் உணரவில்லை. தம் தம் வாழ்க்கையின் அனுபவங்களைக் கொண்டே, நாடகம் முதலிய கலைகளில் உள்ள உணர்ச்சிகளை எட்ட முடியும்.

மேடையில் கணவனை இழந்த கற்பரசியின் துயரத்தை உணர, கணவனை இழந்த அனுபவமே வேண்டும் என்பது இல்லை ; யாரேனும் ஒருவரை இழந்து வருந்திய அனுபவம் போதும். ஒரு பசுவையோ கிளியையோ அன்புடன் வளர்த்து அன்போடு பழகி வாழ்ந்து, அதனை இழந்த அனுபவம் இருந்தாலும், அதைக்கொண்டு கண்ணகியின் துயரத்தை ஒருசிறிதேனும் உணர முடியும். பலநாளும் அன்போடு காத்துப் போற்றிவந்த புத்தகத்தையோ பேனவையோ இழந்து துயரப்பட்ட அனுபவம் இருந்தாலும், அதுகொண்டு கண்ணகியின் துயரத்தைச் சிறிதேனும் உணர முடியும். கணவனையோ மனைவியையோ இழந்து துயரத்தில் ஆழ்ந்து கலங்கிய அனுபவம் உடையவராக ஒருவர் இருப்பின்;

அத்தகையவர்க்கு அந்த நாடகக் காட்சி பெரிய தோரளவில் உணர்ச்சி ஊட்டி உள்ளத்தை நெக் குருகச் செய்ய வல்லதாகும். ஆகவே, நாடகம் முதலிய கலைகளில் உள்ள உணர்ச்சியை எய்த வேண்டுமானால், வாழ்க்கையில் நிறைந்த அனு பவம் இன்றியமையாதது. குறைந்த அனுபவம் உடையவரும், வாழ்க்கையில் பெற்ற அனுபவம் போதாது எனினும், பெற்ற சிறு அனுபவத்தைக் கொண்டே இயன்ற வரையில் கதைகளையும் காவி யங்களையும் கற்றுக் கற்று அந்த அனுபவத்தைப் பெருக்கியவாறே வளரலாம். மனம், உணர்ச்சி களால் வளர்வது. வாழ்க்கையில் எய்தும் உணர்ச்சிகளும் மனத்தை வளர்க்கும்; இலக்கியத் தால் பெறும் உணர்ச்சிகளும் அதை வளர்க்கும். துறவறத்தா ராகிய இளங்கோவடிகள் போன்ற வர்க்கு வாழ்க்கையின் இன்ப துன்ப அனுபவம் குறைவு எனினும், பிறர்வாழ்க்கைகளையும் பல நூல்களையும் கற்றுக் கற்றுப் பெற்ற அனுபவம் அந்தக் குறையை நிறையாக்குகிறது. அதனால் அவர்கள் பல நல்ல காவியங்களைப் படைத்துத் தரவும் வல்லவர்களாகின்றனர்.

இவ்வாறு ஈராயிர ஆண்டுகளுக்கு மேலாகப் பல தலைமுறையினர் தொடர்ந்து பயின்று பயன் பெற்றுப் போற்றிய கற்பனைச் செல்வம்நிறைந்த நூல்கள் சங்க இலக்கியங்கள். அவற்றை நாம் கற்க முயலுமுன், அந் நூல்களின் சொல்நடை யில் பயிலுதல்வேண்டும் ; அப் பாட்டுக்களைப்

பாடிய புலவர்கள் மலையிலும் காட்டிலும் வய லிலும் கடற்கரையிலும் வானத்திலும் கண்ட காட்சிகளை நாமும் கண்டு பழகல் வேண்டும். நேரே காணமுடிந்த காட்சிகளைக் கண்டு பழகிய அனுபவம் கொண்டு, காண முடியாத காட்சி களையும் கற்பனை செய்து உணர்தல் வேண்டும். அவர்கள் ஒப்பிட்டுப் போற்றிய அழகுகளை நாமும் ஒப்பிட்டுக் காணல் வேண்டும். அவர்கள் உணர்ந்து பாராட்டிய நாகரிகக் கூறுகளை நாமும் உணர்ந்திடல் வேண்டும். அவர்கள் ஆய்ந்து உணர்ந்த உள்ளத்து உணர்வுகளை நாமும் ஆய்ந்து உணர்தல் வேண்டும். இவ்வளவும் இலக் கியச் செல்வமாகக் கொண்டு போற்றிய பின் னரே அப் பாட்டுக்கள் நமக்கு விருந்தாக விளங்கி இன்பம் அளிப்பனவாகும்.

அத்தகைய சங்கப் பாட்டுக்களுள் அகப் பொருள் பற்றிய நானூறு பாட்டுக்கள் நெடுந் தொகை என்னும் தொகைநூலில் உள்ளன. அவை, பதின்மூன்று அடிமுதல் முப்பத்தோரடி வரையில் அமைந்த அகப் பாட்டுக்கள். நாடக மேடையில் காணும் காட்சியைக் கண்டு தம்மை மறந்து உருகும் கலைஞரைப் போல், இந்தப் பாட்டுக்களைப் பாடியவுடன் புலவரின் கற்பனை யுணர்ச்சியில் ஒரு பெரும் பங்கை உணரவல்ல வரே இவற்றைக் கற்றவர் எனலாம். இத்தகைய கலையனுபவமே பழம்பாட்டுக்களைப் பல தலை முறையினரும் தொடர்ந்து போற்றுமாறு தூண்டி வருகிறது.

நெடுந்தொகை அல்லது அகநானூறு என்னும் தொகைநூலின் பாட்டுக்களை இவ்வகையான நலையனுபவத்துடன் கற்று உணர்வார்க்கே அவை விருந்தாக விளங்கும். அதற்குமுன் அந்நூல் நல்கும் பல்வகைச் செல்வங்களையும் போற்றிப் பயிலும் பயிற்சி இன்றியமையாதது. நெடுந்தொகைச் செல்வம் என்னும் இந்நூல் இத்தகைய பயிற்சி பெற விரும்புவார்க்குத் துணை செய்யும் என்று நம்புகிறேன்.

**மு. வரதராசன்**

# 1. மலை

## யானையின் வெற்றிவாழ்வு

மனிதன் தன் வாழ்வைப் பற்றி எண்ணவும் அமைதியான ஓய்வு இல்லாமல் அலையும் காலம் இது. பழங்காலப் புலவர்கள் மலைகளிலும் காடுகளிலும் பொய்கைகளிலும் கடற்கரையிலும் வாழ்ந்த உயிரினங்களின் வாழ்வை எல்லாம் ஆர்வமுடன் கண்டு எண்ணி உணர்ந்திருந்தனர்.

யானை முதலியவை மலைகளில் எவ்வாறு வாழ்கின்றன என்பதைப் பழங்கால இலக்கியம் உணர்த்தும்போது வியந்து போற்ற வேண்டியுள்ளது.

யானை, மூங்கில் செழித்து விளையும் மலைப்பகுதிகளில் வாழ்வது ; கூட்டமாகச் சேர்ந்து வாழ்வது ; மூங்கிலை விருப்பமான உணவாகத் தின்று வாழ்வது ; தன்னைக் கொல்ல மறைந்து வரும் புலியைப் பார்த்துவிட்டால் பெருஞ் சினத்துடன் அதைத் தாக்கிக் கொல்ல வல்லது. இவற்றை எல்லாம் கூறும் புலவர், மேலும் உணர்ந்து உரைக்கும் கருத்துக்கள் கற்பனைச் சுவையுடன் அமைந்துள்ளன. புலியைத் தாக்கியதால் இரத்தக் கறை படிந்த கொம்புகளைக் கழுவிக்கொண்டு, வெற்றியால் விளைந்த பெருமிதத்தோடு தன் துணையிடம் செல்கின்றதாம் ; மகிழ்ச்சி மிக்க உள்ளத்தோடு வாழைமரம் செழித்த மலைப்பகுதியில் உறங்குகின்றதாம்.

மூங்கில் புதரில் பல முளைகள் வளர்ந்துள்ளன. மூங்கில்கள் செழித்து ஓங்கியுள்ளன. தன் இனத்தோடு சேர்ந்து சென்ற யானை அந்த மூங்கில்களை ஒடித்துத் தின்கின்றது. பிறகு நீர் குடிக்கச் செல்கின்றது. நீர்த்துறைக்கு யானை வரும் என்று அறிந்து அதை எதிர்பார்த்து அங்கே புலி தாக்குவதற்காக ஒளிந்திருக்கின்றது. நீர் தேடிச் சென்ற யானை அதைக் கண்டு தாக்கிக் கொல்கின்றது. யானையின் கொம்புகள் புலியின் குருதியால் செந்நிறம் பெறுகின்றன. அந்தக் கறையை நீரில் கழுவிவிட்டு யானை மெல்ல மெல்லப் பக்கமலைக்குச் செல்கின்றது. தன் பகையை அழித்துவிட்ட செருக்கோடு செல்கின்றது. அதன் மதநீரை நாடி வந்து வண்டுகள் மொய்க்கின்றன. யானை தன் துணையோடு கூடி வாழைமரங்கள் வளர்ந்துள்ள மலைப்பகுதியில் துயில்கின்றது.

முளைவளர் முதல மூங்கில் முருக்கிக்
கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை
நீர்நசை மருங்கின் நிறம்பார்த்து ஒடுங்கிய
பொருமுரண் உழுவை தொலைச்சிக் கூர்நுனைக்
குருதிச் செங்கோட்டு அழிதுளி கழாஅக்
கல்முகை அடுக்கத்து மென்மெல இயலிச்
செறுபகை வாட்டிய செம்மலொடு அறுகால்
யாழிசைப் பறவை இமிரப் பிடிபுணர்ந்து
வாழையஞ் சிலம்பில் துஞ்சும்.........*

*அக. 332, கபிலர்.

முதல் - புதர். முருக்கி - ஒடித்து. கேழ் - நிறம். முரண் - மாறுபாடு. உழுவை - புலி. தொலைச்சி - கொன்று. கழாஅ - கழுவி. அடுக்கம் - பக்கமலை. வாட்டிய - அழித்த. செம்மல் - தலைமையுணர்ச்சி, செருக்கு. பறவை - வண்டு. இமிர - ஒலிக்க.

## யானைகளின் இல்வாழ்க்கை

யானைகள் அன்பாக இல்லறம் நடத்தி வாழக் காண்கின்றனர் புலவர். பெண்யானை கன்று ஈன்று, பசி தீர மூங்கிலைத் தின்னும்போது, ஆண்யானை அன்புடன் நெருங்கி வந்து அதனைத் தடவுகின்றதாம். அயர்வு தீரப் பெண்யானை உறங்குகின்றதாம்.

மழை தவழும் உச்சியை உடைய மலையில் வாழும் பெண்யானை, கன்று ஈன்று மூங்கிலைத் தின்கின்றது. பிறகு அன்பு கொண்ட ஆண்யானை அதன் உடம்பைத் தடவிக் கொண்டு நிற்க, அது வாழைமரங்கள் வளர்ந்த மலைப்பகுதியில் உறங்குகின்றது.

... ... ...மடப்பிடி
மழைதவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று
கழைதின் யாக்கை விழைகளிறு தைவர
வாழையஞ் சிலம்பில் துஞ்சும்.........*

கன்றும் தாயும் தந்தையுமாக உள்ள யானைக்குடும்பம் ஒன்று, மக்களின் குடும்பமாகவே புலவரின் கண்ணுக்குத் தோற்றம் அளிக்கிறது. படுத்துள்ள ஆண்யானையின் மேல் யானைக்கன்று ஏறி இறங்கும் குழந்தைவிளையாட்டைப் புலவர் படமாக்கிக் காட்டுகிறார்.

சூல் நிறைந்த பெண்யானையின் பக்கத்தே ஆண்யானை ஒன்று இருக்கிறது. யானைக்கன்று அதன் அருகே வருகிறது. யானைக்கன்று தன்மீது ஏறி இறங்கி விளையாடுவ

---

*அக. 328, மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்.

கடுஞ்சூல் - நிறைந்த கர்ப்பம். கழை - மூங்கில். விழை விரும்பு. தைவர - தடவ.

தற்கு இயைந்து ஆண்யானை படுத்து வளைந்துகொடுக்கிறது. இந்தக் காட்சி, தாயின் அருகே உள்ள தந்தையின் மார்பில் மகன் ஏறி இறங்கி விளையாடுதல் போல் உள்ளது.

மடவோள் தழீஇய விறலோன் மார்பில்
புன்தலைப் புதல்வன் ஊர்புஇழிந் தாங்குக்
கடுஞ்சூல் மடப்பிடி தழீஇய வெண்கோட்டு
இனஞ்சால் வேழம் கன்றுஊர்பு இழிதரப்
பள்ளி கொள்ளும்...........*

## யானைகளின் அச்சம்

வலிமை மிகுந்த யானையிடத்து அறியாமையையும் அச்சத்தையும் அமைத்துப் பாடுவதில் புலவர்க்கு மகிழ்ச்சி உள்ளது. வலியவன் இடறி விழுவதைக் காணும் சிறுவர்க்கு உள்ளது போன்ற கரவற்ற தூய மகிழ்ச்சி இது. புலிக்கு அஞ்சும் இயல்புடைய யானை, புலிபோல் தோன்றும் காட்சியைக் கண்டாலும் தவறாக உணர்ந்து அஞ்சி ஓடுகிறது.

பலாமரத்தில் பெரிய காய்கள் காய்த்திருக்கின்றன. அவை பழமாகும்போது குரங்கு முதலியவை கவர்ந்து கொள்ளாமல் காக்கவேண்டும் என்று குறவர்கள் கருத்தாக இருக்கிறார்கள். ஒரு குடிசை நாட்டிக் காக்கிறார்கள். அந்தப் பலாமரத்தை அடுத்தாற்போல் குடிசைக்கு மேலே வேங்கை மரம் இருக்கிறது. அந்த மரத்தில் மலர்கள் நிறைந்து காணப்படுகின்றன. அந்தப் பொன்னிற மலர்கள் குடிசை

---

*அக. 197, மாமூலனார்.

மடவோள் - இளமையுள்ள மனைவி. விறலோன் - கணவன். புன்தலை - புல்லிய தலை. ஊர்பு - ஊர்ந்து. இழிந்தாங்கு - இறங்கினாற்போல். கடுஞ்சூல் - நிறைந்த கர்ப்பம்.

மறையுமாறு பரவிக் கிடப்பதால் குடிசையின் காட்சியே வேறுபட்டுத் தோன்றுகிறது. அந்தத் தோற்றம் புலி போல் தெரிகிறது. அவ் வழியாக வந்த யானை அதைக் கண்டு அஞ்சுகிறது ; புலி என்று எண்ணியே அது அஞ்சி நடுங்குகிறது. பிறகு அவ்விடத்தை விட்டுப் பக்கமலை வழி யாகச் செல்கிறது. வழியில் உள்ள மூங்கில்கள் மடமட என்று முறிபடுகின்றன.

> விழுக்கோள் பலவின் பழுப்பயன் கொண்மார்
> குறவர் ஊன்றிய குரம்பை புதைய
> வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
> புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்
> மழைபடு சிலம்பில் கழைபடப் பெயரும்......*

## இசைவிருந்து

மதம் பிடித்த யானையே ஆயினும் இசைகேட்டு உருகி அமைதியுறுதல் உண்டு. தினைப்புனத்தில் மேயப் புகுந்த ஆண்யானை ஒன்றைத் துரத்த வழி அறியாமல் திகைக்கும் பெண் ஒருத்திக்கு இசை உறுதுணையாய் உதவுகிறது. எதற்கும் அஞ்சாது அழிக்கவல்ல யானை, மெல்லியல் ஒருத்தி யின் இசைக்கு வயப்பட்டுத் தன்னை மறந்து உறங்குவதாகப் புலவர் ஒருவர் தீட்டும் சொல்லோவியம் சிறப்புற அமைந் துள்ளது.

---

*அக. 12, கபிலர்.

கோள் - காய்கொள்ளுதல். குரம்பை - குடிசை. புதைய - மறைய. செத்து - என்று கருதி. சிலம்பு - எதிரொலிக்கும் பக்க மலை (சிலம்புதல் - ஒலிஎழுப்புதல்). கழை - மூங்கில். பட - முறிந்து விழுமாறு.

தினை ஓங்கிய பெரிய புனத்தில் சிங்கம் போன்ற வலிமை உடைய கானவன், பரண்மேல் கள்ளுண்டு களித்து இருக்கிறான். அவனுடைய மனைவி, மயிர்ச்சாந்து பூசிய பரந்த கரிய கூந்தலில் அசைந்துவரும் காற்று வீசி ஆற்று மாறு கையால் கோதிக்கொண் டிருக்கிறாள். வீரம் பொருந்திய இளைய ஆண்யானை ஒன்று அப்போது தினை உண்பதற்காகப் புனத்தில் நுழைகின்றது. கானவனை எழுப் பாமல் அவள் தினையைக் காக்க முயல்கிறாள். யாழ் எடுத்துக் குறிஞ்சிப்பண் பாடுகிறாள். வந்த யானை தினைக் கதிர்களை யும் கொள்ளாமல், இருந்த நிலையிலிருந்தும் அசையாமல், உறங்கிவிடுகின்றது.

உளைமான் துப்பின் ஓங்குதினைப் பெரும்புனத்துக்
கழுதின் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
உரைத்த சந்தின் ஊரல் இருங்கதுப்பு
ஐதுவரல் அசைவளி ஆற்றக் கைபெயரா
ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்
குரலும் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற்று ஒய்யென
மறம்புகல் மழகளிறு உறங்கும்.........*

---

*அக. 102, மதுரை இளம்பாலாசிரியன் சேந்தங் கூத்தன்.

உளைமான் - பிடரியுடைய சிங்கம். துப்பு - வலிமை. கழுது - பரண். பிழி - கள். சந்து - மயிர்ச் சாந்து. கதுப்பு - கூந்தல். பெயரா - பெயர்த்து. ஒலியல் - செழித்த. கொடிச்சி - மலைநாட்டுப் பெண். குரல் - தினைக்கதிர். ஒய்யென - விரைவாக. மறம் - வீரம். புகல் - விரும்பும்.

## வறட்சியால் வாடுதல்

வளமான மலையில் அஞ்சாமை கொண்டு அன்பு வாழ்க்கை நடத்திச் செருக்கித் திரியும் யானைகளைக் காட்டும் புலவர்கள், வறண்ட மலைப்பகுதியாகிய பாலையில் வாடித் திரிந்து நீருக்கும்நிழலுக்கும்அலைந்துவருந்தும் யானைகளையும் காட்டுகின்றனர். இத்தகைய கொடிய துன்பமான நிலையிலும் அவற்றின் அன்பு குன்றாமல் இருப்பதாகக் காட்டுதல் போற்றத் தக்கது. உடலை வாட்டும் வறட்சி, உள்ளத்தைக் கெடுக்காத வகையில் வாழ்வது சிறந்த நிலையே அன்றோ ?

அவை நீர் வேட்கையால் வாடிச் சுனையில் நீரைத்தேடி வருந்தும் காட்சியும், மழை பெய்யுமா என்று ஏங்கித் துதிக் கையை உயர்த்தி வானை அண்ணாந்து நோக்கும் காட்சியும், பேய்த்தேரை (கானலை) நீர் என்று கருதி ஏமாந்து ஓடி ஓடி இளைத்து வாடிக்கிடக்கும் காட்சியும் நெஞ்சை உருக்கும் தன்மையன.

வெயிலின் கொடுமையால் அருவி இல்லாமல் பாலையாய் மாறிய பெரிய மலைப்பகுதியில், பசித்த யானை, நீர் வேட்கையால் சுனையைத் துழாவிப் பார்த்து நீரைக் காணாது வருந்துகின்றது. பிறகு அங்கே உலர்ந்துகிடக்கும் பாசியைத் தின்று, அயர்வுதரும் பசியால் வருந்தும் பெண்யானையுடன் ஒரு பக்கத்தில் ஒடுங்கிக் கிடக்கின்றது. மூங்கில்கள் கணுக்கள் உடைந்து போகுமாறு அந்தப் பாலையில் வெயில் மிக்குள்ளது.

அருவி ஆன்ற பெருவரை மருங்கில்
சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயம் காணாது
பாசி தின்ற பைங்கண் யானை

ஓய்பசிப் பிடியொடு ஒருதிறன் ஒடுங்க
வேய்கண் உடைந்த வெயில்அவிர் நனந்தலை......*

யானை புலியோடு போர் செய்து துன்புற்று வருகின்றது. அதன் தலையில் புண்பட்டுப் பிளவு காணப்படுகின்றது. மிக்க துன்பத்தாலாகிய வருத்தத்தோடு நீர் குடிக்க விரைந்துவருகின்றது. ஒரு சுனையின் அருகே மண்ணில் முழங்கால் ஊன்றி, ஆழத்தில் நீர் இருக்கக்கூடும் என்று தன் துதிக்கையைத் தோய்த்துப் பார்க்கின்றது. நீர் காணாமல் பெருமூச்சு விடுகின்றது.

மறப்புலி உழந்த வசிபடு சென்னி
உறுநோய் வருத்தமொடு உணீஇய மண்டிப்
படிமுழம் ஊன்றிய நெடுநல் யானை
கைதோய்த்து உயிர்க்கும் வறுஞ்சுனை...†

ஒரு காலத்தில் மேகம் தவழும் காடாகவும் நீர் நிறைந்த சுனையாகவும் அவை விளங்கின. இப்போது மழை இல்லாமையால் நீர் இல்லாமல் வறண்டு கிடக்கின்றன. நீர் இல்லாத சுனையாகையால், மறைவான நல்ல இடம் என்று பெண்புலி அதனுள் சென்று குட்டி ஈனுகின்றது. அத்தகைய சுனையி

---

*அக. 91, மாமூலனார்.

ஆன்ற - இல்லாமற்போன. சூர் - தெய்வம் உடைய. துழைஇ - துழாவி. ஓய் - அயர்ந்துபோவதற்குக் காரணமான. ஒருதிறன் - ஒரு பக்கம். வேய் - மூங்கில். கண் - கணு. அவிர் - விளங்கும். நனந்தலை - அகன்ற இடம்.

†அக. 119, குடவாயிற் கீரத்தனார்.

உழந்த - துன்புற்ற. வசி - பிளவு. சென்னி - தலை. உணீஇய- உண்ண. உயிர்க்கும் - பெருமூச்சு விடும்.

ளுள் சிறிதளவேனும் நீர் கிடைக்காதோ என்று நீர் வேட்கையால் வாடிய யானை ஒன்று அங்கு வந்து அதனுள் துதிக்கையை நீட்டிப் பார்க்கின்றது. உள்ளே இருக்கும் புலிக்குட்டி அதன் கையைக் கடித்து முழங்குகின்றது. (பாய்ந்து முதுகை நெளிக்கும் தன்மை பெற்ற புலிக்குட்டி அது).

> ... ... ...(பாய்கொள்பு
> உறுவெரிந் ஒடிக்கும்) சிறுவரிக் குருளை
> நெடுநல் யானை நீர்நசைக்கு இட்ட
> கைகறித்து உரறும் மைதூங்கு இறும்பில்
> புலிபுக்கு ஈனும் வறுஞ்சுனை...*

மேல்காற்று, கடுமையாக வீசுகிறது. இளம்பனை மரங்கள் அதைத் தாங்க முடியாமல் வருந்துகின்றன. அவற்றின் குருத்துக்கள் இற்றுப்போய் உதிர்கின்றன. நல்ல வேனில்காலம் ஆகையால் மீண்டும் தழைக்க வழி இல்லாமல், உச்சி கூம்பி வாடுகின்றன. அவ்வழியே நீர்வேட்கை தாங்க முடியாமல் வாடி வருந்திய யானைக்கூட்டம் செல்கின்றது. மழையேனும் பெய்யுமோ என்று அந்த யானைகள் வானத்தை நோக்குகின்றன. துதிக்கைகளை உயர்த்தி ஏங்குகின்றன. யானைகள் உயர்த்திய கைகளோடு ஏங்கும் காட்சி, வாடி வற்றிப் போன அந்தப் பனைமரங்கள்போல் தோன்றுகின்றது.

---

*அக. 329, உறையூர் முதுகூத்தனார்.

பாய் - பாய்தல். கொள்பு - கொண்டு. வெரிந் - முதுகு. ஒடிக்கும் - நெளிக்கும். குருளை - குட்டி. நசை - விருப்பம். கறித்து- கடித்து. உரறும் - முழங்கும். மை - மேகம். தூங்கும் - அசையும். இறும்பு - காடு.

... ... ...கோடையின்
குருத்துஇறுபு உக்க வருத்தம் சொலாது
தூம்புடைத் துய்த்தலைக் கூம்புபு திரங்கிய
வேனில் வெளிற்றுப்பனை போலக் கையெடுத்து
யானைப் பெருநிரை வானம் பயிரும்......மலை.*

பாலையாய்ப் போன காட்டுவழியில் வெப்பம் மிகுந்து தீய்க்கின்றது. அந்தப் பாழ்நிலத்தில் தன் பெருமை வாடிச் செல்கின்றது யானை; நீர்வேட்கையால் நீரை நாடி அலைகின்றது. பேய்த்தேரை (கானலை) நீர் என்று மயங்கி அது தோன்றும் இடமெல்லாம் ஓடுகின்றது. ஓடி ஓடி இளைத்து வழியில் வருந்திக் கிடக்கின்றது. அப்போது அதன் தோற்றம் நீர் இல்லாத ஆற்றில் இயங்காமல் கிடக்கும் ஓடம்போல் உள்ளது.

வெம்மை தண்டா எரிஉகு பறந்தலைக்
கொம்மை வாடிய இயவுள் யானை
நீர்மருங்கு அறியாது தேர்மருங்கு ஓடி
அறுநீர் அம்பியின் நெறிமுதல் உணங்கும்...†

வெயில் மிக்க பாலையில் பனங்குருத்தைத் தின்னும் யானை, சுடர் முதிராத இளங்கதிர் உள்ள காலை நேரத்தில்

*அக. 333, கல்லாடனார்.

இறுபு - இற்று. உக்க - உதிர்ந்த. சொலாது - நீங்காமல். தூம்பு - துளை. துய் - பஞ்சுபோல் மெத்தென்ற பகுதி. கூம்புபு - கூம்பி. திரங்கிய - வற்றிய. வெளிற்று - காழ் இல்லாத, இளைய. நிரை - கூட்டம். பயிரும் - அழைக்கும், கதறும்.

†அக. 29, வெள்ளாடியனார்.

தண்டா - குறையாத. பறந்தலை - பாழ்நிலம். கொம்மை - பெருமை. இயவுள் - வழியில் உள்ள. அம்பி - ஓடம். நெறிமுதல் - வழியில். உணங்கும் - வாடும்.

உறங்குமிடத்தில் செயலொடுங்கி அசைந்துகொண்டிருக் கிறது. அந்த நிலைமை, பரதவர் காலையில் வேட்டை மேற் கொண்டு புறப்பட்ட கடலில் உள்ள தோணி போல் தோன்றுகிறது.

பனைவெளிறு அருந்து பைங்கண் யானை
ஒண்சுடர் முதிரா இளங்கதிர் அமையத்துக்
கண்படு பாயல் கையொடுங்கு அசைநிலை
நாள்வேட்டு எழுந்த நயன்இல் பரதவர்
வைகுகடல் அம்பியின் தோன்றும்...*

## கன்று தேடும் தாய்

புலிக்கும் யானைக்கும் நிகழும் போர் கொடியது. அப் போது ஆண்யானையின் முழக்கத்தைக் கேட்டுப் பெண் யானை தன் கன்றையும் மறந்து ஓடுவதாகப் புலவர் பாடி யுள்ளார். ஆயினும், கொடிய அச்சம் சிறிது குறைந்தவுடன், அதன் நெஞ்சம் கன்றைத் தேடி அலைகின்றதாம்.

ஒளியான நிறம் பொருந்திய வலிய புலி ஆண்யானை மேல் பாய்ந்து தாக்குகிறது. அப்போது ஆண்யானை செய்த முழக்கத்தைக் கேட்டுப் பெண்யானை அஞ்சி ஓடிவிடுகிறது. தன் கன்றையும் மறந்துவிட்டு ஓடுகிறது. பிறகு கன்றை நினைந்து வருந்தி, துதிக்கையைத் தலைமேல் வைத்துக்கொண்டு மயங்கிப் பதைத்து இங்கும் அங்கும் தேடி அலைகிறது. இந்தக் காட்சி, குழந்தை காணமற் போகும்போது பெண்டிர் தேடித் திரிவதுபோல் இருக்கிறது.

*அக. 187, மாமூலனார்.

அமையம் - பொழுது. பாயல் - படுக்கை. நாள் - காலை. நயன் - நயம்.

ஒண்கேழ் வயப்புலி பாய்ந்தெனக் குவவடி
வெண்கோட்டு யானை முழக்கிசை வெரீஇக்
கன்றொழித்து ஓடிய புன்தலை மடப்பிடி
கைதலை வைத்த மையல் விதுப்பொடு
கெடுமகப் பெண்டிரின் தேரும்*

## யானையின் சீற்றம்

தமிழ்நாடு யானைகளைப் பிடித்து வளர்க்கும் தொழிலுக்குப் பெயர் போனது. யானைகளும் பல இடங்களில் தோண்டப்படும் குழிகளைக் கண்டு அஞ்சி ஒதுங்குவன. ஆனால், தம்மைப் பிடிக்கும் நோக்கம் இல்லாமல், வேறு காரணத்தால் தோண்டப்படும் குழிகளைக் கண்டும் அவை சினம் கொள்வதாகவும் தூர்ப்பதாகவும் புலவர் பாடும் பகுதி நயமுற அமைந்துள்ளது.

பரல்கற்களை உடைய மண்மேடாகிய வன்னிலத்தில் கிணறு வெட்ட எண்ணியவர்கள் வலிய வாயை உடைய குந்தாலி கொண்டு உடைத்துப் பார்த்து, நீர் ஊறாதபடியால் விட்டுவிடுகிறார்கள். அந்தப் பள்ளத்தைச் சருகுகள் நிரப்பி மூடுகின்றன. பெரிய யானைக்கூட்டம் ஒன்று அவ்வழியே வருகின்றது. சருகுகள் மூடிய குழியை யானைகள் பார்க்கின்றன. யானைக்கொம்பு விரும்பிய இரக்கமற்ற வேடர்கள் தங்களைப் பிடிப்பதற்காகத் தோண்டிய குழி என்று அவை எண்ணுகின்றன. கவலையில்லாமல் யானைகள் திரியும்

*அக. 347, மாமூலனார்.

கேழ் - நிறம். வய - வலிமை. குவவு அடி - திரண்ட அடி. வெரீஇ - அஞ்சி. ஒழித்து - விட்டு. மையல் - மயக்கம். விதுப்பு - விரைவு, பதைப்பு. கெடு - காணாமற் போன. மக - குழந்தை. தேரும் - தேடும்.

வழி என்று அறிந்துகொண்டு அந்த வேடர்கள் தம்மைப் பிடிப்பதற்காகச் செய்த முயற்சி என்று எண்ணியதும், சினம் கொண்ட யானைகள் அந்தக் குழியைத் தூர்க்கின்றன.

*பரல்மண் சுவல முரண்நிலம் உடைத்த*
*வல்வாய்க் கணிச்சிக் கூழார் கூவலர்*
*ஊறுநீர் இட்ட உவலைக் கூவல்*
*வெண்கோடு நயந்த அன்பில் கானவர்*
*இகழ்ந்தியங்கு இயவின் அகழ்ந்த குழிசெத்து*
*இருங்களிற் றினநிரை தூர்க்கும்...**

## புலி ஒளிந்த காட்சி

குறிஞ்சியைப் பாடும் புலவர்கள், மலைக்குகைகளில் வாழும் புலிகளின் வாழ்வை எவ்வாறு அறிந்தனரோ? சிலர் கேட்டறிந்த குறிப்புக்களாக இருக்கலாம். சிலர் கண்டறிந்த காட்சிகளாகவும் இருத்தல் கூடும்.

புலி இரைதேடி வெளிவரும்போது புதர்களில் ஒளிந்திருக்கும் காட்சியைப் புலவர் ஒருவர் பாடுகிறார்.

மலை ஒன்றில் பெரிய மூங்கில்கள் வளர்ந்திருக்கின்றன. அவற்றின் கழை (தண்டுகள்) அசையும் இயல்பு உடையன. மூங்கில்புதரில் ஒளிந்து தங்கியிருக்கப் பெரிய புலி ஒன்று வந்து சேர்கின்றது. மேல்காற்று திடீரென்று வீசுகிறது. அதனால் மூங்கில்கள் சாய்ந்து வளையவே, (வளைந்த கோடுகளை

*அக. 21, காவல்முல்லைப் பூதனார்.

சுவல் - மேடு. முரண்நிலம் - வன்மையான நிலம், காடு. கூழ் ஆர் - கூழ் உண்ணும். கூவலர் - கிணறு வெட்டுவோர். உவலை - தழை, சருகு. கூவல் - கிணறு. நயந்த - விரும்பிய. இகழ்ந்து - புறக்கணித்து. இயவு - வழி. செத்து - எனக் கருதி.

உடைய) அந்தப் புலி நன்முகத் தெரிகிறது. மறைந்திருக்க எண்ணிய அதன் முயற்சி வீணாகிறது.

கொடுவரி இரும்புலி தயங்க நெடுவரை
ஆடுகழை இருவெதிர் கோடைக்கு ஒல்கும்...*

இதைப் பாடிய புலவர் நக்கீரனாரின் தந்தையார் கணக்காயனார்; மலைநாட்டவர் அல்லர்; மதுரை நகரத்தார்.

புலி ஒளிந்து வாழ முயலும் முயற்சியை மேல்காற்றுக் கெடுப்பதாகக் காட்டுகிறார். ஒளிந்துகொள்வதற்கு ஏற்றது என்று மூங்கில்புதரை நாடி அடைக்கலம் புகுந்த புலியைக் காட்டிக்கொடுத்துவிட்டு, மூங்கில்கள் அசைந்து ஆடுவதாகக் கூறுதல் நயமாக உள்ளது.

## புலிகளின் அன்புவாழ்க்கை

பெண்புலி, குட்டி ஈன்று பசியுடன் கிடக்கும் காட்சியையும் அதன் பசியைப் போக்க ஆண்புலி செய்யும் முயற்சியையும் ஔவையார் பாடுகிறார். கொடுமை மிக்க புலிக் குடும்பமே ஆயினும், அவற்றிற்கு இடையே அன்பு நிலவுவதை அழகுற விளக்குகிறார். உயிர்வாழ்க்கையின் அடிப்படை அன்பே என்னும் உண்மையையும், பிற உயிர்களுக்குக் கொடுமை செய்தே வாழும் இயல்புள்ள விலங்குகளும் துணையிடத்தும் தம் குட்டிகளிடத்தும் அன்புடன் வாழ்கின்றன என்னும் கருத்தையும் விளக்குகிறார்.

ஒரு புலி முடக்கான இடத்திலே பெரிய கல்லின் பிளப்பான குகையிலே மூன்று குட்டிகளை ஈன்றது. அந்தக்

*அக. 27, மதுரைக் கணக்காயனார்.

கொடுவரி - வளைந்த வரிகள். இரு - பெரிய. தயங்க - விளங்க. வரை - மலை. வெதிர் - மூங்கில். கோடை - மேல்காற்று.

குட்டிகள், வேங்கைமரத்தின் மணமுள்ள மலர்களோடு உள்ள தழையைத் தனித்தனியே வகுத்தாற்போல் தோன்று கின்றன. மூடிய தசை நீங்காத வளைந்த நகங்களை உடையவை அந்தக் குட்டிகள். தாய்ப்புலி ஓய்ந்து மிக்க பசியுற்றுக் கிடக்கின்றது. அதை அறிந்த ஆண்புலி இரை தேடிக் கொண்டுவர வேண்டும் என்று முனைகின்றது. எங்காவது ஆண்மானின் குரல் கேட்கின்றதா என்று அது உற்றுக்கேட்கின்றது.

வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன
ஊன்பொதி அவிழாக் கோட்டுகிர்க் குருளை
மூன்றுஉடன் ஈன்ற முடங்கர் நிழத்த
துறுகல் விடர்அளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்
பொறிகிளர் உழுவைப் போழ்வாய் ஏற்றை
அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்......

புலவர்களின் மனம் இத்தகைய அன்புவாழ்க்கையை எடுத்துக்காட்டுவதோடு அமைவதில்லை ; இந்த அன்புவாழ்க்கைக்குத் துணைபுரிய விரைகின்றது. இரை தேடும் ஆண் புலிக்கு இருளிலும் கண் தெரியும் என்னும் உண்மை ஒரு புறம் இருக்க ; புலவர் தம் உள்ளம் கொண்டு அதன் வாழ்வை உணர்வதால், இருளில் இரைதேடும் புலிக்கு ஒளி

*அக. 147, ஔவையார்.

வெறி - மணம். வகுத்தன்ன - பிரித்துவைத்தாற் போன்ற. ஊன் - தசை. பொதி - மூடியது. அவிழா - நீங்காத. கோட்டு உகிர் - வளைந்த நகம். குருளை - குட்டி. முடங்கர் - முடக்கு. நிழத்த - களைத்த, ஓய்ந்த. அளை - குகை. பிணவு - பெண்புலி. கூர்ந்தென - மிகுந்ததால். பொறிகிளர் - புள்ளி விளங்கும். உழுவை-புலி. போழ் - பிளந்த. ஏற்றை - ஆண் (புலி). கோடு - கொம்பு.

தரும் விளக்காகப் பாம்பின் மணியைப் படைத்துப் பாடுகிறார். அந்த மணிவிளக்கின் ஒளியில் தன் அருமைத் துணையின் பசியைத் தீர்க்க இரைதேடி இழுத்துச்செல்லும் காட்சியைப் பாடுகிறார். புலவரின் கற்பனையுள்ளம் புலியிடத்தும் அன்பு செய்து அதன் வாழ்வையும் வளம்படுத்த முயல்கிறது ; புலிக்கும் விளக்கேற்றி ஒளிதர முயல்கிறது.

பெண்புலி கருவுற்று இரண்டு உயிர் உடையதாய் இருக்கிறது. அதன் பசியைத் தீர்ப்பதற்காக ஆண்புலி வெளியே சென்று பெரிய யானையைத் தாக்கிக் கொல்கிறது. அப்போது, பாம்பு தன் மணியை ஓர் இடத்தில் உமிழ்ந்து விட்டு இரை தேடுகின்றது. அந்த மணியின் ஒளியே இருண்ட மலைவழியை விளக்கிக்காட்டுகிறது. அந்த ஒளியில், கொன்ற யானையை இழுத்துச்செல்கின்றது புலி.

*ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய*
*இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை*
*நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த*
*மேய்மணி விளக்கின் புலர ஈர்க்கும்..*

## புற்றைக் கிளறும் கரடி

சங்கப் பாட்டுக்களில் பலமுறை வரும் குறிஞ்சிநில ஓவியங்களில் ஒன்று, நள்ளிரவில் கரடி புற்றைக் கிளறும் காட்சியாகும். புற்றின் தோற்றம், அதைச் சுற்றிய மின்

*அக. 72, எருமை வெளியனார் மகனார் கடலனார்.

ஈர் உயிர் - இரண்டு உயிர். பிணவு - பெண்புலி. வயவு - கருவுற்ற காலத்து வேட்கை. களைஇய - தீர்க்க. அட்ட - கொன்ற. உழுவை - புலி. நாம - அச்சம் உள்ள. நல் அரா - நல்ல பாம்பு. புலர - இரத்தம் தோய்ந்து புலருமாறு.

மினிப் பூச்சிகளின் ஒளி, காடியின் கருநிற வடிவம், அதன் நீண்ட கை, அதன் பெருமூச்சு முதலியவை புலவர்க்குக் கொல்லனுடைய உலைக்களத்தை நினைவூட்டுகின்றன.

காடி புற்றுஞ்சோற்றை நாடி வரும் நேரம் நள்ளிரவு. எங்கும் இருள் பரவியிருக்கின்றது. அந்த இருளைக் கிழித்திடுவது போல் மேகம் மின்னுகின்றது. மின்மினிப் பூச்சிகள் புற்றைச் சுற்றி மொய்க்கின்றன. அந்தக் காட்சி உலைக்களக் காட்சி போல் உள்ளது. உலைக்களத்தில் இரும்பைக் காய்ச்சி அடிக்கும்போது பிதிர்கள் சிதறும்; ஒளியும் வீசும். அந்தப் பிதிர்களைப் போலவே மின்மினிப் பூச்சிகள் தோன்றுகின்றன. உலைக்களத்தில் இருந்து வேலை செய்யும் கொல்லனைப் போல் தோன்றுகிறது காடி.

> இருள்கிழிப் பதுபோல் மின்னி வானம்
> துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்
> மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்
> பொன்னெறி பிதிரின் சுடர வாங்கிக்
> குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை
> இரும்புசெய் கொல்எனத் தோன்றும்......

காடி விடியற்காலத்தில் எழுந்து உலாவுகின்றது. எழுந்து இரைதேடிச் செல்கின்றது. இரையைக் கொள்வதில் வல்ல காடி அது. உயர்ந்த கிளைகளை உடைய இருப்பை (இலுப்பை) மரத்தினருகே சென்று, இருப்பைப் பழங்களைத் தின்கின்றது. வெறுக்குமளவுக்குத் தின்ற பிறகு, அங்கிருந்து புறப்பட்டு, கறையான் கட்டிய புற்றை நாடிச் செல்கின்றது.

---

*அக. 72, எருமை வெளியனார் மகனார் கடலனார்.
நளி - மிக்க. முரவு வாய் - முரிந்த வாய்.

அதன் உயர்ந்த உச்சியைப் பெயர்த்துப் புற்றுஞ்சோறுகிய இரையைத் தேடித் தின்கின்றது. புற்றின் உச்சியைப் பெயர்த்திடும்போது, அந்தத் தோற்றம் உலைக்களத்தில் ஊதும் துருத்தி போல் இருக்கிறது.

நாள்உலா எழுந்த கோள்வல் உளியம்
ஓங்குசினை இருப்பைத் தீம்பழம் முனையின்
புல்லளைப் புற்றின் பல்கிளைச் சிதலை
ஒருங்குமுயன் றெடுத்த நனைவாய் நெடுங்கோடு
இரும்புஊது குருகின் இடந்துஇரை தேரும்......*

(காடியின் பெருமிதத்தை உணர்த்தவே, உலா எழுந்ததாகக் குறிப்பிடுகின்றார் புலவர்.)

புற்றில் ஈயல்கள் (ஈசல்கள்) நிறைந்திருக்கின்றன. புற்றின் மேற்புறம் ஈரமாக இருக்கின்றது. அதில் உள்ள புற்றுஞ்சோறு காடிக்கு விருப்பமான உணவு. பெரிய கையை உடைய ஆண்காடி நள்ளிரவில் புற்றுஞ்சோற்றை நாடிக் கையை உள்ளே விட்டுத் தேடுகின்றது. காடியின் நகம் புற்றுஞ்சோற்றைப் பற்றுவதற்கு முன்னே புற்றினுள் இருந்த பாம்பைப் பற்றிக்கொள்கிறது. அந்த நகம் பட்டதும் பாம்பு தன் வலிமை அழிந்து வருந்துகிறது.

ஈயல் புற்றத்து ஈர்ம்புறத்து இறுத்த
குரும்பி வல்சிப் பெருங்கை ஏற்றை

---

*அக. 81, ஆலம்பேரி சாத்தனார்.

கோள் - (இரை) கொள்ளுதல். வல் - வல்ல. உளியம் - காடி. தீம்பழம் - இனிப்பான பழம். முனையின் - வெறுத்தால். புல் அளை - சிறு வளைகள். சிதலை - கறையான். நனைவாய் - நனைந்த வாய்ப்புறம் உடைய. கோடு - உச்சி. குருகின் - துருத்தி போல். இடந்து - பெயர்த்து (பேர்த்து).

*தூங்குதோல் துதிய வள்ளுகிர் கதுவலின்*
*பாம்புமதன் அழியும் பானாட் கங்குல்......**

புற்றாஞ்சோற்றைத் தேடிச்செல்லும் கரடியின் நகத்தில் கொடிய பாம்பு அகப்பட்டு வருந்தும் காட்சி, கருத்து அமைந்ததாக உள்ளது. தனக்கு உரிமை இல்லாத இடத்தில் வலிந்து புகுந்து எளிய உயிர்களை வருத்தும் பாம்பு, எதிர் பாராமல் அகப்பட்டுத் தன்னினும் வலிய மற்றொன்றால் அழிதல், இயற்கையின் ஆட்சி முறை போலும் !

## கரடிக் கூட்டம்

நள்ளிரவில் புற்றாஞ்சோற்றைக் கிளறி உண்டு திரியும் கரடி, பகலில் இருப்பை (இலுப்பைப்) பூக்களையும் கொன்றைப் பழங்களையும் தேடித் தின்பதாகவும் கூறப்பட்டுள்ளது. பகலில் இவ்வாறு உணவு நாடி வரும் கரடிகளைத் துரத்த மக்கள் அம்பும் வில்லும் கொண்டு விரைந்து வருதல் பழங்கால வழக்கம்.

பாலை வழியில் இருப்பை (இலுப்பை) மரங்கள் பூத்திருக்கின்றன. அந்தப் புதுமலர்கள் ஆர்க்குக் கழன்று உதிர்ந்திருக்கின்றன. கரடிகள் அங்கு வந்து அவற்றைத் தின்கின்றன. அந்த வாயோடு, நிலத்தின் தூசு பரக்கச் சென்று, கொன்றைமரங்களின் கிளைகளில் பழுத்துள்ள

---

*அக. 8, பெருங்குன்றூர் கிழார்.

இறுத்த - தங்கிய. குரும்பி - புற்றாஞ்சோறு. வல்சி - உணவு. ஏற்றை - ஆண்கரடி. தூங்கு - தொங்குகிற. துதிய - பொருந்திய. உகிர் - நகம்.

குழல் போன்ற பழங்களைக் கொழுதித் தின்கின்றன. பிறகு வலிய கையை உடைய அந்தக் கரடிகள் கூட்டமாய்ப் பரவிச் செல்கின்றன.

அத்த இருப்பை ஆர்கழல் புதுப்பூத்
துய்த்த வாய துகள்நிலம் பரக்கக்
கொன்றை அஞ்சினைக் குழல்பழம் கொழுதி
வன்கை எண்கின் வயநிரை பரக்கும்......*

கரடிகள் இருப்பைப் பழம் உண்ணும்போதும், கீழே தரையில் கிடப்பவற்றை உண்ணாமல், மேல் கிளைகளில் பழம்போல் சாறு உள்ள (துளையுடைய) இனிய பூக்களை உண்ண விரும்பி, கருநிறக் கொம்புகளை உடைய இருப்பை மரத்தின்மேல் ஏறும். மலைநாட்டுச் சிற்றூரில் மருண்ட மக்கள் பலர் கரடியின் ஓசையைக் கேட்டு, அம்புகளைத் திருத்திக்கொண்டு, வலிய வில்லைத் தோளில் கொண்டு எங்கும் தேடிச் செல்வதால், கரடிகள் கீழே உள்ள உணவுகளை உண்ண முடியாமல் போகின்றன.

மால்வரைச் சீறூர் மருள்பன் மாக்கள்
கோள்வல் ஏற்றை ஓசை ஓர்மார்
திருத்திக் கொண்ட அம்பினர் நோன்சிலை
எருத்தத்து இரீஇ இடந்தொறும் படர்தலின்
கீழ்ப்படு தாரம் உண்ணா மேற்சினைப்

*அக. 15. மாமூலனார்.

அத்தம் - பாலைவழி. ஆர் - ஆர்க்கு. கழல் - கழன்ற. துய்த்த - தின்ற. துகள் - தூள், தூசு. கொழுதி - கோதி. எண்கு - கரடி. வய நிரை - வலிய கூட்டம்.

பழம்போல் சேற்ற தீம்புழல் உணீஇய
கருங்கோட்டு இருப்பை ஊரும்......*

## பன்றியும் பல்லியும்

காட்டுப்பன்றி பாடல் பெற்ற விலங்குகளில் ஒன்று. பன்றி தினைப்புனத்தை நாடிச் சென்று தினையை மேய்தலும், தினைப்புனக் காவலர்க்கு அஞ்சி அஞ்சிச் செல்லுதலும், வேட்டுவரையும் அஞ்சாமல் எதிர்த்தலும் புலவரால் எடுத்துக் கூறப்படுகின்றன.

பல்லி சொல்வதைக் கேட்டு வருவன அறிந்து இன்புறுதலும் துன்புறுதலும் மாந்தர் வழக்கம். இதனைப் பன்றிக்கு உள்ளதாக ஏற்றிச் சொல்கிறார் புலவர் ஒருவர். தினைப்புனத்திற்குள் நுழைய இருக்கும் பன்றியின் செவியில் பல்லியின் ஓசை விழுகிறதாம். காவலர்க்கு அஞ்சி மெல்லச் சென்று கொண்டிருக்கும் பன்றி இந்தச் சிறு ஓசையைக் கேட்டதும் நின்று தயங்கிச் செல்கிறது என்பதே கருத்து. ஆயினும், ஒரு கடமையைத் தொடங்குவோர், பல்லி சொல்வதைக் கேட்டுப் பலன் அறிந்து பிறகு செய்தல் போல் பன்றியும் (சகுனம் அறிந்து) செய்வதாகக் கற்பனைச் சுவைபடப் பாடியுள்ளார்.

பழைய மேட்டு நிலத்தில் விதைத்த தினை செழித்து வளர்ந்திருக்கின்றது. கதிர்கள் உயர்ந்து வளைந்து பெரியனவாக உள்ளன. அவற்றை உண்பதற்காக இளமையான

*அக. 171, கல்லாடனார்.

ஏற்றை - ஆண்கரடி. ஓர்மார் - உணர்பவராய். நோன்சிலை - வலிய வில். எருத்தம் - கழுத்து, தோள். தாரம் - உணவுப்பொருள். புழல் - துளை. உணீஇய - உண்ண. கோடு - கொம்பு.

காட்டுப்பன்றி வருகின்றது. நெருங்கிவரும்போது, பல்லி ஒலிக்கின்றது. பன்றி அந்த ஒலியைக் கேட்டு எண்ணித் தயங்குகிறது. பிறகு மெல்ல வந்து தினையை நெருங்குகிறது.

*முதைச்சுவல் கலித்த மூரிச் செந்தினை*
*ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்*
*பகுவாய்ப் பல்லிப் பாடோர்த்துக் குறுகும்*
*புருவைப் பன்றி......**

## பன்றியின் வீரம்

காட்டுப்பன்றி அஞ்சாமை மிகுந்தது; சுற்றத்தை ஓம்புவதிலும் வல்லது; உயிரைப் பொருட்படுத்தாமல் வேட்டுவரை எதிர்க்கும் திறன் உடையது. இவற்றை விளக்கும் வகையில் ஒரு நிகழ்ச்சியை எடுத்துரைக்கிறார் கபிலர்.

ஒரு காட்டுப்பன்றி தன் துணையோடும் குட்டிகளோடும் இனத்தோடும் காட்டில் திரிந்துகொண்டிருக்கிறது. வேட்டையாடி வந்த வேட்டுவர்கள் அவற்றைக் கண்டதும், வேட்டைநாயை ஏவுகின்றனர். தலைமைப் பன்றி அந்த நாயைத் தாக்கித் துரத்துகிறது; தன் குட்டிகள் சிதறுண்டு போய் இரையாகாதபடி தழுவிக் காத்துக்கொள்கிறது. உடனே வேட்டுவர் நெருங்கிவருவதை அறிந்து அவர்களையும் எதிர்த்துத் தடுத்து, தன் துணையான பெண்பன்றி இனத்

*அக. 88, ஈழத்துப் பூதன்தேவனார்.

முதை - முற்றிய, பழைய. சுவல் - மேடு. கலித்த - செழித்த. வணர் - வளைந்த. பாங்கர் - பக்கம். பாடு - ஒலி. பகுவாய் - பிளந்தாற் போன்ற வாயை உடைய,

தோடு அங்கிருந்து தப்பித்துப் போகுமாறு செய்கிறது. பிறகு காட்டைவிட்டு வெளியே வந்து, இடுக்கான அரிய வழியில் நின்று வேட்டையாட்களை நோக்கிக்கொண்டிருக்கிறது. வேட்டைக்கு வந்த தலைவன் அதன் அஞ்சாமையையும் வீரத்தையும் கண்டு வியக்கின்றான்; அம்பு எய்யாமலே திரும்புகின்றான்.

*வய நாய் எறிந்து வன்பறழ் தழீஇ*
*இளையர் எய்துதல் மடக்கிக் கிளையொடு*
*நால்முலைப் பிணவல் சொலியக் கான்ஒழிந்து*
*அரும்புழை முடுக்கர் ஆள்குறித்து நின்ற*
*தறுகண் பன்றி நோக்கிக் கானவன்...*
*எய்யாது பெயரும்......**

பன்றியின் அஞ்சாமையை விளக்கும் புலவர், அதன் அறிவையும் திறனையும் போற்றியுரைக்கிறார். கிளையும் துணையும் இடையூறு இல்லாமல் வாழ வழிசெய்துவிட்டுப் போர் தொடங்கும் வேந்தரின் இயல்பைப் பன்றியினிடம் காட்டுகிறார். இடம் அறிந்து போர் செய்தால் வெற்றிபெறல் எளிதாகும் என்பதையும் தனக்கு உரிய இடத்தில் நின்றால் எதிரியின் பெரும்படையையும் தோல்வியுறச் செய்யலாம் என்பதையும் அறிந்து பன்றி இடுக்கான இடத்திற்குச் சென்று கானவனை எதிர்பார்ப்பதாகக் கூறுகிறார். இதன்

---

*அக. 248, கபிலர்.

வய - வலிமை. பறழ் - குட்டி. இளையர் - வேட்டையாட்கள். நால் - தொங்கும். பிணவல் - பெண்பன்றி. சொலிய - நீங்கிவிட. புழை - வாயில். தறுகண் - அஞ்சாமை. எய்யாது - அம்பு எய்யாமல். பெயரும் - திரும்பும்.

அஞ்சாமையையும் திறனையும் தாம் போற்றுவதோடு, வேட்டையாடி வரும் கானவனும் கண்டு வியந்து போற்று மாறு செய்கிறார். வீரத்தை மதிப்பதே வீரனுக்கு அழகு ஆதலின், பன்றியின் வீரத்தை மதித்துக் கானவன் வாளா திரும்பிச் செல்வதாகவும் கூறுகிறார்.

## அதன் வளமான வாழ்வு

குறிஞ்சியின் குன்று வளத்தைச் சிறப்பிப்பதற்குப் பன்றியின் வாழ்வை நிலைக்களனாகக்கொண்டு பரணர் ஒரு சொல்லோவியம் தீட்டுகிறார். ஆடம்பரம் மிக்க செல்வ வாழ்வு உடையதாகப் பன்றியைப் புனைகிறார். அதன் கொம்பு கள் வைரத்தைப் போன்றவை என்று தொடங்கி, அதற்குப் பருகச் சுனைநீரும், தின்னச் சேப்பங்கிழங்கும், விளையாடப் பெரியதொரு பாறையும், உடம்பின்மேல் படிய மலர்த் தாதும், உணவாகத் தினைக்கதிரும் கிடைக்கச்செய்கிறார். இத்தகைய செல்வ நுகர்ச்சியின் பயனாக இனிய உறக்கமும் பெறச்செய்கிறார்.

காட்டுப்பன்றி அது. அதன் கொம்புகள் வயிரம் போல் உறுதியாக உள்ளன. அந்தக் கொம்புகள் கூர்மையாகவும் மேலேந்தியும் உள்ளன. பன்றியின் உடம்பின்மேல் மூங்கில் வேர் போல் பருத்த மயிர் காணப்படுகின்றது. பறையின் கண் போன்ற நீர் நிறைந்த சுனையை நோக்கி அது செல் கின்றது. சுனைநீரை முன்னே குடிக்கின்றது. பிறகு நீலமணிபோன்ற நிறமுள்ள அகன்ற இலைகளை உடைய சேம்பின் கொழுமையான கிழங்குகளைத் தின்கின்றது. பெண்யானை படுத்துக் கிடப்பது போல் தோன்றும் ஒரு பாறையின்மேல் முறையாக இறங்கிவருகின்றது. ஆற்றை

அடுத்தாற்போல் தோன்றும் நீர் ஊறும் இடத்தில் அமைந்த தூறுகிய பசிய புதரில் வெண்ணிற நாரை இருந்தாற் போன்ற வெண்மையான கூதளஞ் செடியின் மலர்கள் மேலே உராய்வதால், அவற்றின் தாது (மலர்ப்பொடி) அதன் மேல் உதிர்கின்றது. மலர்ப்பொடி படிந்த அதன் கருநிற உடம்பு, பொன் உரைத்துப் பார்த்த உரைகல் போல் அழகாகத் தோன்றுகிறது. பிறகு அந்தப் பன்றி நெருங்கி வளர்ந்த தினையின் கதிர்களை மேய்ந்து, இனிது உறங்கு கின்றது.

வயிரத் தன்ன வைஏந்து மருப்பின்
வெதிர்வேர் அன்ன பரூஉமயிர்ப் பன்றி
பறைக்கண் அன்ன நிறைச்சுனை பருகி
நீலத் தன்ன அகல்இலைச் சேம்பின்
பிண்டம் அன்ன கொழுங்கிழங்கு மாந்திப்
பிடிமடிந் தன்ன கல்மிசை ஊழ்இழிபு
யாறுசேர்ந் தன்ன ஊறுநீர்ப் படாஅர்ப்
பைம்புதல் நளிசினைக் குருகுஇருந் தன்ன
வண்பிணி அவிழ்ந்த வெண்கூ தாளத்து
அலங்குகுலை அலரி தீண்டித் தாதுஉகப்
பொன்உரை கட்டளை கடுப்பக் காண்வரக்
கிளைஅமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து
கண் இனிது படுக்கும்......*

---

*அக. 178, பரணர்.

வை - கூரிய. மருப்பு - கொம்பு. வெதிர் - மூங்கில். பிண்டம் - பிடித்துவைத்தது. மாந்தி - தின்று. படாஅர் - தூறு. நளிசினை - செறிந்த கிளைகள். குருகு - நாரை. வண்பிணி - வளமான அரும்பு. அவிழ்ந்த - மலர்ந்த. அலரி - பூ. கட்டளை - உரைகல். கடுப்ப - போல. காண்வர - காட்சிபெற. அமல் - நெருங்கிய.

## வண்டுகளின் இன்பக் கனவு

மலைவளத்தை விளக்குவதற்கு மற்றொரு புலவர் வண்டுகளின் வாழ்க்கையை நிலைக்களனாகக் கொள்கிறார். சுனைப் பூக்களில் தொடங்கி, மரத்தில் மலர்ந்த மலர்களில் உணவு பெற்று, செடிகளில் பூத்த பூக்களில் உறங்கி, அஞ்சாமை மிகுந்த பெரிய விலங்காகிய யானையின் மதநீரை நுகர்வது பற்றிக் கனவு காண்கின்றனவாம். உணவைத் தேடி அலையும் வறிய வாழ்க்கை இந்த வண்டுகளுக்கு இல்லை. ஆயின் அந்தந்த வேளைக்கு அங்கங்கே உள்ளவற்றிலேயே நிரம்ப உணவு கிடைக்கும் வளமான வாழ்க்கை உள்ளது. அவை கனவு காணத் தொடங்கினாலும், சிறுமையான—வறுமையான—பொருள் பற்றிய கனவு இல்லை; வளம் மிகுந்த வாழ்வு பற்றிய கனவே உள்ளது. வறியவன் வளமான கனவு காணல் அரிது; வளம் நுகர்வோன் மட்டுமே வளமான வாழ்வைக் கனவிலும் காண முடியும்.

மழை பெய்த மலைச்சாரலில் உள்ள பெரிய சுனையில் குவிந்த அரும்புகளின் அருகே சென்று ஊதி வண்டுகள் அவற்றை மலரச்செய்கின்றன. பிறகு வேங்கைமரத்தில் விரிந்த பூங்கொத்துக்களில் ஊதித் தேன் நுகர்கின்றன. அடுத்தாற்போல் தேன் பொருந்திய காந்தளின் குவிந்த பூக் குலையில் உறங்குகின்றன. அங்கே உறங்கும்போது, யானையின் கன்னத்தில் ஒழுகும் மதநீரை நுகர்வதாகக் கனவு காண்கின்றன.

துளிதலைத் தலைஇய சாரல் நளிசுனைக்
கூம்புமுகை அவிழ்த்த குறுஞ்சிறைப் பறவை
வேங்கை விரிஇணர் ஊதிக் காந்தள்

தேன் உடைக் குவிகுலைத் துஞ்சி யானை
இருங்கவுள் கடாஅம் கனவும்.....

## காட்டுப்பூனைக் குடும்பம்

'நில்லாதவற்றை நிலையின என்று உணர்தல் புல்லறிவாண்மை'; ஆனால், நில்லாதவற்றை நிலையின என்று படைத்துத் தருவது கலை. என்றோ ஒருநாள் ஒருவேளை ஓர் இடத்தில் கண்ட அழகிய காட்சியை என்றும் எங்கும் வாழும் வகையில் சொல்லோவியமாக்கித் தருவது புலவர் திறன். அவ்வாறு செய்யாவிடின், அந்த அழகு நொடிப் பொழுது நின்று மறைந்து பிறர்க்கு உணர்த்த முடியாததாய் அழிந்துவிடும். அழியும் அழகை அழியா அழகு ஆக்கித் தாமும் நுகர்ந்து பிறரும் நுகரும் வகையில் புலவர்களின் சொல்லோவியம் விருந்து நல்குகின்றது.

ஒரு குடிலின் அருகே காட்டுப்பூனை ஒன்று அழகிய சிறு சிறு குட்டிகள் சூழப் படுத்திருக்கும் காட்சியைப் புலவர் காண்கிறார். ஓவியம் போல் விளங்கும் தாயைச் சூழ்ந்துள்ள இளங்குட்டிகளின் அழகிய காட்சியைச் சொற்களால் வடித்துத் தருகிறார். அந்தக் காட்சி நம் உள்ளத்தில் பதியும் வகையில், அனைவரும் அறிந்த வானத்துக் காட்சி ஒன்றைக் கொண்டு விளக்குகிறார்.

மலைநாட்டுச் சிற்றூரில் மறவர் வாழும் குடில் ஒன்று உள்ளது. முள்வேலியாக அமைந்துள்ளது. முற்றத்தில் புலால் நாறுகின்றது. மெலிந்து நீளமாக உள்ள பெண்பூனை

---

*அக. 132, தாயங்கண்ணனார்.

நளி - பெரிய. சிறை - சிறகு. துஞ்சி - உறங்கி. இரு - பெரிய. கவுள் - கன்னம். கடாஅம் - மதநீர்.

ஒன்று அங்கே எழுதிய ஓவியம்போல் அழகாக உள்ளது. அதைச் சுற்றிப் பூனைப் பூவைப் போன்ற மிக்க மயிரினை உடைய குட்டிகள் உள்ளன. அவை, மதியைச் சூழ்ந்துள்ள விண்மீன்கள் போல் தாயை விடாமல் சூழ்ந்துள்ளன.

ஈர்முள் வேலிப் புலவுநாறு முன்றில்
எழுதி அன்ன கொடிபடு வெருகின்
பூனை அன்ன பொங்குமயிர்ப் பிள்ளை
மதிசூழ் மீனின் தாய்வழிப் படூஉம்......*

## குரங்குக் கலைஞன்

குரங்கும் பலாப்பழமும் இணைத்துப் பாடப்படுகின்றன. பலாப்பழம், குரங்கு விரும்பும் இனிய உணவு. அதைத் தேடிப் பெறும் ஆண்குரங்கு, தன்னோடு சேர்ந்து உண்பதற்காகத் தன் துணையை அழைக்கிறது. இதைக் காணும் புலவரின் கலைமனம், அதன் எதிரே ஆடிவரும் மயிலைக் கண்டு மகிழ்கிறது. குரங்கின் கைக்குள் தழுவப்பட்டு நிற்கும் பலாப்பழம் முழவாக, குரங்கு முழவனாக, மயில் விறலியாகக் காட்சி அளிக்கின்றது.

வளர்ந்த பலாமரத்தில் குடம்போன்ற பெரிய பழம் ஒன்று பழுத்திருக்கிறது. குரங்குக் கூட்டத்திற்குத் தலைவனான ஆண்குரங்கு ஒன்று அதைத் தழுவிக்கொண்டுள்ளது. ஒலி செய்யும் அருவி விழும் பாறையின் பக்கமாக ஆடும் மயில் ஒன்று அதற்குமுன்னே செல்கின்றது. கூத்தர் திருவிழாக் கொண்ட ஊரில் விறலியின் பின்னே முழவு

---

*அக. 297, மதுரை மருதனிள நாகனார்.

ஈர் - ஈர்க்கின்ற, அறுக்கின்ற. முன்றில் - முற்றம். கொடி - நீளுதல். வெருகு - பூனை. மீனின் - விண்மீன்போல்.

இசைப்பவன் செல்லுதல்போல் தோன்றுகிறது அந்தக் குரங்கின் காட்சி. அது அவ்வாறு பலாப்பழத்தைத் தழுவிக் கொண்டே, உடன் உண்பதற்காகத் தன் துணையான பெண் குரங்கைக் கூவி அழைக்கின்றது.

முடவுமுதிர் பலவின் குடம்மருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடிமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்னை தாகக் கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ
இன்துணைப் பயிரும்......*

## பலாப்பழத் தெப்பம்

குரங்குக்கு உணவாகப் பயன்படும் பலாப்பழத்தைத் தெப்பமாகப் பயன்படுத்திக் காட்டுகிறது மற்றொரு பாட்டு. மரங்களை ஒவ்வொன்றாகத் தாவிச்செல்லும் குரங்குக்கு அத் தொழிலில் சலிப்பு ஏற்பட்டது போலும்! மலையிலிருந்து விழும் அருவிநீர் ஓடி அப்பால் செல்வதைக் கண்ட குரங்கு, அந்த நீரைப் போல் தானும் ஓடிச் செல்ல விழைந்தது போலும்! அருவிநீரில் விழுந்து மிதந்து செல்லும் பலாப் பழம் ஒன்றை அது காண்கிறதாம். கண்டதும், அந்தப் பழம் செல்வதுபோல் தானும் சென்று ஊர்க்குள் சேர எண்ணு கிறதாம். அந்தப் பழத்தின் துணையையே நாடுகிறதாம்.

---

*அக. 352, அஞ்சியத்தை மகள் நாகையார்.

முடவு - வளைவு. முதிர் - மிக்க. மருள் - போன்ற. மருங்கின் - பக்கத்தே. பாடு - ஒலி. இமிழ் - ஒலிக்கும். கோடியர் - கூத்தர். மூதூர் - பழைய ஊர். பின்றை - பின்னே. முழவன் - முழவு இசைப்பவன்; பயிரும் - அழைக்கும்.

அதன் மேல் பாய்ந்து, அதையே தெப்பமாகக் கொண்டு மிதந்து செல்லும் காட்சியைக் காட்டுகிறார் புலவர்.

பலாப்பழம் ஒன்று அருவியிலே மிதந்து செல்கின்றது. அருவியின் கரையிலே உள்ள பெண்குரங்கு அருவியைக் கடந்துசெல்ல விரும்பி, அருவியிலே பாய்ந்து பாலப் பழத்தையே தெப்பம்போல் கொண்டு செல்கின்றது. அருவி மலைச்சாரலில் உள்ள ஓர் ஊர்ப்பக்கமாகச் சென்று விழுகின்றது. அந்த ஊரின் துறைக்குச் சென்றதும் குரங்கு, பலாப் பழத்தை விட்டு இறங்கிச் செல்கின்றது.

அருவி பாய்ந்த கருவிரல் மந்தி
செழுங்கோள் பலவின் பழம்புணை யாகச்
சாரல் பேரூர் முன்துறை இழிதரும்......*

## மயிலின் மகிழ்ச்சி

உண்பதும் உறங்குவதும் மட்டும் வாழ்க்கை அல்ல ; உண்பதும் விளையாடி மகிழ்வதும் மகிழ்ந்து உறங்குவதுமே வாழ்க்கை என்பதைப் பறவை விலங்குகளின் வாயிலாகப் புலவர் சிலர் விளக்கியுள்ளனர். மக்களின் வாழ்வில் முயன்று பெறவேண்டிய இந்த நிலை விலங்குகளின் வாழ்வில் இயல்பாக அமைந்திருப்பதாக அவர்கள் காட்டியுள்ளனர்.

வயிறார வரகின் கதிர்களைத் தின்ற மயில் மரம் ஏறி உறங்காமல், தோகை பரப்பி ஆடுவதுடன் மகளிர்போல் கூவி அகவுவதாகப் பாடப்பட்டுள்ளது.

---

*அக. 382, கபிலர்.

மந்தி - பெண் குரங்கு. கோள் - காய்கொள்ளுதலை உடைய. புணை - தெப்பம். இழிதரும் - இறங்கிவிழும்.

பெரிய புனத்தில் விளைந்த வரகின் கதிரினைப் பற்றி உண்கின்றது மயில். குடுமி பொருந்திய தலையுடன் நீண்ட தோற்றத்துடன் நீலநிறமாய் விளங்கும் அந்த மயில், அழகிய தோகையைப் பரப்பி ஆடுகின்றது. பிறகு, உழவர்கள் கூழ் உண்பதற்கு நிழல் தருமாறு வெட்டாமல் விட்டுவைத்த குருந்தமரத்தின் வளைந்த கிளைமீது ஏறியிருந்து இன்பமாய் அகவுகின்றது ; புனத்தில் கிளிஓட்டும் மகளிரைப் போல் அகவுகின்றது.

...... பெரும்புன வரகின்
கவைக்கதிர் இரும்புறம் கதூஉ உண்ட
குடுமி நெற்றி நெடுமாத் தோகை
காமர் கலவம் பரப்பி ஏமுறக்
கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த
வல்இலைக் குருந்தின் வாங்குசினை இருந்து
கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும்......*

## மயிலின் ஆடல்

கபிலர் வளம் மிக்க பறம்பு மலையில் நெடுங்காலம் வாழ்ந்தவர் ; பறம்பு நாட்டுத் தலைவனை பாரிவள்ளலுடன் தோழமை பூண்டு மகிழ்ந்து வாழ்ந்த அவர், மலையின் இயற்கை யழகை நன்கு கண்டு களித்தார். அவருடைய புலமை யுள்ளம் அந்த அழகை உணர்ந்து உணர்ந்து கற்பனை வண்ணம் தீட்டி எழிலோவியமாகப் படைத்து மகிழ்ந்திருக்கிறது.

---

*அக. 194, இடைக்காடனார்.

கவை - இரண்டாய்ப் பிரிந்து அமைந்த. இரும்புறம்-கரியபுறம். கதூஉ - கதுவி - பற்றி. கலவம் - தோகை. ஏம்உற - இன்பமுற. வல்இலை - வலிய இலையை உடைய. வாங்கு - வளைந்த. விளிபட - ஒலி ஏற்பட.

பாரியின் நாளவையில் (காலைத் திருவோலக்கத்தில்) பாணர் பாட, விறலியர் ஆட, இசையும் கூத்தும் இயைந்து விளங்கின. அந்தக் கலைவிருந்தைப் பலகாலும் பாரியுடன் இருந்து நுகர்ந்தவர் கபிலர். குழல் ஒருபுறம் இசைக்க, முழவு ஒருபுறம் ஒலியெழுப்ப, தூம்பு ஒருபுறம் ஒலிக்க, யாழ் ஒருபுறம் இன்னிசை நல்க, பலவகை இசையமைப்பு உடன்கூடிய நிலையில், புலவர் அமைச்சர் முதலானோர் ஆர்வ முடன் எதிர்நோக்கி யிருக்கும்போது, நடன விருந்து நல்கும் விறலி மெல்ல அடியெடுத்துவைத்து அரங்கில் புகும் காட்சியைக் கபிலர் பலநாளும் கண்டவர். ஒருநாள் மூங்கில் வளர்ந்த மலைச்சாரலில், பலவகை மலர்கள் மலர்ந்து மணம் கமழ வண்டுகள் மொய்த்து ஒலிக்கும் இடத்தில், அருவி இழுமென இழிதரும் பகுதியில் கட்புலனுக்கும் செவிப் புலனுக்கும் ஒருங்கே இன்பம் தரும் இயற்கையின் சிறப்பை உணர்ந்து உள்ளத்தைப் பறிகொடுத்து நின்றார். புலமை யுள்ளம் படைத்த தம்மைப் போலவே, குரங்குகள் சில அங்கு வியப்புடன் இருத்தலையும் கண்டார். அவை மருண்டு மருண்டு ஒருபுறம் நோக்குவதை அறிந்து, தாமும் அத்திசை யில் நோக்கினார். அழகிய மயில் ஒன்று தோகை விரித்தவாறே மெல்ல அசைந்து ஆடிவருவதைக் கண்டார். கண்டதும் அவருடைய கலையுள்ளம், பாரியின் நாளவையில் நடைபெறும் இசையுடன் கூடிய நடன அரங்கை நினைந்து மகிழ்ந்தது. இதை ஓர் அகநானூற்றுப் பாடலில் அழகிய சொல்லோ வியமாக வடித்துத் தந்துள்ளார்.

மூங்கிலில் ஏற்பட்டு விளங்கும் துளையில் மேல்காற்று புகுந்து ஒலி எழுப்ப, அது குழலின் இசைபோல் உள்ளது. அருவியின் குளிர்ந்த நீர் செய்யும் இனிய இசை, தொகுதி

யான முழவின் நெருங்கிய இசையாகின்றது. கூட்டமான கலைமான்கள் தாழ்ந்தொலிக்கும் கடுமையான குரல், தூம்பு என்னும் கருவியின் ஒலியாக உள்ளது. மலர் நிறைந்த மலைச்சாரலில் வண்டுகள் செய்யும் ஒலி, யாழிசையாக உள்ளது. இத்தகைய இனிய பல இசைகளைக் கேட்டு ஆரவாரம் மிகுந்து, குரங்குகளாகிய நல்ல கூட்டம் மருண்டு நோக்குகின்றது. அப்போது, மூங்கில் வளரும் மலைப்பகுதியில் உலாவி ஆடும் மயில், களத்தில் புகுந்து ஆடுவதற்காக வரும் விறலி போல் தோன்றுகின்றது.

ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
கோடை அவ்வளி குழல்இசை யாகப்
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
தோடுஅமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டுயா ழாக
இன்பல் இமிழ்இசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத்து இயலி ஆடுமயில்
நனவுப்புகு விறலியின் தோன்றும்......*

அருவியின் இனிய ஓசை, முழவு ஆகிறது. கலைமானின் குரல், தூம்பு என்னும் கருவியின் இசை ஆகிறது. வண்டின் இனிய ஒலி, யாழிசை ஆகிறது. ஆயின், குழலிசைக்கு

*அக. 82, கபிலர்.

ஆடு அமை - அசையும் மூங்கில். குயின்ற - துளைக்கப்பட்ட. வளி - காற்று. பாடு இன் - ஒலி இனிய. தோடு - தொகுதி. துதை - நெருங்கும். கணம் - கூட்டம். இகுக்கும் - தாழும், தாழ்ந்தொலிக்கும். இமிழ் - ஒலிக்கும். நனவு - களம்.

நிகர் எது? முற்றிய மூங்கில்களில் வண்டுகள் துளைத்து விட்ட துளைகளின் வாயிலாக மேல்காற்றுப் புகுந்து இசைக்கும் இசையே குழலிசை ஆகிறது.

கல்லா மந்தி, கல்லாக் கடுவன் என்று குரங்குகளின் அறியாமையைக் குறை கூறுவது புலவர் மரபு. ஆயின் கபிலர் இங்கு அவற்றின் மருட்சியுடன் ஒன்றுபட்ட உள்ளம் உடையவர் ஆகிறார்; தம் கலையுள்ளத்தின் வியப்பை அவற்றிற்கு ஏற்றிக் கூறத் தொடங்கியவராய், 'மந்திகளாகிய நல்ல அவை' என்று புகழ்கிறார். இத்தகைய இயற்கையிசைவிருந்தைக் கேட்டு நுகரும் திறன் பெற்றுள்ளன ஆகையால் அவை புகழத்தக்கன என்று அவருடைய உள்ளம் போற்றுகிறது. 'இன்பல் இமிழ்இசை கேட்டுக் கலிசிறந்து மந்தி நல்லவை மருள்வன நோக்க' என்னும் பகுதியில் அந்தப் போற்றுதல் அமைந்துள்ளது.

மகளிர்க்கு உவமையாக மயில்களைக்கூறுவது வழக்கம். மயில் போன்ற சாயலுடைய மகளிர் என்று உவமைபாக்குதல் மரபு. இங்குக் கபிலர் மயில் இயலி ஆடிப் புகுந்த காட்சியைக் கண்டு வியந்து புகழ்கிறார்; மயிலின் அழகிய ஆடலையும் சாயலையும் கண்டு வியக்கும் அவர்க்குக் கலையரங்கில் நடிக்கவரும் விறலி நினைவுக்கு வருகிறாள்; மயிலுக்கு அம் மங்கை உவமையாகிறாள்.

## மயிலின் வேட்கை

புலவர்கள் தம் உள்ளத்து உணர்வைக்கொண்டு மற்ற உயிர்களின் உள்ளத்தை அளந்து கூற முயல்வது உண்டு. தம் இன்ப துன்பங்களை மற்ற உயிர்களுக்கு ஏற்றிப் பாடுவது மரபு.

மயில் பாகற்பழத்தைத் தின்பதைக் கண்ட புலவர், மயிலுக்கு அந்த வேட்கை இருப்பதாக ஒரு பாட்டில் புனைந்து கூறுகிறார். சூல்கொண்ட மாதர் சில பொருள்களின்மேல் வேட்கை கொண்டு வருந்துவது இயற்கை. இத்தகைய வேட்கை மயிலுக்கு இருப்பதாகக் கூறுகிறார். ஆற்றங்கரையில் பாகற்பழம் பழுத்திருப்பதையும், அந்தக் கரையில் சூல்கொண்ட மயில் ஒன்று அகவுவதையும் அறிந்த புலவர், அந்த மயில் இந்தப் பழத்தை விரும்பியே அகவுவதாக இரக்கத்துடன் கூறுகிறார்.

காட்டில் வாழும் பெண்மயில் ஒன்று நிறைந்த சூல் கொண்ட நிலையில் பாகற்பழத்தைத் தின்னும் வேட்கை கொண்டது. அயிரியாற்றின் அந்தக் கரையில் பாகற்கொடியின் சிவந்த பழம் அதன் கண்ணைக் கவர்கின்றது. அது இந்தக் கரையில் நின்றபடி அந்த வேட்கையைப் புலப்படுத்தி ஒலிகின்றது. அந்த ஒலி, ஊதுகொம்பின் ஒலிபோல் கேட்கின்றது.

> பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇக்
> கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை
> அயிரியாற்று அடைகரை வயிரின் நரலும்......

## குறிஞ்சி வளம்

இயற்கைவளம் நிறைந்தது மலை. மலையில் உணவுப் பொருள்களை உண்டாக்க வேண்டிய முயற்சி மனிதனுக்கு

---

*அக. 177, செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார்.

பைங்கொடி - பச்சைநிறக் கொடி, பசுங்கொடி. நசைஇ - விரும்பி. மஞ்ஞை - மயில். கமம் சூல் - நிறைந்த கர்ப்பம். மா - கருநிறமான. வயிரின் - ஊதுகொம்புபோல்.

இல்லை ; உண்டாகும் பொருள்களை எடுத்துப் பயன்படுத்துவதற்கே அங்கு முயற்சி வேண்டும். விலங்குகளை வேட்டையாடிக் கொல்லவும், கிழங்குகளைத் தோண்டி எடுக்கவும், காய் கனி மலர்களைப் பறிக்கவுமே அங்கு வாழும் மனிதனுக்கு முயற்சி வேண்டும். இவ்வாறு சிறு முயற்சியால் பெரும்பயன் பெறும் வளமான குறிஞ்சிவாழ்க்கை, புலவர்பெருமக்களின் உள்ளத்தைக் கவர்ந்திருக்கிறது. தொல்கபிலர் என்னும் புலவர் ஒரு மலையில் வேட்டை ஆடி வாழும் கானவன் ஒருவனுடைய முயற்சியைப் பற்றிப் பாடியுள்ளார்.

யானைவேட்டைக்குச் சென்றவன் யானையைக் கொன்று அதன் கொம்பை (தந்தத்தைக்) கையால் எடுத்து மகிழ்கிறான். அவ்வளவில் நிற்கவில்லை. யானைக்கொம்பு கூர்மையான முனையுடையது. அதைப் பார்த்ததும் அவனுடைய மனம் அதைக் கருவியாய்ப் பயன்படுத்தி மண்ணைக் கிளற விரும்புகிறது. கருவி ஏந்தியவனுடைய கை வாளா இருக்காது அன்றோ ? அந்த மண்ணில் பொன் இருக்குமா என்று யானைக்கொம்பால் தோண்டிப் பார்க்கிறான். பொன்னை எதிர்பார்த்த கண்ணுக்கு அதனோடு மணியும் ஒளி வீசி வந்து நிற்கிறது. ஆனால் யானைக்கொம்பு ஒடிந்துவிடுகிறது. ஒடிந்த யானைக்கொம்பும் வீண்போகவில்லை. அதனுள்ளிருந்து முத்து வெளிப்படுவதைக் காண்கிறான். யானை வேட்டையைக் கருதிப் போனவன், பொன் மணி முத்து ஆகிய மூன்றையும் பெறுகிறான். மகிழ்ச்சிமிகுதியால் வேங்கை மரத்திலிருந்து மலர்களைப் பறித்துச் சூடிக்கொள்கிறான். யானைக்கொம்பு முதலியவற்றை வீட்டிற்கு எடுத்துச்செல்வதற்காகக் காவடி ஒன்று தேடுகிறான். அதற்கு எந்த மரம் கிடைக்கிறது? அவனுக்கு இப்போது காவடி

யாகப் பயன்படும் மரம் சந்தனமரம். இவ்வாறு கானவன் ஒருவனுடைய அரைநாள்வாழ்க்கையிலிருந்து குறிஞ்சி வளத்தை விளக்குகிறார் புலவர்.

பெரிய மலைப்பகுதியில் கானவன் வேட்டையாடச் செல்கின்றான். செறிந்த மூட்டுவாய் உடைய அம்பினால் யானையைத் தாக்கிக்கொன்று, அதன் கொம்பு கொண்டு, நீர் வளம் மிக்க பகுதியில் பொன்னைத் தோண்டி எடுக்கிறான். அங்கே, கண் பார்வை கெடுமாறு ஒளிவீசும் திண்ணிய மணிகள் மேலே வந்து ஒளிவீசி விளங்குகின்றன. தோண்டும்போது யானைக்கொம்பின் கூரியமுனை ஒடிய அதிலிருந்து ஆலங்கட்டிபோல் முத்துக்கள் உதிர்கின்றன. பொன்னும் மணியும் முத்தும் ஆகிய மூன்றையும் ஒருங்கே கொண்டு, சந்தனமரத் துண்டைக் காவடியாகக் கொண்டு, வேங்கை மலர்களை நறைக்கொடியாகிய நாரால் தொடுத்துத் தலையில் சூடிக்கொண்டு மலையிலிருந்து இறங்கிவருகின்றான்.

> பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய
> செறிமடை அம்பின் வல்வில் கானவன்
> பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு
> நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்
> கண்பொருது இமைக்கும் திண்மணி கிளர்ப்ப
> வைந்நுதி வான்மருப்பு ஒடிய உக்க
> தெண்ணீர் ஆலி கடுக்கும் முத்தமொடு
> மூவேறு தாரமும் ஒருங்குஉடன் கொண்டு
> சாந்தம் பொறைமரம் ஆக நறைநார்
> வேங்கைக் கண்ணியன் இழிதரும்......*

---

*அக. 282, தொல்கபிலர்.

சிலம்பு - மலைப்பகுதி. வேட்டம் - வேட்டை. அகழ்வோன் - தோண்டுவோன். கிளர்ப்ப - மேலே விளங்க. வால் - வெண்மை

## பாம்பின் மணி

நல்லபாம்பு (நாகப்பாம்பு) இன்றுபோலேவே அன்றும் மக்களின் மனத்தை மிகுதியாகக் கவர்ந்திருக்கிறது. அதன் மணி, பாடல்களில் இடம் பெற்றுள்ளது. குறிஞ்சிவளம் பாடும் புலவர்கள், அது உமிழும் மணியையும் அதன் ஒளியையும் இடையிடையே குறிப்பிட்டுச் செல்கின்றனர்.

வழி கெட்டுத் தடுமாறும்படியாகச் செறிந்துள்ள (நெருங்குவதற்கு அரிய) மிக்க இருளிலே நல்லபாம்பு தன் அழகிய மணியை உமிழ்ந்துவைத்து இழந்துவிட்டது. பிறகு இங்கும் அங்கும் தேடுகின்றது. காந்தளின் புதிய மலரை ஊதித் தாது நுகர வந்த வண்டின் நல்ல நிறத்தைக் கண்டு, அதையே தன் மணி என்று மருள்கின்றது.

நெறிகெட வீழ்ந்த துன்னருங் கூர்இருள்
திருமணி உமிழ்ந்த நாகம் காந்தள்
கொழுமடல் புதுப்பூ ஊதும் தும்பி
நன்னிறம் மருளும்......*

பாம்பு இரை தேடிச் செல்லும்போது மணியை உமிழ்ந்துவிட்டுத்தேடும்; அப்போது அதை இழந்துவிட்டால் வாடி வருந்தும்.

---

யான. உக்க - உதிர்ந்த. கடுக்கும் - போன்ற. முத்தம் - முத்து. தாரம் - பண்டம். பொறைமரம் - பாரந்தூக்கும் காவடிமரம். இழிதரும் - இறங்கும்.

*அக. 138, எழுஉப்பன்றி நாகன் குமரனார்.

கெட - தவறிப்போகுமாறு. வீழ்ந்த - செறிந்த. தொழுமடல் - வளமான மடலை உடைய. தும்பி - வண்டு.

மேய்மணி இழந்த பாம்பின் நீநனி
தேம்பினை......*

மலையில் இருண்ட குகை ஒன்று இருக்கிறது. அந்தக் குகை வழியாக அருவி ஓடிவருகின்றது. குகையில் வாழ்ந்த பாம்பு உமிழ்ந்த மணி ஒன்று கிடக்கிறது. அருவி அந்த மணியைத் தன் நீரால் துழவிக் குகையைவிட்டு வெளியே கொண்டுவந்து நீரில் அடித்துச் செல்கின்றது. மலைச்சாரலில் உள்ள ஊரை அடுத்துச் செல்லும்போது அந்த மணி கரையில் தங்கிவிடுகின்றது. நள்ளிரவில் தெருவில் இருள் அகல ஒளிவீசி விளங்குகின்றது அந்த மணி.

...மால்வரை
மைபடு விடரகம் துழைஇ ஒய்யென
அருவி தந்த அரவுஉமிழ் திருமணி
பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக் குறுத்தலின்......†

## அன்பின் குரல்

மழை இல்லாமல் வறட்சியுற்ற மலையும் காடும் பாலை எனப்படும். அத்தகைய பாலையில் மரம் செடி கொடி யாவும் தீய்ந்து காணப்படும்; பறவை விலங்கு யாவும் வாடிக் காணப்படும். வாழ்வுக்குத் தகுதியற்றுப் போன இந்த

---

*அக. 372, பரணர்.

நனி - மிக. தேம்பினை - வாடினாய்.

†அக. 192, பொதும்பில் கிழான் வெண்கண்ணனார்.

மால்வரை - பெரியமலை. மைபடு - இருள்நிறைந்த. விடரகம் - குகை. துழைஇ - துழாவி. ஒய்யென - விரைவாக. சிறுகுடி - மலைமேல் உள்ள ஊர். மறுகு - தெரு.

நிலையிலும் சில பறவை விலங்குகள் அங்கு வாழும். அவற்றின் வாழ்விலும் அன்பு ஒளிவீசி விளங்குகிறது என்று காட்டுவர் புலவர்.

அன்பு இவற்றின் வாழ்விலும் உண்டோ என்று ஐயுறத்தக்கவை பருந்துகள் ; காண்பதற்கு அழகு அற்றவை; மக்கள் இருக்கும் இடத்தில் நெருங்காதவை ; பிணம் முதலிய வற்றைத் தின்று கண்ணுக்கு எட்டாத உயரத்தில் பறந்து கண்காணு இடத்தில் கூடுகட்டி வாழ்பவை.

யா மரம் மிக உயர்ந்து வளரும் மரம். வறண்ட மலைப் பகுதியில் காய்ந்து தீய்ந்த சுற்றுப்புறத்திற்கு இடையே ஒருசில உயர்ந்த கிளைகளோடு விளங்கும் மரம் அது. மக்கள் ஏற விரும்பாத, ஏற முடியாத அந்த மரத்தின் உயர்ந்த கிளைகளில் பருந்துகள் கூடுகட்டி வாழும். இரை தேடுவதற்காக ஆணும் பெண்ணும் காலையில் கூட்டைவிட்டு வெளியே பறந்து செல்லும். நெடுந்தொலைவு பறந்து திரிந்த பின் கூட்டுக்குத் திரும்பும். தனித்தனியே பறந்து திரிந்த காரணத்தால் திரும்பும்போது ஒருங்கே திரும்பிவர முடிவதில்லை. ஆண்பருந்து முன்னே வந்து சேர்ந்துவிடுகிறது. கூட்டில் அமைதியாக இருக்க இயலாமல், பெண்பருந்தை நினைந்து கூவுகிறது. அந்தக் குரல், காதல்துணையை நினைந்து கூவும் அன்புக்குரல் ஆகையால், இனிமை யுள்ளதாகக் கேட்கிறது.

யாமரத்தின் கிளைகளில் தழை இல்லை. மரமோ நெடுக வளர்ந்திருக்கிறது. அதில் ஒரு கிளை ஒன்றுகத் தனித்து ஓங்கி உயர்ந்திருக்கிறது. அதில் இருந்த ஆண்பருந்து ஒலி செய்கின்றது. தன் பேடை தன்னிடம் வருமாறு அது ஒலியால் அழைத்துப் பார்க்கின்றது. அவ்வாறு அழைக்

கும் குரல் இனிய இசைபோல் இருக்கின்றது. வழியில் செல்லும் மக்கள் அதைக் கேட்டு இளி என்னும் பண்ணோ என்று ஆராய்கின்றார்கள்.

> கவைமுறி இழந்த செந்நிலை யாஅத்து
> ஒன்றோங்கு உயர்சினை இருந்த வன்பறை
> வீளைப் பருந்தின் கோள்வல் சேவல்
> வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரும்
> இளிதேர் தீங்குரல் இசைக்கும் அத்தம்......*

## பருந்தின் காதல்நெஞ்சம்

பாலைவனத்தின் வறட்சி போலவே, அங்கு வாழும் மக்களின் மனமும் கொடுமை மிக்கதாய் வறண்டுள்ளது. பிறர்க்குத் தீங்கு இழைக்காமல் உழைத்து உயிர்வாழும் மக்களாய் அவர்கள் வாழ்வதில்லை. வழிப்போக்கரைப் பதைக்கப் பதைக்கக் கொன்று அவர்களின் கைப்பொருளைப் பறிப்பதே வாழ்வாகக் கொண்டு கொடுமையை வளர்க்கின்றனர். அவர்கள் கொன்று குவிக்கும் பிணங்கள் பருந்துகளுக்கு விருந்து ஆகின்றன. கொடுமையின் விளைவாக உள்ள அந்தப் பிணங்களை நாடித் தின்னும்போதும் பருந்துகளின் அன்பு நெஞ்சம் மாறவில்லை. ஆடவன் ஒருவன் தன் காதலி மகிழும் வகையில் இனிய சுவை மிக்க சிற்றுண்டியைத் தேர்ந்து தருதல்போல், ஆண் பருந்து தன் விரல்களால் பிணங்களின் கண்களைத் தோண்டிப் பெண் பருந்தின் வாயில் இடுகின்றது.

---

*அக. 33, மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்.

கவை - கிளை. முறி - தளிர். வன்பறை - வலிமையுடன் பறத்தல். வீளை-பருந்தின் ஒலி. கோள்வல் - இரை கொள்ளுதலில் வல்ல. வருதிறம் - வருமாறு. பயிரும் - அழைக்கும். தேர் - ஆராய்கின்ற.

பாலைவழியில் உள்ள ஆறலைகள்வர்கள் கொடியவர்கள்; குறி தப்பாமல் அம்பு எய்து கொல்ல வல்லவர்கள். குறித்தது தவறிப்போகுமானால், அம்பு தொடுத்த கைவிரலைக் கடித்துக்கொள்பவர்கள்; கல்லாதவர்கள்; அம்பு எய்து கொல்லும் கலைமட்டும் அறிந்தவர்கள்; வில் ஏந்தி மாறாத அஞ்சாமையுடன் தாக்குபவர்கள்; கூர்மையாக்கப் பட்ட அம்புகொண்டு எய்ய வல்லவர்கள்; அவர்கள் வழிப் போக்கரைக் கொன்று மறைத்து மூடிய அஞ்சத்தக்க கற்குவியலில் (பிணநாற்றம் உணர்ந்து) பருந்துகள் வந்து தேடுகின்றன. கூர்மையான அலகும் சிவந்த வாயும் உடைய ஆண்பருந்துகள் பிணங்களின் தலையைத் தோண்டுவனவாகி ஒன்று கூடுகின்றன. வலிமையுள்ள நெருங்கிய விரல்களால் தோண்டிக் கண்ணின் மணியை எடுத்து வலிய வாயை உடைய பெண்பருந்துகளுக்குச் சொரிகின்றன.

கடுத்தது பிழைக்குவ தாயின் தொடுத்த
கைவிரல் கவ்வும் கல்லாக் காட்சிக்
கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
வடிநவில் அம்பின் ஏவ லாடவர்
ஆள்அழித்து உயர்த்த அஞ்சுவரு பதுக்கைக்
கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்
படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ
மல்லல் மொசிவிரல் ஒற்றி மணிகொண்டு
வல்வாய்ப் பேடைக்குச் சொரியும்.....

---

*அக. 215, இறங்குகுடிக் குன்ற நாடன்.

கடுத்தது - குறித்த இலக்கு. பிழைக்குவதாயின் - தவறுமாயின். காட்சி - அறிவு. கொடுமரம் - வில். கோடா(த) - மாறாத. வடி - வடித்தல்; கூர்மைப்படுத்தல். நவில் - அமைந்த. பதுக்கை -

## கழுகின் தாய்மை

முட்டை இட்டுக் குஞ்சுகள் ஈன்ற பிறகு கழுகுகளின் இல்வாழ்க்கையும் அன்பும் விரிவடைகின்றன. யாமரத்தின் உயர்ந்த கிளைகளில் கட்டிய கூட்டில் இளங் குஞ்சுகள் வளர்கின்றன. அவற்றின் மெல்லிய வாய்க்கு ஏற்ற மென்மையான உணவைத் தேடிப் பருந்துகள் வெளியே பறந்து அலைகின்றன. ஆறலைகள்வரால் கொல்லப்பட்டு விழுந்த மக்களின் கண்களையே மென்மையான இரையாக எடுத்துச் சென்று ஊட்டுகின்றன.

பாலைவழியில் வாழும் மக்கள் ஆறலைகள்வர்கள். பாலையின் வறட்சியை அவர்களின் உள்ளத்திலும் காணலாம். சிற்றூர்களில் வாழும் அவர்கள் வில்கொண்டு அம்பு எய்து வழிப்போக்கர்களைக் கொல்வார்கள். அம்புபட்டு நிணஒழுங்கு குறைந்த வழிதோறும் மக்களின் உடம்புகள் பிணமாய்க் கிடக்கும். இறந்தவர்களைச் சுற்றிச் செவ்வலரி மாலை இட்டுவைத்தாற்போல், அம்புபட்ட புண் சொரியும் இரத்தம் சூழ்ந்து கிடக்கும். கழுகுகள் அத்தகைய பிணங்களின் கண்களைக் கொத்திக் கவர்ந்து சென்று, இலை இல்லாமல் ஓங்கி உயர்ந்துள்ள யாமரத்தின் மேற்கிளைகளில் கட்டிய கூட்டில் உள்ள தம் குஞ்சுகளின் வாயில் உமிழும்.

**இலைஇல ஓங்கிய நிலைஉயர் யாஅத்து**
**மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்குக்**
**கல்லுடைக் குறும்பின் வயவர் வில்விட**
**நிணவரிக் குறைந்த நிறத்த அதர்தொறும்**
**கணவிர மாலை இடூஉக்கழிந் தன்ன**

---

கல்குவியல். எருவை - பருந்து. தொடுவன - தோண்டுவன. குழீஇ - கூடி. மல்லல் - வலிமை. மொசி - நெருங்கு.

*புண்உமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்*
*கண்ணுமிழ் கழுகின் கானம்......*

## கிழநரியின் பேறு

உலக வாழ்க்கையில் மக்கள் அடையும் ஏமாற்றமும் திகைப்பும் பருந்து முதலிய பறவைகளின் வாழ்க்கையிலும் உள்ளன என்று புலவர் காட்டுகின்றனர். பாடுபட்டவரின் உழைப்பு எதிர்பாராமல் குறுக்கே வந்தவர்க்குப் பயனளிப்பதுபோல், பருந்து தன் குஞ்சுகளுக்கு ஊட்டும் கொழுமையான கண்ணின் தசை, குஞ்சுகளின் வாயிலிருந்து வழுக்கிக் கீழே விழ, அங்குக் காத்திருந்த கிழநரி அதை உண்டு மகிழ்கிறது. அது இரைதேட முடியாத முதுமையுற்ற கிழநரி ; பலநாள் உணவு இல்லாமையால் பசி மிகுந்து வாடிய கிழநரி ; ஆகையால் அந்தத் தசை அதற்கு உணவாக அமைந்ததும் ஒருவகையில் பொருந்தும்போலும் !

பொறித்துவைத்தாற்போன்ற வெண்ணிறக் கழுத்தும் அழகுக்கு அணிந்தாற்போன்ற சிவந்த செவியும் உடைய பருந்து, இறந்த வழிப்போக்கரின் கண்ணை எடுத்துச்செல்கின்றது. சிறிய மலையில் வளர்ந்துள்ள நீண்ட அடியை உடைய யாமரத்தின் ஏறமுடியாத கவட்டின் உயர்ந்த கிளையில் உள்ள தன் குஞ்சுகளுக்கு ஊட்டுவதற்காக எடுத்துச் செல்கின்றது. குஞ்சுகளின் வாயில் விரைந்து ஊட்டும் நேரத்தில் அந்தக் கொழுமையான கண்ணாகிய ஊன்துண்டு வழுக்கிக் கீழே விழுகின்றது. அப்போது அந்த மரத்தின்

*அக. 31, மாமூலனார்.

இல - இல்லாதனவாய். யாஅத்து - யாமரத்தின். கவடு - கிளை. டார்ப்பினம் - குஞ்சுகள். கல் - மலை. குறும்பு - சிற்றூர். வரி - ஒழுங்கு. கணவிரம் - செவ்வலரி. இடூஉ - இட்டு. பரிப்ப - சூழ.

கிழே கிழநரி ஒன்று நெடுநாளாக உணவுதேட முடியாமல் பசியோடு வருந்திக்கிடக்க அந்த ஊன்துண்டு அதற்கு உணவு ஆகின்றது.

பொறித்த போலும் வால்நிற எருத்தின்
அணிந்த போலும் செஞ்செவி எருவை
குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்து
அருங்கவட்டு உயர்சினைப் பிள்ளை ஊட்ட
விரைந்துவாய் வழுக்கிய கொழுங்கண் ஊன்தடி
தொல்பசி முதுநரி வல்சி ஆகும்......*

## பருந்திற்கு விருந்து?

மலைநாட்டு வீரர்கள் தம் சிற்றூரில் தண்ணுமை ஒலித்தால், அவர்கள் ஏறு கொள்வதற்காகப் புறப்படுதலையும், இனிப் பலர் புண்பட்டுச் சாதல் திண்ணம் என்பதையும், தமக்கு ஊன் உணவு கிடைக்கும் என்பதையும் தண்ணுமையின் ஒலி கேட்ட ஆண் பருந்து அறிந்துகொள்ளுமாம். உடனே பெரிய சிறகு எழுப்பிப் பறந்து செல்லுமாம்.

சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணுமைக்கு
எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்.....†

---

*அக. 193, மதுரை மருதனிளநாகனார்.

வால்நிற - வெண்ணிறமான. எருத்து - கழுத்து. எருவை - பருந்து. தாள் - அடிமரம். கவடு - கிளை பிரியும் இடம். பிள்ளை-குஞ்சு. ஊன் - மாமிசம். தடி - துண்டு. தொல் - பழைய. வல்சி - உணவு.

†அக. 297, மதுரை மருதனிளநாகனார்.

சிறுகுடி - மலைநாட்டுச் சிற்றூர். மறவர் - வீரர். சேக்கோள் - ஏறு கொள்ளுதல். தண்ணுமை - ஒலிக்கும் கருவி. எருவை - பருந்து. இருஞ்சிறை - பெரிய சிறகு. பெயர்க்கும் - எழும்பும்.

## வறட்சியின் எல்லை

மலையின் வளம் மிக்க தன்மையை விளக்குவதற்குப் பன்றி வண்டு முதலியவற்றின் வாழ்வை எடுத்துக்காட்டியது போலவே, வளம் இழந்து வறட்சிமிக்க மலையின் வெப்பத்தையும் சில பொருள்களின் மாறுதலைக்கொண்டு விளக்குகின்றனர். அடர்ந்த மரச்செறிவு இருந்த இடங்களில் நிழல் இல்லாமற் போனதையும் சுனையில் நீர் நிறைந்து தண்மை விளங்கிய இடங்களில் பாறைகள் கொதித்தலையும் காட்டுகின்றனர். காய்ந்து கொதிக்கும் பாறையில் மூங்கில் நெல் உதிர்ந்தால் அது உடனே பொரியாக மாறுகின்றதாம். வழிப்போக்கர் வாராத காரணத்தால் வழிபறிக்கும் கள்வரும் வாழமுடியவில்லையாம். காய்ந்த தூறுகள் தீப் பற்றி எரிந்து முழைகளில் முழங்குகின்றனவாம். சுழற் காற்று எழுந்து வானை மறைத்துத் திசையறியாமற் செய்கின்றதாம்.

கதிரவனுடைய கதிர்கள் நெருப்புப்போல் காய்தலால், பசுமை அற்றுப்போகிறது; நிலம் பிளக்கிறது. மரங்கள் நிழல் குன்றி வற்றிப்போகின்றன. பசிய சுனைகள் நீர் அற்றுப்போய், ஈரமும் இல்லாமல் காய்கின்றன. பாறைகள் கொதிக்கின்றன. அவற்றின்மேல் சொரியும் நெல் பொரியும் அளவிற்கு வெப்பம் மிகுதியாக உள்ளது. அத்தகைய கொடிய பாலைவழியில் வழிக்கொள்ளைகொண்டே சிலர் உயிர்வாழ்ந்தனர். அதனால், அவ்வழியில் செல்ல ஒருவரும் துணியவில்லை. யாரும் செல்லாத காரணத்தால், வழிபறித்து உண்ணும் உணவு இல்லாமல் ஆறலைகள்வரும் சோர்ந்து ஒடுங்கிவிட்டனர்; வழியும் பாழ்பட்டுப் போயிற்று.

...நிலம்பக
அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்
நிழல்தேய்ந்து உலறிய மரத்த அறைகாய்பு
அறுநீர்ப் பைஞ்சுனை ஆம்அறப் புலர்தலின்
உகுநெல் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குநர் இன்மையின் வௌவுநர் மடியச்
சுரம்புல் லென்ற ஆற்ற....

முசுக்குரங்கின் முகம் மைபூசினாற்போல் கருமையாக உள்ளது. ஆண்குரங்கு நீண்ட மூங்கிலில் பாய்கிறது. வெயில் கொடுமையால் அந்த மூங்கிலும் பசுமை அற்றுப் போயிருக்கிறது. அது மூங்கிலில் பாய்ந்தவுடனே, மூங்கிலில் விளைந்த வெண்ணெல் வெப்பம் மிகுந்த பாறையில் விழுந்து பாவிப் பொங்கிப் பொரிகின்றது. அது பொரியும் ஓசை, நகத்தை நெரிப்பதுபோல் கேட்கின்றது.

மைபட் டன்ன மாமுக முசுக்கலை
பைதறு நெடுங்கழை பாய்தலின் ஒய்யென
வெதிர்படு வெண்ணெல் வெவ்வறைத் தாஅய்
உகிர்நெரி ஓசையின் பொங்குவன பொரியும்......†

---

*அக. 1, மாமூலனார்.

பக - பிளவுபட. பைது அற - பசுமை அற. தெறுதலின் - காய்தலால். தேய்ந்து குன்றிய. உலறிய - வற்றிய. அறை - பாறை. காய்பு - காய்ந்து. ஆம் - நீர், ஈரம். வழங்குநர் - வழியில் செல்வோர். ஆற்ற - வழிகளை உடைய.

†அக. 267, பாலை பாடிய பெருங்கடுங்கோ.

மா - கருமை. ஒய்யென - உடனே. வெதிர் - மூங்கில். வெவ்வறை - வெப்பமான பாறை. தாஅய் - பாவி. உகிர் - நகம்.

காடு அழகு கெடுமாறு சூரியனின் கடுமையான கதிர் காய்வதால், தேக்குமரங்களின் நீண்ட கிளைகள் வறியன ஆகுமாறு அகன்ற இலைகள் பலவும் ஒல்லென்ற ஒலியுடன் வாடிக் கிடக்கின்றன. மேல்காற்று வீசும்போது அந்த உலர்ந்த இலைகளும் கிளைகளில் நிற்காமல் உதிர்கின்றன. இத்தகைய தேக்கு மரங்கள் நிறைந்த மலைப்பகுதியில், காய்ந்த தூறுகளில் பற்றிய காற்றினால் மேலெழுந்து வளர்கின்றது தீ. அந்தத் தீயின் நீண்ட ஒழுங்கு, மலைப் பிளப்பாகிய குகைகளில் பேரொலி செய்கின்றது.

காடுகவின் ஒழியக் கடுங்கதிர் தெறுதலின்
நீடுசினை வறிய ஆக ஒல்லெனை
வாடுபல் அகல்இலை கோடைக்கு ஒய்யும்
தேக்குஅமல் அடுக்கத் தாங்கண் மேக்குஎழுபு
முளிஅரில் பிறந்த வளிவளர் கூர்எரிச்
சுடர்நிமிர் நெடுங்கொடி விடர்முகை முழங்கும்......

இத்தகைய கடுங்காற்று வீசுவதால் தேக்குமரத்தின் இலைகள், காம்பு கழன்று மேலே எழுந்து வானத்து இடம் மறையப் பரவி, பிறகு வழியில் செல்வோர் அறிவு மயங்குமாறு பரந்து கவர்த்த வழிகளை மறைக்கும். அந்த இலைகள் விசும்பில் பரக்கும் காட்சி, நீண்ட ஒலி செய்யும் பருந்தின் கூட்டம் எழுந்து பறப்பதுபோல் தோன்றும்.

---

*அக. 143, ஆலம்பேரி சாத்தனார்.

கவின் - அழகு. தெறுதலின் - காய்தலால். ஒய்யும் - உதிரும். அமல் - நெருங்கிய. அடுக்கத்தாங்கண் - அடுக்கத்தில். மேக்கு - மேலே. எழுபு - எழுந்து. முளி - காய்ந்த. அரில் - தூறு. வளி - காற்றால். கூர் - மிக்க. சுடர்நிமிர் - ஒளிமிக்க. கொடி - ஒழுங்கு.

'கடுவளி எடுத்த கால்கழி தேக்கிலை
நெடுவிளிப் பருந்தின் வெறியெழுந் தாங்கு
விசும்புகண் புதையப் பாஅய்ப் பலவுடன்
அகலிடம் செல்லுநர் அறிவுகெடத் தாஅய்க்
கவலை கரக்கும்......*

*அக. 299.

கால் - காம்பு. கழி - நீங்கிய. வெறி - கூட்டம். கண் - இடம். பாஅய் - பரவி. தாஅய் - பரவி. கவலை - பிரியும் வழி.

# 2. காடு

## ஊர் திரும்பும் பசுக்கூட்டம்

காடுகள் செழிப்புற்று விளங்குவது ஆவணி புரட்டாசியில் ஆகும். கோடை வெப்பத்திற்குப்பின் பெருமழை பெய்து மரம் செடி கொடிகள் தழைத்து அழகுற விளங்கும் காலம் அது. மான் முதலிய விலங்குகளும் மயில் முதலிய பறவைகளும் உணவு நிரம்பப் பெற்று மகிழ்ந்து விளையாடும் காலமும் அதுவே. ஆகவே, காடுகளைப் பாடும் புலவர்கள், பெரும்பாலும் கார்காலத்தில் காடுகள் அளிக்கும் காட்சியையே பாடுகிறார்கள். அதிலும், பறவைகள் கூடுகளை நோக்கிப் பறந்து செல்லும் காட்சியும் பசு முதலியவை வீடுகளை நோக்கி விரைந்து வரும் காட்சியும் சேர்ந்து அழகுபடுத்தும் நேரம் மாலைக்காலம் ஆகையால், கார்காலத்துக் காடுகள் மாலைநேரத்தில் அளிக்கும் அழகிய காட்சியே புலவர்களின் உள்ளத்தைப் பெரிதும் கவரக் காண்கிறோம்.

மழை பெய்து வெள்ளம் ஓடுகிறது. அது செம்மண் நிலம். மழைநீர் ஓடியதால் வரிவரியாகச் செய்கிறது. வழியில் உள்ள ஈர மணலைக் காட்டுக்கோழி கிளறுகிறது. பக்கத்தே பாம்பு வாழும் புற்று ஒன்று இருக்கிறது. அதன் மேற்புறம் ஈரமாக உள்ளது. மாலையில் ஊர்க்குத் திரும்பும் காளை அந்தப் புற்றின் மேற்புறத்தைத் தன் கொம்புகளால் குத்துகிறது. ஈரமணல் கொம்புகளில் ஒட்டிக்கொள்கிறது. மண் பொருந்திய கொம்புகளோடு உள்ள அந்த எருது, உடன் நிற்றலை விரும்பும் இளைய பசுவைத் தழுவிக்கொண்டு ஊர்க்குத் திரும்பிவருகிறது. மற்றப் பசுக்கள் ஒருங்கே

தம் தம் கன்றுகளை அழைக்கும் குரலோடு தொழுவம் நிறையப் புகுகின்றன. அப்போது அவை பூண்டுள்ள தெளிந்த மணிகள் அழகாக ஒலிக்கின்ற ஒலி இன்னிசையாக உள்ளது.

......பெயல
கடுநீர் வரித்த செந்நில மருங்கின்
விடுநெறி ஈர்மணல் வாரணம் சிதரப்
பாம்புஉறை புற்றத்து ஈர்ம்புறம் குத்தி
மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு
உடன்நிலை வேட்கையின் மடநாகு தழீஇ
ஊர்வயின் பெயரும் பொழுதில் சேர்புஉடன்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரும்
ஆபூண் தெண்மணி ஐதுஇயம்பு இன்னிசை*

## மான் குடும்பம்

முல்லை நிலத்தில் மான்குடும்பம் அமைதியாக வாழும் அன்புவாழ்க்கையைப் பல பாடல்களில் காணலாம். குடும்பத் தலைவனாகிய ஆண்மான் (அண்ணல் இரலை) அறுகம்புல்லின் மெல்லிய கொத்துக்களைப் பெண்மானுக்குக் காட்டி உண்ணச் செய்வதும், மணல்கரையில் அதை உறங்கச்செய்து தான் காவல் காப்பதும் அன்பான வாழ்க்கைக்கு உரிய கடமைகளாக உள்ளன.

முறுக்குள்ள பெரிய கொம்புகளை உடைய ஆண்மான் தன் துணையோடும் பெண்மானோடும் திரிந்து முல்லை நிலத்தில்

*அக. 64, ஆர்க்காடுகிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்.

பெயல - மழையின். கடுநீர் - விரைந்து ஓடும் வெள்ளம். வரித்த - வரிவரியாகச் செய்த. வாரணம் - காட்டுக்கோழி. கோடு - கொம்பு. கோட்ட - கொம்பு உடைய. அண்ணல் - தலைமை. ஏஎறு-ஏறு - காளை. நாகு - பசு. பயிர் - அழைத்தல். ஐது - அழகாக

மேய்கின்றது. நெருங்கிய இலைகளை உடைய அறுகம் புல்லின் சிவந்த தண்டையும் மெல்லிய கொத்துக்களையும் பெண்மான் அருந்துமாறு செய்கின்றது. அதன்பக்கத்தே மறி (மான்குட்டி) விளையாடுகின்றது. பிறகு மணல் பரந்த காணுற்றங்கரையில் பெண்மானும் மறியும் அசைபோட்ட வாறே தூங்க, அவை தூங்குமிடத்தைக் காவல்புரிகின்றது ஆண்மான்.

> இருதிரி மருப்பின் அண்ணல் இரலை
> செறியிலைப் பதவின் செங்கோல் மென்குரல்
> மறியாடு மருங்கின் மடப்பிணை அருந்தித்
> தெள்ளறல் தழீஇய வார்மணல் அடைகரை
> மெல்கிடு கவுள துஞ்சுபுறம் காக்கும் ..*

வளமான முல்லை நிலத்தில் அதகுப் பெயர்ப் பெருமை தந்து அணிசெய்யும் முல்லைக் கொடிகள், பந்தர் இல்லாமலே கள்ளிப் புதரின்மேல் நிறைந்து படர்ந்துள்ள காட்சி அழகாக உள்ளது. அந்த இயற்கைப் பந்தரின்கீழே உள்ள பள்ளத்தில் தெளிந்த நீர் நிறைந்துள்ளது. ஆனால் நீர் மறையுமாறு முல்லைப் பூக்கள் அதன்மேல் உதிர்ந்துள்ளன. ஆறறிவுடைய மக்கள் வாயால் ஊதி ஒதுக்கிப் பருகுதல்போல், மான் தன் மூச்சால் அந்தப் பூக்களை ஒதுக்கிவிட்டு நீர் பருகுகின்றதாம்.

---

*அக. 34, மதுரை மருதன் இளநாகனர்.

அண்ணல் - தலைமையுடையது. இரலை - மான்வகை. பதவு - அறுகு. கோல் - தண்டு. குரல் - கொத்து. மருங்கு - பக்கம். அறல் - நீர். வார் - நீண்ட. மெல்கிடு - அசையிடும். கவுள் - வாயை அடுத்த பகுதி (தாடை).

பள்ளத்தில் தேங்கித் தெளிந்த நீரைக் குடிப்பதற்காகச் செல்கின்றது மான். அந்தப் பள்ளத்தை அடுத்துக் கள்ளி வளர்ந்திருக்கிறது. குட்டையான கிளைகளையும் குறிய முட்களையும் உடைய அந்தக் கள்ளியின் தலை மறையுமாறு முல்லைக்கொடி மூடிப் படர்ந்திருக்கின்றது. முல்லைப் பூக்கள் நீரில் உதிர்ந்து கிடக்கின்றன. தெளிந்த நீரைக் குடிக்கச் சென்ற ஆண்மான் நெடுமூச்சு விட்டு அதனால் பூக்களை ஒதுக்கியபின் பருகுகின்றது. பருகிய பிறகு, புள்ளிகளை உடைய அழகிய பெண்மானோடு அங்கே தங்குகின்றது.

குண்டைக் கோட்ட குறுமுள் கள்ளிப்
புன்தலை புதைத்த கொழுங்கொடி முல்லை
ஆர்கழல் புதுப்பூ உயிர்ப்பின் நீக்கித்
தெள்ளறல் பருகிய திரிமருப்பு எழிற்கலை
புள்ளியம் பிணையொடு வதியும்...*

வேடரின் அம்புக்கு இரையாகி மாண்ட தன் துணையை நினைந்து வருந்தும் பெண்மானின் துயரம் புலவரின் கற்பனையுடன் கூடி உருக்கமாக அமைந்துள்ளது. தன் குட்டிகள் பக்கத்தே விளையாடும் காட்சியிலும் மனம் செல்லாமல் வருந்துகின்றது அந்தப் பெண்மான். உணவு தேடி மேய்வதிலும் மனம் செல்லாமல் துயருறுகின்றது. குழியில் உள்ள நீரையும் குடிக்க அதற்கு மனம் இல்லை. கணவனை இழந்த கற்புடைய மனைவி படும் துயரை அதற்கு ஏற்றிக் கூறுகிறார் புலவர் ஒருவர். அந்தப் புலவர் வேட்டுவக் குடியில் பிறந்தவர்

---

*அக. 184, மதுரை மருதன் இளநாகனார்.

குண்டை - குட்டையான, குறுகிய. ஆர்கழல் - ஆர்க்குக் கழன்ற. உயிர்ப்பு - மூச்சு. அறல் - நீர். வதியும் - தங்கும்.

என்பதை எண்ணும்போது, அவர் உணர்த்தும் கற்பனையின் அடிப்படையில் அனுபவ உணர்வு அமைந்திருப்பதை அறிகிறோம்.

சினங்கொண்ட பார்வையை உடைய வேடர்கள் பெண் மானைக் கொன்றுவிடுகின்றனர். அதன் பிரிவை நினைந்து நினைந்து வருந்துகின்றது ஆண்மான். சிறியவையும் பெரியவையும் ஆகிய (தாயை இழந்த) குட்டிகள் தன்னை விடாமல் சுற்றி ஆடுகின்றன. ஆண்மான் அவற்றை நோக்கி நோக்கித் துன்புறுகின்றது. துன்பமிகுதியால் மேயும் உணவையும் மேயாமல் வெறுத்து, களர்நிலத்துக் குழியில் உள்ள சிறிதாகிய நீரையும் குடிக்காமல், வேல் எய்யப்பட்ட மக்களைப் போல் வருந்திக் கண்ணயர்கின்றது.

செவ்வாய்ப் பகழிச் செயிர்நோக்கு ஆடவர்
கணை இடக் கழிந்ததன் வீழ்துணை உள்ளிக்
குறுநெடுந் துணைய மறிபுடை ஆடப்
புன்கண் கொண்ட திரிமருப்பு இரலை
மேய்பதம் மறுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
நெய்தலம் படுவின் சில்நீர் உண்ணாது
எஃகுஉறு மாந்தரின் இனைந்துகண் படுக்கும்...*

*அக. 371, எயினந்தை மகன் இளங்கீரனார்.

செவ்வாய் - இரத்தம் தோய்ந்து சிவந்த வாய். பகழி - அம்பு. செயிர் - சினம். கணை - அம்பு. வீழ் - விருப்பமான, அன்பான. மறி-குட்டிகள். புடை - பக்கம். புன்கண் - துன்பம். பதம் - உணவு. சிறுமை - துன்பம். நோய் - துன்பம். கூர்ந்து - மிகுந்து. நெய்தலம்படு - களரில் உள்ள குழி. எஃகு - வேல். மாந்தரின் - மாந்தர்போல். இனைந்து - வருந்தி.

## முயலின் வாழ்க்கை

முல்லைநிலத்தில் தீது அறியாத நல்லுயிராக வாழ்ந்து அங்கங்கே ஓடி ஒளிவது முயல். முல்லையில் வாழ்ந்து புலமைச் செல்வம் பெற்ற இடைக்காடனார் அதன் தோற்றத்தை இரண்டு அடிகளால் படம் பிடித்துக் காட்டுகிறார். அதன் கண்கள் நெல்லிக்காய்கள் போல் குறுவிழிகளாய் அமைந்துள்ளன என்று கூறுகிறார். அது வரகின் குருத்தைத் தின்பதும், கொடிகளுள் ஒளிந்து மறைந்து வாழ்வதும், அங்கே சிறிதுநேரம் உறங்கியபின் துணையோடு வெளியே வருவதும், கள்ளம் அறியாமல் வீட்டு முற்றம் வரைக்கும் வந்து சால்களில் உள்ள நீரைக் குடிப்பதும் ஆகிய காட்சிகள் ஒரு சிறு உயர்வுநவிற்சியும் இல்லாமல் இயற்கையோவியம் போல் உள்ளன. இயற்கையோடு இயைந்து வாழும் வாழ்க்கையும், இயற்கையைக் கூர்ந்துகாணும் கண்ணும், உயிர்களின் இன்ப துன்பங்களை உணர்ந்து உருகும் நெஞ்சும் பெற்ற புலவர்க்கு அல்லாமல் மற்றையோர்க்கு இத்தகைய இயற்கையின் அழகிய எளிய காட்சிகளைச் சொல்லோவியமாக்கித் தரல் இயலாது.

முயலின் குறுவிழிக் கண்கள், சிறிய இலைகளை உடைய நெல்லியின் காய்கள் போன்றவை. கூரிய மயிர் உள்ளது அந்தக் குறுமுயல். அது உணவு தேடிச் செல்கின்றது. விளைந்த வரகின் பருத்த குருத்தைத் தின்கின்றது. வளைந்த அழகிய செவிகளோடு, காய்த்த கொடிகளுள் புகுந்து தங்கியிருந்து, இனிய துயிலை விட்டு எழுந்து, தன் துணையோடு சென்று, வீட்டு முற்றத்தில் சிறிய சால்களில் உள்ள நீரைக் கண்டு குடிக்கின்றது.

சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன
குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்
முடந்தை வரகின் விங்குபீள் அருந்துபு
குடந்தையஞ் செவிய கோள்பவர் ஒடுங்கி
இன்துயில் எழுந்து துணையொடு போகி
முன்றில் சிறுநிறை நீர்கண்டு உண்ணும்...*

முல்லைநில விலங்குகளுக்கும் அங்கு வாழும் மக்களுக்கும் தொடர்பு ஏற்படுத்திக் கூறும் பாட்டுக்களும் உள்ளன. ஆடுகளை மேய்க்கும் இடையன் தன் கடமையாக ஒலிக்கும் சீழ்க்கை ஒலியைக் கேட்டு முயல் அஞ்சி ஓடுவதும், புதலில் ஒளிவதும் நல்ல காட்சியாகும்.

ஆடுகளை மேய்த்துக்கொண்டு இடையன் காட்டில் தங்கியுள்ளான். மேய்த்தபிறகு ஆடுகளை ஒரு வழியே செலுத்துகின்றான். அப்போது வாயை மடித்துச் சீழ்க்கையொலி எழுப்புகின்றான். அந்த ஒலியைக் கேட்டு அஞ்சிய முயல், அங்கிருந்து ஓடி ஊர்மன்றத்தை அடுத்துள்ள பெரிய புதரில் ஒளிந்துகொள்கின்றது.

காடுறை இடையன் ஆடுதலைப் பெயர்க்கும்
மடிவிடு வீளை வெரீஇக் குறுமுயல்
மன்ற இரும்புதல் ஒளிக்கும்...†

---

*அக. 284, இடைக்காடனார்.

கண்டன்ன - கண்டாற்போன்ற. முடந்தை - வளைவு. வீங்கு - பருத்த. பீள் - குருத்து. அருந்துபு - தின்று. குடந்தை - வளைவு. கோள் - காய்கொள்ளுதல். பவர் - கொடி. நிறை - சால், உழுத பள்ளம்.

†அக. 394, நன்பலூர்ச் சிறுமேதாவியார்.

தலைப்பெயர்க்கும் - ஒன்று சேரச் செலுத்தும். வெரீஇ - அஞ்சி. வீளை - சீழ்க்கை ஒலி. புதல் - புதர்.

## முற்றத்தில் மான்கன்று

வீட்டு முற்றத்தில் இயற்கையாக நிகழும் காட்சி ஒன்று அழகான சொல்லோவியமாக ஒரு பாட்டில் அமைந்துள்ளது. மற்றவர்கள் புறக்கணித்துச் செல்லும் சிறுசிறு நிகழ்ச்சிகள் புலவர்களின் உள்ளத்தில் உணர்வைப் பெருக்கிக் கலை வடிவம் பெற்று வெளிவருவது வியப்பாக உள்ளது.

கலைஞரின் உள்ளத்தில் உணர்வு ஊற்றெழச் செய்வதற்குப் பெரிய போர்கள், கொலைகள், பெருந்துயர நிகழ்ச்சிகள், பெருதனை பெற்றிடும் வாய்ப்புக்கள், பெற்றவை இழந்து வருந்தும் நிலைகள், எதிர்பாராத விபத்துக்கள், அதிர்ச்சிகள் முதலியவை வேண்டும் என்பதில்லை. சிறு வண்டு மலரின் தேன் நுகரும் நிகழ்ச்சி முதல், முற்றத்தில் தொங்கும் மத்தைக் கன்று நாவால் சுவைத்தல் வரையில் யாவும் புலவர்உள்ளத்தைக் கவரவல்லனவாக உள்ளன. காட்சியின் பெருமைக்கு ஏற்றவாறு கலையின் பெருமை அமைவதில்லை; அதைக் காணும் கலைஞரின் உள்ளத்து உணர்வின் பெருமையே கலையின் பெருமையாக அமைகின்றது.

வறுமை வாய்ந்த சிறிய ஊரில் புல்லால் வேயப்பட்ட குடிசைகள் உள்ளன. குடிசைக்கு மரநிழலே பந்தலாக உள்ளது. கன்று முற்றத்தில் கட்டப்பட்டுள்ளது. அங்கே இனிய தயிரைக் கடைந்த திரண்ட தண்டு உடைய மத்துத் தொங்குகின்றது. கன்று தன் வாயால் அதைச் சுவைத்துக் கொண்டிருக்கின்றது.

> தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்
> கன்றுவாய் சுவைப்ப முன்றில் தூங்கும்

*படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை*
*நல்கூர் சீறூர்...**

## மணிமிடை பவளம்

காடுகளை அழகுபடுத்திச் செழிப்புறச் செய்யும் கார்கால மழையைப் பற்றியும் அதன் பயனாக ஏற்படும் மாறுதல்களைப் பற்றியும் பல பாட்டுக்கள் உள்ளன. கார்கால மழையுடன் விழும் ஆலி என்னும் ஆலியங் கட்டிகள் (ஆலங்கட்டிகள்) பனைநுங்கின் சிதறிய துண்டுகள் போல் உள்ளன என்று இடைக்காடனார் கூறும் உவமை அழகாக உள்ளது. மழை பெய்ததும் அதனால் மகிழும் உயிரினத்துள் மான் சிறப்பாகக் கூறத்தக்கது. மயிலின் மகிழ்ச்சியும் குறிப்பிடத்தக்கது. மலரும் மலர்கள் பல நிறத்தன ; பலவகையன ; அவற்றுள் தலையானது முல்லை. காயா, பிடவு, கொன்றை போன்ற மலர்களும் பாட்டுக்களில் இடம் பெறுகின்றன. வாடிஉதிர்ந்த காயாமலர்கள் நீலநிறமாக நிலத்தை அழகுபடுத்த, அவற்றிற்கு இடையே தம்பலப் பூச்சிகள் (பட்டுப் பூச்சிகள்) செந்நிறமாய்க் குறுக்கும் நெடுக்கும் ஓடும் காட்சி, புலவர் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. நீலமும் செம்மையும் மிடைந்த அந்தக் காட்சி, நீலமணியுடன் கலந்த பவழங்களைப் புலவர்க்கு நினைவூட்டுகின்றது ; 'மணிமிடை பவளம்' என்னும் தொடர், அகநானூற்றின் இடைப்பகுதியாகிய நூற்றெண்பது பாட்டுக்களுக்குப் பெயராக அமையும் அளவிற்கு இந்தக் காட்சி சிறப்பெய்தி விளங்குகிறது.

---

*அக. 87, மதுரைப் பேராலவாயார்.

கால் - தண்டு. தூங்கும் - தொங்கும். படலை - தழை. குரம்பை - குடிசை.

கரிய மேகம் பெரிய வானில் எழுந்து பெய்தது. நீர் நிறைந்த பனை நுங்கின் கண் சிதறி விழுதல்போல் குளிர்ந்த பனிக்கட்டியோடு பருத்த மழைத்துளிகளைச் சிதறியது. வானில் பலமுறை எழுந்து விளக்கமான துளிகளைப் பொழிந்து முடிந்தது. விடியற்காலம் நன்றாகப் புலர்ந்து வருகின்றது. முல்லைநிலம் செந்நிறம் தீட்டிவிட்டாற்போல் சிவந்து தோன்றுகின்றது. மான்கள் துணையோடு திரிகின்றன. சிறிய குட்டியைத் தழுவிச் செல்லும் துள்ளுநடை உடைய பெண்மான், நிரப்பி வைத்தாற்போல் தோன்றும் தெளிந்த நீரைப் பருகுகின்றது. வலமாகத் திரிந்த கொம்புகளை உடைய ஆண்மானோடு சென்று, அசையும் கிளைகளை உடைய குருந்தமரத்தின் நிழலில் தங்குகின்றது. வண்டுகள் ஒலி செய்து மலர்களை ஊதுகின்றன. பிடவின் அரும்புகள் மலர்கின்றன. அருமையான புள்ளிகளை உடைய மயில்கள் ஆடுகின்றன. அழகிய மணலில் வாடிய காயாம்பூவும் தம்பலப் பூச்சியும் பலவாகச் சேர்ந்து பரவி, நீலமணியுடன் கலந்த பவழம் போல் தோன்றி, ஈரமான முல்லைநிலத்தை அழகுபடுத்துகின்றன. நிலம் இவ்வாறு அழகு பெறுமாறு செய்கின்றது கார்காலம்.

*இருவிசும்பு இவர்ந்த கருவி மாமழை*
*நீர்செறி நுங்கின் கண்சிதர்ந் தவைபோல்*
*சூர்பனிப் பன்ன தண்வரல் ஆலியொடு*
*பருஉப்பெயல் அழிதுளி தலைஇ வான்நவின்று*
*குருஉத்துளி பொழிந்த பெரும்புலர் வைகறை*
*செய்துவிட் டன்ன செந்நில மருங்கில்*
*செறித்துநிறுத் தன்ன தெள்ளறல் பருகிச்*
*சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை*
*வலந்திரி மருப்பின் அண்ணல் இரலையொடு*

*அலங்குசினைக் குருந்தின் அல்குநிழல் வதியச்*
*சுரும்புஇமிர்பு ஊதப் பிடவுத்தளை அவிழ*
*அரும்பொறி மஞ்ஞை ஆல அணிமிகக்*
*காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்*
*ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்பப்*
*புலன்அணி கொண்ட கார்எதிர் காலை...**

செறிந்த மணல் மேடாக உயர்ந்து களர்மண் தோன்றும் வழியில் சிறு வயிறு உடைய தம்பலப்பூச்சிகள் குறுகக் குறுக ஓடி, வாடிய காயாமலர்க்குள் ஒளிந்து மறைகின்றன. அத் தோற்றம், நீலமணியுடன் சேர்ந்த பவழம்போல் உள்ளது.

*செறிமணல் நிவந்த களர்தோன்று இயவில்*
*குறுமோட்டு மூதாய் குறுகுறு ஓடி*
*மணிமண்டு பவழம் போலக் காயா*
*அணிமிகு செம்மல் ஒளிப்பன மறைய...†*

## மழை பெய்த காடு

குளிர்ந்த மழை பொழிகின்றது. எங்கும் பசுமை பரவுகின்றது. இரத்தம்போல் சிவந்த தம்பலப் பூச்சிகள் பெரிய

---

*அக. 304, இடைக்காடனார்.

இவர்ந்த - ஏறிய. சூர்பனிப்பன்ன - தெய்வத்தின் நடுக்கம் போன்ற (குளிர்ச்சி). தண்வரல் - குளிர்ச்சியோடு வரும். ஆலி - பனிக்கட்டி. அழிதுளி - மிக்க துளி. தலைஇ - பொருந்தி. அறல் - நீர். மறி - குட்டி. அல்கு நிழல் - பொருந்திய நிழல். இமிர்பு - ஒலித்து. அணிமிக - அழகு மிகுமாறு. செம்மல் - வாடிய பூ. புலன் - புலம் - நிலம்.

†அக. 374, இடைக்காடனார்.

இயவு - வழி. மோடு - வயிறு. மண்டு - சேர்ந்த.

வழிகளில் சிறிய பலவாக இயங்கி அழகுபடுத்துகின்றன. பசிய கொடி உடைய முல்லையின் மெல்லிய புதிய மலர்கள் வெண்ணிறக் களர்மணலில் மிகப் பலவாய் உதிர்ந்து பரவு கின்றன. போதுகளை (முதிர்ந்த அரும்புகளை) வண்டுகள் ஊதி மலரச் செய்கின்றன. முல்லைநிலம் குளிர்ந்து மணம் கமழ்கின்றது.

தண்பெயல் பொழிந்த பைதுறு காலைக்
குருதி உருவின் ஒண்செம் மூதாய்
பெருவழி மருங்கில் சிறுபல வரிப்பப்
பைங்கொடி முல்லை மென்பதப் புதுவீ
வெண்களர் அரிமணல் நன்பல தாஅய்
வண்டுபோது அவிழ்க்கும் தண்கமழ் புறவு.

கார்காலம் தொடங்குகின்றது. முல்லைக்கொடியில் கூரிய முனை உள்ள அரும்புகள் தோன்றுகின்றன. தேற்று மரத்தின் அரும்புகளும் கொன்றை அரும்புகளும் மலர்கின்றன. இரும்பு திரித்துவிட்டாற் போன்ற கரிய பெரிய கொம்புகளை உடைய இரலை மான்கள் பரல்கற்களை உடைய பள்ளங்களில் எல்லாம் துள்ளியோடுகின்றன. பரந்த முல்லைநிலம் வேனிற்காலத்தில் நீர் இல்லாமல் வருந்தினாற்போல் இருந்த காட்சி மறைகின்றது. மேகம் விரைவான துளிகளைச் சிதறி அந்தக் காட்டில் கார்காலத்தைச் செய்கின்றது.

---

*அக. 74, மதுரைக் கவுணியன் பூதத்தனார்.

பைதுஉறு - பசுமைஉற்ற காலை - பொழுது. ஒண் - ஒளியான. செம்மூதாய் - தம்பலப்பூச்சி. வரிப்ப - அழகுசெய்ய. வீ - மலர். அரி - அரிக்கப்பட்ட. நன்பல - மிகப்பல. புறவு - முல்லைநிலம்.

முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்கால் கொன்றை செம்பிணி அவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பின்
பரல்அவல் அடைய இரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானம் கதழ்உறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானம்...*

## மழை வெள்ளம்

இடித்தும் மின்னியும் பெய்யும்பெருமழைக் காலமாகிய கார்காலத்தை அடுத்துவருவது இடைவிடாத தூறல் மழை பெய்யும் கூதிர்காலம். அந்தக் காலத்திலும் காடுகள் ஓரளவு அழகுடன் பொலிவது உண்டு. அத்தகைய கூதிர்காலக் காடுகளையும் புலவர் சிலர் பாடியுள்ளனர். அப்போது மலரும் மலர்கள், முசுண்டை கோடல் முதலியன. பசுக்களை மேய்க்கும் ஆயர்கள் அணிந்த மாலைகளில் பொருந்தும் மழைத்துளிகளையும்,ஊர்த்தெருக்களில் புரண்டு ஓடும் நீர்ப்பெருக்கையும் பாட்டில் காணலாம்.

சிறு தூறல் உள்ள கூதிர்காலம் வந்தது. மேகம் இல்லாத வானம் விண்மீன்களை அணிந்து விளங்கியதுபோல், தளிர் நிறைந்த முசுண்டை வெண்ணிற மலர்களைப் பெற்று விளங்குகிறது. வெண்காந்தள் வரிகளை உடையனவாய் வளைந்த குலைகளாகப் பூக்கள் பூத்து விளங்குகிறது. கோவலர்

*அக. 4, குறுங்குடி மருதனார்.

வைந்நுனை - கூர்மையான நுனி. இல்லம் - தேற்றாமரம். கால் - அடிமரம். பிணி - அரும்பின்கட்டு. மருப்பு - கொம்பு. அவல் - பள்ளம். அடைய - முழுதும். புலம்பு - தனிமை, வருத்தம். புறக்கொடுப்ப - நீங்க. கருவி - மின்னல் முதலியவற்றின் தொகுதி. கதழ் - விரைவு. உறை - துளி.

அவற்றை மிகுதியாகச் சூடிக்கொண்டு, கவர்த்த கோல் ஏந்தியவராய், பகலில் பெய்த மழையால் வருந்திய பல பசுக் கூட்டத்தோடு, மாலையில் நீர்த்துளிகள் விளங்க, ஊர்க்குத் திரும்பிவருகின்றனர். மிகத் தொலைவில் உள்ள மேகங்கள் பெரிய இடி முழக்கத்தோடு ஒன்றோடு ஒன்று மிக மயங்கித் துளிகள் பெருகப் பெய்தலால், விரைந்துவரும் வெள்ளம் தெருக்கள்தோறும் பாய்ந்தோடுகின்றது.

மழை இல் வானம் மீன்அணிந் தன்ன
குழைஅமல் முசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்
பெரிய சூடிய கவர்கோல் கோவலர்
எல்லுப் பெயல் உழந்த பல்ஆன் நிரையொடு
நீர்திகழ் கண்ணியர் ஊர்வயின் பெயர்தர
நனிசேண் பட்ட மாரி தளிசிறந்து
ஏர்தரு கடுநீர் தெருவுதொறு ஒழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக்
கூதிர்நின் றன்றால் பொழுதே...*

## துன்பம் தரும் வறட்சி

இன்பம் கொழிக்கும் வளமான காடுகளைப் பாடும் புலவர்கள், துன்பம் பெருக்கும் பாலைக்காடுகளையும் பாடுகின்றனர். மழையின்றி வெப்பம் மிகுந்த வறண்ட காடுகளாகிய பாலைநிலத்தில் மான் போன்ற அழகிய விலங்குகள் மகிழ்ந்து வாழ முடிவதில்லை; அங்குள்ள மக்களும் நல்ல

---

*அக. 264, உம்பற்காட்டு இளங்கண்ணனார்.

குழை - தளிர். அமல் - நெருங்கிய. வாலிய - வெண்ணிறமாய். வாங்கு - வளைந்த. கவர் - இரண்டாய்ப் பிரிந்த. எல்லு - பகல். தளி - மழைத்துளி. ஏர்தரு - எழுந்த. கடுநீர் - விரைந்தோடும் நீர். நின்றன்று - நின்றது.

மனத்தோடு அன்பு வாழ்க்கை நடத்த முடிவதில்லை. மான் முதலியவற்றைச் செந்நாய்கள் அலைத்துக் கொல்கின்றன ; மக்களை ஆறலைகள்வர்கள் அலைத்துக் கொல்கின்றனர். முல்லையும் கொன்றையும் மலராத மரல் விளையும் காடே இங்குக் காண்பது. மகிழ்ந்து ஆடும் மயிலின் நடனம் காண்பதற்கில்லை ; பிணம் தின்னும் நரியின் வாழ்வையே காண முடிகிறது. தயிர் கடைந்த மத்தைச் சுவைக்கும் கன்று இல்லை ; வழுக்கிவிழுந்து முடமான எருது இருப்பைப்பூவை (இலுப்பைப்பூவைத்) தின்னும் காட்சி உள்ளது. கோவலரின் இனிய குழலோசை கேட்கவில்லை ; விளவின் துளையிலும் மூங்கிலின் துளையிலும் புகுந்து வீசும் மேல்காற்றினால் எழும் ஓசையே கேட்கிறது.

ஊனை விரும்பி மிகப் பசியாக இருக்கின்றது பெண் செந்நாய். அதன் பசியைக் களைவதற்காக ஆண் செந்நாய் முனைந்து செல்கிறது. காடெல்லாம் தேடிப் பெண்மான் அலறும்படியாக, ஆண்மானின் தொடையை — ஓடித் தப்பித்துக்கொள்ளும் ஆற்றலுக்குக் காரணமான தொடையைக் - கடித்து அழிக்கின்றது. அவ்வாறு தன் துணையின் பசியைத் தீர்க்கவல்ல செந்நாயும் அங்கு வெயில் தாங்க முடியாமல் அதை வெறுத்துக் களைத்துப்போகிறது.

> ஊன் நசைப் பிணவின் உறுபசி களைஇயர்
> காடுதேர் மடப்பிணை அலறக் கலையின்
> ஓடுகுறங்கு அறுத்த செந்நாய் ஏற்றை
> வெயில்புலந்து இளைக்கும்...*

---

*அக. 285, காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

ஊன் - புலால். பிணவின் - பெண்செந்நாயின். உறு - மிக்க. களைஇயர் - களைய. குறங்கு - தொடை. ஏற்றை - ஆண் (மான்). புலந்து - வெறுக்கும்.

மான்கள் கூட்டமாக ஒரு மரத்தின்கீழே தங்கியிருக்கின்றன. பாலைவனத்தில் வெயில்கொடுமை மிகுதியாக இருக்கும் காரணத்தால் எங்கும் நிழல் பெறாமல் அங்குத் தங்கியிருக்கின்றன. அங்கும் நிழல் என்று சொல்லத்தக்கது இல்லை. இலையற்று உலர்ந்த கிளைகளே மரத்தில் உள்ளன. அந்தக் கிளைகளில் சிலந்தி நூல் பின்னியிருக்கிறது. கிளைகளும் அசைகின்றன. அந்நிலையில் கிடைத்த பயனற்ற நிழலில் மான்கள் தங்கியிருக்கின்றன. பசிக்கொடுமை தாங்கமுடியாமல், மரல் தின்கின்றன. மரலும் வாடி வதங்கியுள்ளது. அப்போது, ஊசியின் திரண்ட முனை போன்ற திண்ணிய பற்களை உடைய செந்நாய்கள் அவற்றைத் தாக்குகின்றன. மான்கள் அலறி ஓடுகின்றன; காற்றின் முன் பூளைப்பூ பறத்தல்போல் மூலைக்கு ஒன்றாக ஓடுகின்றன. தன் இனம் காணாமற்போனது கண்ட கலைமான், கதிரவன் மறையும் மாலைப்பொழுது ஆனதும் அவற்றை ஒன்றுசேர்ப்பதற்காகத் தன் ஆண்குரலால் அழைக்கின்றது.

சிலம்பி வலந்த வறுஞ்சினை வற்றல்
அலங்கல் உலவை அரிநிழல் அசைஇத்
திரங்குமரல் கவ்விய கையறு தொகுநிலை
அரம்தின் ஊசித் திரள்நுதி அன்ன
திண்ணிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்
வளிமுனைப் பூளையின் ஒய்யென்று அலறிய
கெடுமான் இனநிரை தரீஇய கலையே
கதிர்மாய் மாலை ஆண்குரல் விளிக்கும்......*

*அக. 199, கல்லாடனார்.

சிலம்பி - சிலந்தி. வலந்த - பின்னிய. அலங்கல் - அசையும். திரங்கு - வாடிய. மரல் - கற்றாழை போன்றது. தொகுநிலை -

பாலைவழியில் பாறைகள் நிரைநிரையாகக் கிடக்கின்றன. அவை உப்புவாணிகரின் கழுதைநிரை போல் தோன்றுகின்றன. அவ்வழியே பிராமணன் ஒருவன் வெண்ணிறமான ஓலைச்சுருளோடு தூது செல்கின்றான். வாடிய வயிற்றை உடைய அவனுடைய கையில் உள்ளது பொன்னாக இருக்கக்கூடும் என்று, படையைக் கையில் கொண்டவராய் அவன் வருவதை நோக்கியிருந்து, வீணாக அப்போதே கொன்று விழச் செய்கின்றனர் கொடிய ஆறலைகள்வர். பிறகு, பயன் இல்லாத கந்தை உடுத்திய அவனுடைய வறுமையைக் கண்டு, இரத்தத்தால் சிவந்த அம்போடு கையை நொடித்துச் செல்கின்றனர். அங்கே நீள விழுந்து இரத்தத்துடன் தொங்கும் குடலை, (மரல் வளர்ந்த வழியில் உள்ள) ஆண்நரி ஒன்று வந்து கடிக்கின்றது. பிறகு வெண்மையான பல்கற்கள் கண்ணைக் கவருமாறு மின்னும் வழியில் கள்ளி நிழலில் சென்று கூக்குரலிட்டுத் தங்குகின்றது. மழை இல்லாமல் மாறிய வெம்மை மிக்க அரிய காட்டுவழி இத்தகையது.

**... ... உமணர்**
**கணநிரை அன்ன பல்கால் குறும்பொறைத்**
**தூதுஒய் பார்ப்பான் மடிவெள் ஓலை**
**படைஉடைக் கையர் வருதொடர் நோக்கி**
**உண்ணு மருங்குல் இன்னோன் கையது**
**பொன்ஆ குதலும் உண்டுஎனக் கொன்னே**
**தடிந்துஉடன் வீழ்த்த கடுங்கண் மழவர்**
**திறன்இல் சிதாஅர் வறுமை நோக்கிச்**

---

கூட்டம். அரம் தின் - அரத்தால் கூர்மைப்படுத்தப்பெற்ற. எயிற்ற - பற்களை உடைய. வளி - காற்று. கெடு - காணாமற்போன.

*செங்கோல் அம்பினர் கைந்நொடியாப் பெயரக்*
*கொடிவிடு குருதித் தூங்குடர் கறீஇ*
*வரிமரல் இயவின் ஒருநரி ஏற்றை*
*வெண்பரல் இமைக்கும் கண்பறி கவலைக்*
*கள்ளி நீழல் கதறுபு வதிய*
*மழைக்கண் மாறிய வெங்காட்டு ஆரிடை......**

ஓடையில் சரிந்துவிழும் மண் அஞ்சத்தக்கவாறு இடையூறாக உள்ள ஒரு வழியில், துன்பப்பட்டு ஏறும் இடத்தில் கால் வழுக்கி விழுந்து,மிக்க முடம்பட்டுப் போகிறது எருது ஒன்று. வலிமை இருந்தும் அது தொழிலுக்கு உதவாமல் தனித்துக் கிடக்கின்றது. அந்த எருதினிடம் சிறுவர்கள் பழகி அன்புகொள்கின்றனர். அதற்கு உணவு தரவேண்டும் என்ற எண்ணம் கொண்டு சிறுவர்கள் இருப்பைப் பூக்களை வில்லால் உதிர்த்து அதற்கு இடுகிறார்கள். அப்போது இருப்பைப் பூவைத் தின்பதற்காக ஓடிவந்த மானைத் துரத்திவிட்டு, பூ எல்லாம் எருதுக்கே கிடைக்குமாறு செய்கின்றனர்.

*உகுமண் ஊறு அஞ்சும் ஒருகால் பட்டத்து*
*இன்னா ஏற்றத்து இழுக்கி முடம்கூர்ந்து*
*ஒருதனித்து ஒழிந்த உரனுடை நோன்பகடு*
*அங்குழை இருப்பை அறைவாய் வான்பூழ்ல்*

---

*அக. 337, பாலை பாடிய பெருங்கடுங்கோ.

ஒய் - கொண்டு செல்லும். கொன்னே - வீணே. தடிந்து - வெட்டி. கடுங்கண் - கொடுமை. சிதாஅர் - கந்தல். பெயரா - அப்பால் செல்ல. கொடி - நீளம். கறீஇ - கறித்து, கடித்து. இயவின் - வழியில் உள்ள. கவலை - பிரியும் வழி. கதறுபு - கதறி. ஆர்இடை - அரியவழி.

*புல்உளைச் சிறுஅர் வில்லின் நீக்கி*
*மரைகடிந்து ஊட்டும்......*

பொன் கம்பிஇழுத்தாற்போன்ற கூரிய பற்களை உடையது செந்நாய். அதற்கு அஞ்சி ஓடுகிறது புள்ளிகளை உடைய கலைமான். ஓடிச்சென்ற இடத்தில் விளாமரம் இருக்கிறது. விளாங்கனியின் புல்லிய ஓட்டில் தோன்றிய துளையில், வெப்பத்தை வீசும் மேல்காற்று நுழைந்து ஒலிஎழுப்ப, அந்த ஒலியைக் கோவலரின் குழலோசை என்று எண்ணுகிறது மான். தன் அச்சம் தீரும் என்று அதை நாடுகிறது.

பொன்வார்ந் தன்ன வைவால் எயிற்றுச்
செந்நாய் வெரீஇய புகர்உழை ஒருத்தல்
பொறிஅரை விளவின் புன்புற விளைபுழல்
அழல்எறி கோடை தூக்கலின் கோவலர்
குழல்என நினையும்......†

புதரில் ஓங்கிவளர்ந்து அசையும் மூங்கிலில் வண்டு துளைத்து அழகிய சிறு துளை செய்கிறது. மேல்காற்று அதனுள் புகுந்து ஒலி எழுப்புகின்றது. அது, நீர் பருகச்

---

*அக. 107, காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.
உகு - சரிந்துவிழும். ஊறு - இடையூறு. ஏற்றம் - மேட்டில் ஏறுதல். உரன் - வலிமை. நோன்பகடு - வலிய எருது. அறைவாய் - அற்ற வாய். புழல் - துளை. உளை - குடுமி.

†அக. 219, கயமனார்.
வார்ந்தன்ன - கம்பி நீண்டாற்போன்ற. வை - கூரிய. வால் - வெண்மை, தூய்மை. எயிறு - பல். புகர் - புள்ளி. உழை - மான்வகை. ஒருத்தல் - ஆண் (மான்). பொறி - புள்ளி. புழல் - துளை. தூக்கலின் - உள்புகுந்து எழுப்புதலால்.

செல்லும் பசுக்கூட்டத்திற்குப் பின் நீண்ட கோலுடன் செல்லும் ஆயரின் குழலோசை போல் அழகாக இசைக்கின்றது.

*புதல்இவர் ஆடுஅமைத் தும்பி குயின்ற*
*அகலா அந்துளை கோடை முகத்தலின்*
*நீர்க்குஇயங்கு இனநிரைப் பின்றை வார்கோல்*
*ஆய்க்குழல் பாணியின் ஐதுவந்து இசைக்கும்......**

*அக. 225, எயினந்தை மகனார் இளங்கீரனார்.

# 3. மருதம்

## வராலின் வன்மை

மருத நிலம் வயல் சூழ்ந்து விளங்குவது ; ஆறுகளும் பொய்கைகளும் நீர் நிறைந்து வளம் செய்கின்றன ; ஆம்பல் தாமரை முதலிய மலர்களும், வரால் வாளை முதலிய மீன் களும், எருமை முதலிய விலங்குகளும், நாரை முதலிய பறவைகளும் இங்குப் புலவர்களின் கற்பனையைத் தூண்டுவன.

மருதநில வளத்தை விளக்க விரும்பிய நக்கீரர் ஒரு பாட்டில் வரால் மீனின் வலிமையையும் செருக்கையும் கூறி விளக்குகிறார். மீன் பிடிப்பவரின் தூண்டிலுக்கு வயப் படாமல், அதில் மாட்டியிருந்த இரையை மட்டும் தின்று பலவகைக் கொடிகளையும் சிதைத்து, அவர்கள் தூண்டிலை இழுக்க இழுக்க வராமல் பொய்கையையே கலக்கிவிடுகிற தாம். இந்தக் காட்சியைக் காட்டும் புலவர், இதற்கு உவமை யாக மற்றொன்று எடுத்துரைக்கிறார். கயிற்றால் பிணித்து இழுக்கும்போது, இழுப்போரை அலைத்து ஆட்டும் சினம் கொண்ட எருதுபோல் அந்த வரால் கலக்குவதாகக் கூறு கிறார்.

பிளந்தாற் போன்ற வாயும் பல வரிகளும் உடையது பெரிய ஆண் வரால் மீன். மீன் பிடிப்பவன் எறிந்த தூண்டிலில் தனக்கு எமனாக வந்த இரையை அது விழுங்கி விடுகிறது. உடனே அந்த இரும்பின் முனையில் அகப்பட்டுக் கொள்வதால், தப்பித்துக் கொள்ளப் போராடுகின்றது ; ஆம்பலின் மெல்லிய இலை கிழியுமாறும், குவளையின் மலர்கள்

பல சிதையுமாறும் பாய்ந்து மேலெழுகின்றது ; அங்கே பின்னிக்கொண்டுள்ள வள்ளைக் கொடியைக் கலக்குகின்றது. தூண்டிலிட்டவன் இழுக்கின்றான். அவன் இழுக்கவும், அது வரவில்லை. கயிறு இட்டுப் பிடிக்கும்போது போராடும் சினம் மிக்க எருது போல், செருக்கு மிகுந்து விடியற் காலத்தில் குளத்தைக் கலக்குகின்றது.

பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்துக்
கொடுவாய் இரும்பின் கோள்இரை துற்றி
ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்து
அரில்படு வள்ளை ஆய்கொடி மயக்கித்
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு
நாட்கயம் உழக்கும்......

## வயல் வளம்

மருத வளத்தைச் சிறப்பிக்க விரும்பிய பரணர், நெல் வயல்களிலும் தாமரை பூத்து விளங்குவதாகவும், உழவர் நெல்தாள் அரியும்போது தாமரைப்பூவும் அவற்றுடன் சேர்ந்து வருவதாகவும், கூறுகிறார். அதனினும் சிறப்பாக அவர் கூறும் வளம் உயர்வுநவிற்சி போல் தோன்றுகிறது. கள் கொண்டு செல்லும் வண்டியின் சக்கரம் சேற்றில்

---

அக. 36, மதுரை நக்கீரர்.

போத்து - ஆண்மீன். இரு - பெரிய. கொடுவாய் - வளைந்த வாய். கோள் - கொலை, எமன். அரில் - பின்னிய நிலை. ஆய் - மெலிந்த. கூம்புவிடு - மலர்ந்த. வேட்டுவன் - மீன் பிடிப்பவன். கதச்சே - சினம் கொண்ட எருது. நாள் - விடியற்காலத்தே.

அகப்படும்போது,அதை உய்ப்பதற்காகச் சேற்றில் கரும்பை அடுக்குகின்றனராம். கரும்பு அவ்வளவு மிகுதியாக விளைந்து மலிந்துள்ளது என்பது கருத்து. மற்ருெரு புலவர், இதே கருத்தை வேறு வகையாகப் புலப்படுத்துகிருர். கிழப்பசு,நெற்கதிரைத் தின்னுதவாறு தடுப்பதற்காக,அதைப் பாகற்கொடியாலும் பகன்றைக் கொடியாலும் காஞ்சி மரத்தில் கட்டி, கரும்பு இட்டுத் தின்னச் செய்கின்றனராம். உடனே தேவையாக உள்ள கள்ளுக்காகவும், உணவுக்குத் தேவையான நெல்லுக்காவும், கரும்பை இழக்கும் அள விற்கு அது மலிந்துள்ளதாம். கண்ட இடமெல்லாம் பாகற் கொடியும் பகன்றைக் கொடியும் படர்ந்து, கிழப்பசுவைக் கட்டும் அளவிற்குச் செழித்து வளர்ந்து பயன்படு கின்றனவாம்.

வயல்களில் பூத்த தாமரைமலர்கள் நெருப்புக் கொழுந்து விட்டு எரிவது போல் விளங்குகின்றன. அவற் றின் இடையிடையே செந்நெல்லின் தாளை அரிந்து கட்டுக் கட்டாகக் குவித்துள்ளனர் உழவர். அவர்களை நாடிக் கள் கொண்டு திரியும் வண்டி அங்கு வந்து சேற்றில் பதிகின்றது. உடனே சேற்று வழியில் அழகான கரும்புகளை அடுக்கி வண்டியைச் செலுத்துகின்ருர்கள்.

எரிஅகைந் தன்ன தாமரை இடையிடை
அரிந்துகால் குவித்த செந்நெல் வினைஞர்
கள்கொண்டு மறுகும் சாகாடு அளற்றுஉறின்
ஆய்கரும்பு அடுக்கும்.....

*அக. 116, பாணர்.

மறுகும் - இங்கும் அங்கும் திரியும். சாகாடு - வண்டி. அளற்று உறின் - சேற்றில் பதிந்தால். ஆய் - அழகான.

நெல்லின் இளங் கதிர்கள், முரசு உடைய செல்வர் தம் குதிரைகளின் உச்சியில் அணிவித்த கவரியை நிமிர்த்து வைத்தாற்போல் தோன்றுகின்றன. வயல் அருகே கிழப் பசு ஒன்று வரக்கண்ட உழவர், அது கதிர்களைத் தின்னுத படி காப்பதற்காக, பாகற்கொடியும் பகன்றைக் கொடியும் அறுத்துக் காஞ்சி மரத்தில் அதைக் கட்டி, கரும்பு இட்டு உண்ணச் செய்கிறார்கள்.

*முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு*
*மூட்டுறு கவரி தூக்கி அன்ன*
*செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்*
*மூதா தின்றல் அஞ்சிக் காவலர்*
*பாகல் ஆய்கொடிப் பகன்றையொடு பரீஇக்*
*காஞ்சியி னகத்துக் கரும்பருத்தி யாக்கும்......*

## எருமையின் வாழ்வு

மருதத் திணைப் பாட்டுக்களில் பயின்று வரும் விலங்கு எருமை. அதன் கொம்புகள், மயிர் நிறைந்த கரிய முதுகு முதலிய தோற்றத்தை வருணிப்பதோடு, வளமான பொய்கைகளில் மலர்களைத் தின்று நீரில் திளைத்து ஆடுதல் முதலிய செயல்களையும் எடுத்துரைக்கின்றனர் புலவர். சிறுபிள்ளைகள் எருமைகளின் முதுகின்மேல் ஏறி ஊர்தல், புலவர் கண்ணுக்கு விருந்தாகிறது. பகன்றைக் கொடிகள் கொம்புகளில் சிக்குண்டு கிடக்க, ஊர்க்குத் திரும்பும் எருமைகள்,

---

*அக. 156, ஆவூர் மூலங்கிழார்.

புரவி - குதிரை. மூட்டுறு - இணைத்த. சேய்அரி - சிவந்த அரி. புனிற்று - அண்மையின் ஈன்ற. மூதா - முதுஆ. ஆய் - அழகிய, நுண்ணிய. பரீஇ - அறுத்து. யாக்கும் - கட்டும்.

வெற்றிமாலை சூடி நாட்டுக்குத் திரும்பும் வீரர்களைப் போல் காட்சி அளிக்கின்றன. நீரில் திளைத்து விளையாடும் எருமைகள் காஞ்சி மரத்து நீழலில் நிற்கும்போது, காஞ்சிமலர்ப் பொடிகள் அவற்றின் உடலில் படிந்திருக்க, அவை மெல்ல அசையிட்டவாறே தொழுவத்திற்குத் திரும்புதலும் மற்றோர் அழகிய காட்சி ஆகும்.

பருத்த எருமையின் கொம்புகள் முறுக்குண்டு மேல் வளைந்திருக்கின்றன ; பேடியாக வடிவம் பூண்டு ஆடுகின்றவனுடைய மேல்வளைந்த கைபோல் அவை தோன்றுகின்றன. அந்த எருமையின் கரிய பெரிய முதுகில் விளையாட்டுத் தொழில் உடைய சிறுவர்கள் ஏறி உட்கார்ந்திருக்கும் காட்சி, தொலைவில் உள்ளவர்க்குத் திரண்ட கல்லின்மேல் மந்திகள் (பெண்குரங்குகள்) இருப்பதுபோல் தோன்றும்.

*பேடிப் பெண்கொண்டு ஆடுகை கடுப்ப*
*நகுவரப் பணைத்த திரிமருப்பு எருமை*
*மயிர்க்கவின் கொண்ட மாத்தோல் இரும்புறம்*
*சிறுதொழில் மகாஅர் ஏறிச் சேணோர்க்குத்*
*துறுகல் மந்தியின் தோன்றும்......**

துறையில் மீன்கள் திரியும் நீர் மிக்க பொய்கையில் நள்ளிரவில் ஆம்பல்மலர்களை மேய்கின்றது எருமை. அது நெறிந்த கொம்புகளை உடையது. ஆம்பல்மலர்களைத் தின்ற பிறகு, மிக்க சேற்றின் குழம்பிலே படிந்திருக்கிறது. பிறகு,

*அக. 206, மதுரை மருதனிள நாகனார்.

ஆடு கை - ஆடுகின்ற கை. கடுப்ப - போல. நகுவர - விளங்குமாறு. மருப்பு - கொம்பு. கவின் - அழகு. மகாஅர் - சிறுவர். சேணோர் - தொலைவில் உள்ளவர்.

பசிய நிணம் உடைய வரால் மீன்கள் மிதிபட்டு அழியுமாறு இயங்குகிறது. அருகே உள்ள பகன்றையின் வெண்ணிறப் பூக்களைத் தலையில் சூடிக்கொண்டு பெருமிதத்தோடு செல்கின்றது. அந்தக் காட்சி, போர்வெற்றி பெற்ற வீரர்கள் வெற்றி மாலை சூடி ஊர்க்குத் திரும்புதல் போல் தோன்றுகின்றது.

துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை
அரிமலர் ஆம்பல் மேய்ந்த நெறிமருப்பு
ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்துத்
தூங்குசேற்று அள்ளல் துஞ்சிப் பொழுதுபடப்
பைந்நிண வராஅல் குறையப் பெயர்தந்து
குரூஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்
போர்ச்செறி மள்ளரின் புகுதரும்......

எருமையின் கொம்புகள் இரும்பால் செய்தாற்போல் உள்ளன. பளிங்கு மணி போன்ற தெளிந்த நீர் உள்ள குளம் கலங்குமாறு எருமை அதனுள் புகுகின்றது. அங் குள்ள ஆம்பலின் மெல்லிய இலைகள் கிழிகின்றன. குவளை யின் மலர் பலவற்றைத் தின்கின்றது. குளக்கரையில் செல் லும்போது, கரையில் உள்ள காஞ்சிமரத்தின் மலர்களி லிருந்து நுண்ணிய பூப் பொடிகள் எருமையின் ஈரமான முதுகின்மேல் சிந்துகின்றன. பிறகு, அசையிடும் வாயோடு, தான் தங்குமிடத்திற்குச் சென்று சேர்கின்றது.

---

*அக. 316, ஓரம்போகியார்.

வழங்கும் - திரியும். அரி - அழகான. மருப்பு - கொம்பு. சுவல் - முதுகு. தூங்கு - மிக்க. அள்ளல் - சேற்றின் குழம்பு. போத்து - ஆண் (எருமை). குறைய - சிதைய. பெயர்தந்து - திரும்பி. குரூஉ - நிறம். மள்ளரின் - வீரர்போல்.

மணிகண் டன்ன துணிகயம் துளங்க
இரும்பியன் றன்ன கருங்கோட்டு எருமை
ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் மாந்திக் கரைய
காஞ்சி நுண்தாது ஈர்ம்புறத்து உறைப்ப
மெல்கிடு கவுள அல்குநிலை புகுதரும்......

## ஆமையின் நடை

ஆமை, கரையிலே சோம்பலுடன் துயில்கிறது. பிறகு திடீரென்று விழித்து நீரில் பாயும் காட்சி அழகியது. நீரில் பாய்ந்தபின் அது மெல்ல அசைந்து நடக்கும் நடை, குடித்து மயங்கியவரின் நடைபோல் புலவர் கண்ணுக்குத் தோன்று கிறது.

வள்ளைக்கொடி தூறுகளாகப் பின்னிக் கிடக்கின்றது. வள்ளையின் நீண்ட இலைகளின் செறிவில் சோம்பலுடன் துயில்வதை வெறுத்து வெளியே புறப்பட்டது ஆமை. நீரில் தத்திச் செல்லுமாறு எறிந்துவிட்ட கல்போல் சென்று, அகன்ற நீர்த்துறையில் புகுகின்றது ; அங்கே பிளந்தாற் போன்ற வாய் நிறையச் சிந்திய பனங்கள்ளை உண்கின்றது. அதனால் மயங்கிக் களித்து நடக்கின்றது ; இனிய பெரிய வயல்களில் புகுந்து கலக்கி, அயலில் உள்ள ஆம்பலின் மெல்லிய இலைக்குள் ஒடுங்குகின்றது.

---

*அக. 56, மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்.

மணி - பளிங்கு. கண்டன்ன - கண்டாற்போன்ற. துணி கயம் - தெளிந்த குளம். கூம்புவிடு - மலர்ந்த. ஈர்ம்புறம் - ஈரம் உள்ள முதுகு. உறைப்ப - விழ. மெல்கிடு - அசைபோடும். அல்குநிலை - தங்கும் இடம்.

பிணங்கரில் வள்ளை நீடிலைப் பொதும்பின்
மடிதுயில் முனைஇய வள்ளுகிர் யாமை
நொடிவிடு கல்லின் போகி அகல்துறைப்
பகுவாய் நிறைய நுங்கின் கள்ளின்
உகுவார் அருந்து மகிழ்புஇயங்கு நடையொடு
தீம்பெரும் பழனம் உழக்கி அயலது
ஆம்பல் மெல்லடை ஒடுங்கும்....

## கள் குடித்த இரு

ஆமை, குடித்து மயங்கியவர் போல் நடக்கிறது; மற்றொரு பாட்டில், இருமீன் கள்ளையே குடித்துவிட்டுப் போதை ஏறித் துள்ளுகிறது. பொய்கையில் துள்ளிய மீன், அடுத்துள்ள நெற்கூட்டின் மேல் (களஞ்சியத்தின் மேல்) போய் விழுகிறதாம்.

மருத நிலத்துப் பொய்கை ஒன்றில் மீன்கள் நிறைந்துள்ளன. அங்கே கள் உண்ட கலம் கழுவப்படுகின்றது. கழுவிய நீரை இருமீன் உண்ண, அது கள் மயக்கமுற்றுத் துள்ளுகின்றது. இயல்பாக வில்போல் வளைந்துள்ள அந்த மீன், கள் உண்டு துள்ளும்போது, பூட்டிய நாண் அற்ற வில் தெறிப்பது போல் துள்ளுகின்றது; இவ்வாறு துள்ளி நெற்கூடுகளின் அடியில் விழுகின்றது.

---

*அக. 256.

பிணங்கு - பின்னிக்கொள்ளும். அரில் - தூறு. நீடு - நீண்ட. முனைஇய - வெறுத்த. வள்உகிர் - கூரிய நகம். கல்லின் - கல் போல். உகு - சொரிந்த. வார் - ஒழுகுவது. மெல்அடை - மெல்லிய இலை.

நறவுஉண் மண்டை நுடக்கலின் இறவுக்கலித்துப்
பூட்டுஅறு வில்லின் கூட்டுமுதல் தெரிக்கும்
பழனப் பொய்கை.....

## நண்டின் அச்சம்

கற்ருேவியத்திலும் வண்ண ஓவியத்திலும் கண்ணுக்குத் தோன்றுபவற்றை மட்டுமே புலப்படுத்த முடியும். புலவர் தீட்டும் சொல்லோவியத்தில் கண்ணுக்குத் தோன்ருதவற்றையும் தோற்றுவிக்க முடியும். இது பாட்டின் சிறப்பியல்பு எனலாம். ஓவியன் ஒருவன் பொய்கையில் தாமரையைக் காட்ட விரும்பினல், பொய்கைக்கரை, நீர்ப் பரப்பு, தாமரைத் தண்டின் மேற்பகுதி, சில இலைகள், சில பூக்கள் ஆகிய இவற்றையே காட்டமுடியும். புலவர் தீட்டும் ஓவியத்தில், தாமரையின் அடிப்பகுதியாகிய கிழங்கு, அந்தக் கிழங்கு நிலத்தைப் பிளந்து சென்றுள்ள தன்மை, தாமரையின் திரண்ட தண்டு, அதன் உள்ளே உள்ள துளை, இலை, முகை முதலியவற்றையும் விளக்கமாகத் தீட்ட முடிகிறது. நீர்ப்பரப்பு, தண்டு, இலை, முகை, மலர் ஆகிய அனைத்திற்கும் ஆங்காங்கே உவமைகள் அமைந்து விளக்கம் செய்கின்றன. ஓவியம் உயிருள்ளதாய் விளங்கும்பொருட்டு, இயங்கும் உயிராகிய நண்டும் காட்டப்படுகிறது. அதற்குப்

---

*அக. 96, மருதம் பாடிய இளங்கடுங்கோ.

நறவு - கள். மண்டை - கலம். நுடக்கலின் - கழுவுதலின். இறவு - இருமீன். கலித்து - செருக்கி, போதைஉற்று. வில்லின் - வில்போல். கூட்டுமுதல் - நெற்கூட்டின் அடியில். பழனம் - மருதநிலத்து வயல்.

பலவகை உணர்ச்சிகள் உண்டு என்று காட்டுவதற்காக, புலவரின் ஓவியத்தில் நண்டைப் பிடிக்க வரும் நாரையும் தீட்டப்பட்டு, நண்டின் அச்சமும் ஓட்டமும் புலப்படுத்தப் படுகின்றன.

நீர்ப்பரப்பு, இடம் அகன்றதாய், கடலைக் கண்டாற் போன்றதாய் உள்ளது. தாமரை செழித்து வளர்ந்துள்ளது. தாமரையின் கிழங்குகள் நிலம் பிளக்குமாறு வேர் கொண்டு முதிர்ந்திருக்கின்றன. துளை உடைய திரண்ட தண்டுகள் மூங்கில் போல் உள்ளன. பசிய இலைகள் யானையின் செவி போல் தோன்றுகின்றன. இலைகளை அடுத்துக் கழு நிற்பதுபோல் வளமான அரும்புகள் தோன்றுகின்றன. அவற்றிடையே பூத்துள்ள பல மலர்கள் புன்முறுவல் கொண்ட முகங்கள் போல் விளங்குகின்றன. பறவைகள் வயல்களில் ஒலிக்கின்றன. நண்டு ஓடுகின்றது. அதன் நீண்ட கண்கள் வேம்பின் அரும்புகள் போல் உள்ளன. இரையைத் தேடிவரும் நாரைகளைக் கண்டு அஞ்சி, அந்த நண்டு அருகே பகன்றை தழைத்துள்ள கரிய சேற்றில் தேமல் போல் வரிகள் ஏற்படுமாறு ஓடுகின்றது. விரைந்து ஓடிச் சென்று, தன் நீர் மிக்க மண்வளையுள் பதுங்குகின்றது.

கடல்கண் டன்ன கண்அகல் பரப்பின்
நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்
கழைகண் டன்ன தூம்புடைத் திரள்கால்
களிற்றுச்செவி அன்ன பாசடை மருங்கில்
கழுநிவந் தன்ன கொழுமுகை இடையிடை
முறுவல் முகத்தின் பன்மலர் தயங்கப்
பூத்த தாமரைப் புள்இமிழ் பழனத்து

*வேப்புநனை அன்ன நெடுங்கண் ஈர்ஞெண்டு*
*இரைதேர் வெண்குருகு அஞ்சி அயலது*
*ஒலித்த பகன்றை இருஞ்சேற்று அள்ளல்*
*திதலையின் வரிப்ப ஓடி விரைந்துதன்*
*நீர்மலி மண்அளைச் செறியும்......**

## கள்வன் போன்ற நாரை

வாளையைப் பிடித்துத் தின்ன வரும் நாரை, காவல்மிக்க வீட்டிற்குள் நுழையும் திருடன் போல அஞ்சி அஞ்சி மெல்ல ஒதுங்கி வருகிறதாம்.

நீண்ட பெரிய பொய்கையில் இரைதேட விரும்பிச் செல்கின்றது நாரை. வெண்மையான ஆண்வாளையைப் பிடித்து உண்பதற்காக மெல்லச் செல்கின்றது; தன் அடியை மீன் அறியக் கூடாது என்று அஞ்சி மெல்ல மெல்லச் செல்கின்றது; காவல் உடைய வீட்டிற்குள் புகும் கள்வன் அஞ்சி மெல்லச் செல்வது போல் தளர்ந்து ஒதுங்கிச் செல்கின்றது.

*நீள்இரும் பொய்கை இரைவேட்டு எழுந்த*
*வாளை வெண்போத்து உணீஇய நாரைதன்*
*அடிஅறி வுறுதல் அஞ்சிப் பைப்பயக்*

---

*அக. 176, மருதம் பாடிய இளங்கடுங்கோ.

கண் - இடம். பக - பிளவுபட. கழை - மூங்கில். தூம்பு - துளை. கால் - தண்டு. பாசடை - பசிய இலை. நிவந்தன்ன - உயர்ந்தாற்போன்ற. புள் - பறவை. பழனம் - வயல். நனை - அரும்பு. ஒலித்த - தழைத்த. அள்ளல் - சேறு. திதலை - தேமல். மலி - மிக்க. அளை - வளை.

*கடியிலம் புகூஉம் கள்வன் போலச்*
*சாஅய் ஒதுங்கும்...**

## உலக்கை ஒலிக்கு அஞ்சிய குருகு

மருதநிலம் நெல்விளைவு மிக்கது. மகளிர் நெற்கதிரை முறித்துப் பச்சைநெல் கொண்டு அவல் இடிக்கின்றனர். மீன் முதலியவற்றை அச்சுறுத்தி வாழும் குருகு, அருகே உள்ள வாழைமரத்தில் தங்கியிருக்கிறது. அவல் இடிக்கும் உலக்கையின் ஒலி இப்போது குருகுக்கு அச்சம் விளைத்து அங்கிருந்து அது பறந்தோடுமாறு செய்கிறது.

திருமணமான புதிய மணமகள் மணமனையில் இல் வாழ்க்கை தொடங்குகிறாள். உணவுப்பொருள் மிக்க வீடு அது. பல பக்கங்களை உடைய அடுப்பில் பால் உலை வைப்பது வழக்கம். அந்தப் பாலுலையில் இடுவதற்காக அவல் செய் கிறாள். நீண்டு வளராத கூந்தலை உடைய இளம்பெண் களுடன் வயலில் விளைந்த நெல்லின் வளைந்த கதிர்களை முறித்துப் பச்சை அவல் இடிக்கிறாள். கரிய வயிரமுள்ள உலக்கை விரைந்து இடிக்கும் ஓசை கேட்டுச் சூல் நிறைந்த குருகுகள் அஞ்சுகின்றன. இனிய குலை உடைய வாழை மடலில் இருந்த அந்தக் குருகுகள், அங்கே இருக்காமல் அஞ்சிப் பறந்து போகின்றன. மாமரத்தை நோக்கிச் சிறிது பறந்து செல்கின்றன.

---

*அக. 276, பரணர்.

இரும்பொய்கை - பெரிய பொய்கை. வேட்டு - விரும்பி. போத்து - ஆண் (வாளை). உணீஇய - உண்ண. பைப்பய - மெல்ல. கடி - காவல். இலம் - இல்லம். சாஅய் - தளர்ந்து.

*புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்*
*பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇக்*
*கூழைக் கூந்தல் குறுந்தொடி மகளிர்*
*பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்*
*பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கைக்*
*கடிதுஇடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு*
*தீங்குலை வாழை ஓங்குமடல் இராது*
*நெடுங்கால் மராஅத்துக் குறும்பறை பயிற்றும்..*

## கமுகின் எழில்

கமுகமரத்தின் சொல்லோவியம் ஒன்று போற்றத் தக்கதாக உள்ளது. அதன் அடிமரம், கழுத்து, பாளை, வயிறு, மலர்கள், அவற்றின் விரிந்த தோற்றம், இளங்காய்கள் ஆகிய அனைத்தும் அழகாகப் புனைந்து கூறப்படுகின்றன. வருணனையில் சிறிதும் உயர்வுநவிற்சி இல்லை ; நேரே கண்டு படம் எழுதினாற்போல் அமைந்துள்ளது.

மாடங்களை உடைய பழைய ஊரின் மதிற்புறத்தைத் தழுவி வளர்ந்துள்ள கமுகமரங்கள் நீண்ட வெப்பத்தால் வருந்துகின்றன ; குறுகிய இறைகளை உடையவை ; திரண்ட அடிமரம் உடையவை. தொடுக்கப்பட்ட பல மலர்களின்

---

*அக. 141, நக்கீரர்.

மகடூஉ - மகள். அயினி - உணவு. அயினிய - உணவு உடைய. கடிநகர் - மணமனை. கோடு - பக்கம். இரீஇ - வைத்து. கூழை - வளர்ச்சி குறைந்த. பெருஞ்செய்-பெரிய வயல். வாங்கு - வளைந்த. பாசவல் - பச்சை அவல். காழ் - வயிரம். கடிது - விரைவு. வெரீஇய - அஞ்சிய. கமஞ்சூல் - நிறைந்த கர்ப்பம். நெடுங்கால் - நீண்ட அடிமரம். குறும்பறை - சிறிது பறத்தல்.

தொகுதி மூடிக் கட்டிய குடைபோன்ற கழுத்தில் அமைந்த பாளைகள் பற்று நீங்கிவிடுகின்றன. அவை வாள் வடித்தாற் போன்ற வயிற்றினை உடையவை; உற்ற நாள் (பருவம்) வந்ததும் வெளிப்பட்டு விரும்பத்தக்க அழகு பெறுகின்றன. பூக்கள் ஆரம் போல் அழகாக விளங்குகின்றன. நீண்ட கவரி போல் வண்டுகள் தேன் நுகருமாறு விரிகின்றன; முத்துக்களைப் போன்ற வெண்ணிறப் பூக்கள் பரவுகின்றன. பலகறை போல், ஒளியான நிறம் உடைய ஆலங்கட்டிகள் போல், மிக்க மகிழ்ச்சியை வளர்க்கும் சிறப்புடைய முற்றாத இளங்காய்கள் பூவோடு வளர்கின்றன.

*மாட மூதூர் மதிற்புறம் தழீஇ*
*நீடுவெயில் உழந்த குறியிறைக் கணைக்கால்*
*தொடைஅமை பல்மலர்த் தோடுபொதிந்து யாத்த*
*குடைஓர் அன்ன கோள்அமை எருத்தின்*
*பாளை பற்றழிந்து ஒழியப் புறம்சேர்பு*
*வாள்வடித் தன்ன வயிறுஉடை பொதிய*
*நாள்உறத் தோன்றிய நயவரு வனப்பின்*
*ஆரத் தன்ன அணிகிளர் புதுப்பூ*
*வார்உறு கவரியின் வண்டுஉண விரிய*
*முத்தின் அன்ன வெள்வீ தாஅய்*
*அலகின் அன்ன அரிநிறத்து ஆலி*
*நகைநனி வளர்க்கும் சிறப்பின் தகைமிகப்*
*பூவொடு வளர்ந்த மூவாப் பசுங்காய்......*

---

*அக. 335, மதுரைத் தத்தங் கண்ணனார்.

கணைக்கால் - திரண்ட அடி. ஓரன்ன - ஒருதன்மையான. கோள் - காய்கொள்ளுதல். பொதிய - மூடியன. நயவரு - விருப்பமான. வீ - பூ. தாஅய் - பரவி. அலகு - பலகறை. ஆலி - ஆலங்கட்டி. தகைமிக - அழகு மிக.

## பொய்கைக் கரை

இளவேனிற் காலத்தில் ஆற்றங்கரையும் பொய்கைக் கரையும் அழகாக விளங்குகின்றன. தழைத்த மரங்கள், அழகிய அரும்புகள், குயிலின் இனிய குரல், மலர்ப் பொடி களின் மணம் இவை அனைத்தும் அழகுக்கு அழகு செய் கின்றன.

நீண்ட கரை உடைய கானாற்றில் ஒரு காலத்தில் வேகமாக வெள்ளம் வந்துகொண்டிருந்த ஆறு அது. அதில் இப்போது நீர் அற்று அற்றுச் சிறிதாக ஓடுகின்றது. மணல் பரந்த துறைகளை அடுத்து மடுக்கள் உள்ளன. பொழில்கள் உள்ளன. காஞ்சி மரங்கள் பூத்திருக்கின்றன. அவற்றின் தாதுக்கள் மணல்மேடுகளில் உதிர்ந்துள்ளன. புதிய மணம் கமழ்கின்றது. மாமரத்தில் தாதுக்களைக் கோது கின்றன குயில்கள். நீலமணிபோன்ற நிறம் உடைய அந்தக் குயில்கள் கூவும் குரல்கள், நாள்தோறும் நடுநிலையில் நின்று ஏதோ உண்மையை எடுத்துரைத்தல் போல் முறையாக உள்ளன. கோங்க மரங்களும் இலவ மரங்களும் பூத்துள்ளன. கூட்டமான வண்டுகள் பொன்னிறமான கோங்க மலர் களின் தாதுக்களைச் செந்நிற இலவம் பூக்களில் உதிர்க் கின்றன. அவை, கடைகளில் விற்பவர் பவளச் செப்புக் களில் பொன்பொடியைச் சொரிந்து வைத்தல் போல் தோன்றுகின்றன.

> நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅய்
> அவிர்அறல் கொண்ட விரவுமணல் அகன்துறைத்
> தண்கயம் நண்ணிய பொழில்தொறும் காஞ்சிப்
> பைந்தாது அணிந்த போதுமலி எக்கர்
> வதுவை நாற்றம் புதுவது கஞல

*மாநனை கொழுதிய மணிநிற இருங்குயில்*
*படுநா விளியான் நடுநின்று அல்கலும்*
*உரைப்ப போல ஊழ்கொள்பு கூவ*
*இனச்சிதர் உகுத்த இலவத் தாங்கண்*
*சினைப்பூங் கோங்கின் நுண்தாது பகர்நர்*
*பவளச் செப்பின் பொன்சொரிந் தன்ன......**

தமிழ்நாடு நீர்வளம் மிகுந்திருந்த காலம் அது. பொய்கைகளில் நீர் வற்றாமல் நிறைந்துள்ளது. தாமரை ஆம்பல் முதலியவை என்றும் பூத்து விளங்குகின்றன. பொய்கைக் கரையில் சேம்பு முதலியவை தாமே செழித்து விளைந்திருக்கின்றன. பொய்கை வற்றாத நீர் உடையது ஆகையால், நீர் நாய்கள் குடும்பம் குடும்பமாக வாழ்கின்றன. வாளை முதலிய மீன்களும் நிரம்ப உள்ளன. இத்தகைய இயற்கை வளத்தை எடுத்துரைக்கும் புலவர், அங்கு வாழும் மக்களும் வளமாக வாழ்கின்றனர் என்பதை விளக்குகிறார். மகளிர் தேறல் அருந்திப் பாடி மகிழ்வதையும் மரநிழலில் குரவைக் கூத்து ஆடிக் களிப்பதையும் காட்டுகிறார்.

பொய்கையின் கரையில், சேம்பு வளர்ந்திருக்கிறது. அதன் அகன்ற இலையோடு பாசியும் நிறைந்துள்ளது நீர்ப் பரப்பு. அங்கே பெண்நீர்நாய் உணவு இல்லாமல் குட்டியுடன் தங்கியிருக்கிறது. அதன் துன்பத்தைப் போக்குவதற்காகக் காலையில் இரை தேடப் புறப்படுகிறது ஆண்நீர் நாய். பொய்கையிலே வாளை எதிர்ப்பட அதைப் பற்ற

*அக. 25, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்.

கடும்புனல் - வேகமான நீர். சாஅய் - மெலிந்து, அற்று. எக்கர் - மணல்மேடு. கலுல - மிக. அல்கலும் - நாள்தோறும். ஊழ்கொள்பு - முறைகொண்டு. சிதர் - வண்டு. பகர்நர் - விற்பவர்.

முயல்கிறது. அது எளிதில் அகப்படாமையால் அதனோடு போர் செய்கிறது. வாளையும் நீர்நாயும் செய்யும் போரால் நீர்த்துறையே கலங்கிவிடுகிறது. நீர் மொள்ள வரும் மகளிர் கலங்கல் தெளியும் வரையில் தேறல் அருந்தி அழகிய குடங்களை வைத்துவிட்டுத் தம்தம் கணவன்மாரின் பரத்தைமையைப் பாடிக் காஞ்சி மரத்தின் நிழலில் குரவை ஆடுகிறார்கள்.

குழல்கால் சேம்பின் கொழுமடல் அகல்இலைப்
பாசிப் பரப்பின் பறழொடு வதிந்த
உண்ணாப் பிணவின் உயக்கம் சொலிய
நாள்இரை தரீஇய எழுந்த நீர்நாய்
வாளையோடு உழப்பத் துறைகலுழ்ந் தமையின்
தெண்கள் தேறல் மாந்தி மகளிர்
நுண்செயல் அங்குடம் இரீஇப் பண்பின்
மகிழ்நன் பரத்தைமை பாடி அவிழ்இணர்க்
காஞ்சி நீழல் குரவை அயரும்
தீம்பெரும் பொய்கை......*

## எல்லைப் பூசல்

வயல் சூழ்ந்த மருத நிலத்தை அடுத்துக் கடற்கரை உள்ளது. வயல்களில் உழவர்கள் நெல் விளைத்துக் குவிக்க, கடற்கரையில் பரதவர் உப்பு விளைத்துக் குவிக்கின்றனர். நெற்போர் அடிக்கும் காலத்தில் காற்றில் எழுந்த துரும்புகள் உப்புவயலில் படிந்து உப்பின் தன்மையைக் கெடுக்-

---

*அக. 336, பாவைக் கொட்டிலார்.

குழல் - துளை. கால் - தண்டு. பறழ் - குட்டி. வதிந்த - தங்கிய. பிணவு - பெண்(நீர் நாய்). உயக்கம் - வாட்டம். சொலிய - தீர்க்க. நாள் - காலை. தரீஇய - கொண்டுதர. செயல் - வேலைப்பாடு. இரீஇ - வைத்து. அயரும் - ஆடும்.

கின்றன. உழவர் செயலால் தம் உப்புக் கெட்டது என்று பரதவர் போருக்கு எழுகின்றனர். முதிய சான்ரோர் பிணக்கைத் தீர்க்க முன்வருகின்றனர். உழவர்களிடமிருந்து பரதவர்க்குத் தேறல் வாங்கித் தந்து அமைதி உண்டாக்குகின்றனராம். இவ்வாறு இரு நிலத்தார்க்கு இடையே பூசல் விளைவதாகப் பாடும் புலவர், இதன் வாயிலாக இரு நிலமும் அடுத்தடுத்துள்ள இயல்பையும் தொழில்வளத்தையும் விளக்குகிறார்.

மருத மரங்கள் தாழ்ந்த கிளைகளோடு நன்றாக அழகு பெற்றிருக்கின்றன. நெற்களம் நீரால் சூழப்பட்டுள்ளது. அந்தக் களம் பொலிவு பெறுமாறு நெற்போரினைப் பிரித்துக் கடாவிடுகிறார்கள், கள் உண்ட உழவர்கள். பிறகு எருதுகளை அவிழ்த்துவிட்டு, வேகமாகக் காற்று வீசும்போது நெல்லைத் தூற்றுகிறார்கள். தூற்றும்போது எழுந்து பரந்த துரும்புகள் முழுதும் உப்பளப் பாத்திகளில் இடம் இல்லாமற் போகுமாறு பரந்து விழுகின்றன. இனிமை மிகுந்த வெள்ளை உப்பு, இந்தத் துரும்புகளால் கெட்டுப் போனமையால், பரதவர் சினம்கொண்டு உழவர்களோடு மாறுபட்டு எதிர்த்துக் கைகலந்து சேற்றை எடுத்தெறிந்து போர் செய்கின்றனர். இந்தப் போரைக் கண்ட முதியவர்கள் முன் வந்து கைக்கலப்பை விடுவித்து, உழவர்களின் தேன்முதிர்ந்த தேறலைப் பரதவர்க்குக் கொடுத்து அமைதி உண்டாக்குகின்றனர்.

**தாழ்சினை மருதம் தகைபெறக் கவினிய**
**நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்புஅழித்துக்**
**கள்ஆர் களமர் பகடுதளை மாற்றிக்**
**கடுங்காற்று எறியப் போகிய துரும்புடன்**

காயல் சிறுதடி கண்கெடப் பாய்தலின்
இருநீர்ப் பரப்பின் பனித்துறைப் பரதவர்
தீம்பொழி வெள்ளுப்புச் சிதைதலின் சினைஇக்
கழனி உழவரொடு மாறுஎதிர்ந்து மயங்கி
இருஞ்சேற்று அள்ளல் எறிசெருக் கண்டு
நரைமூ தாளர் கைபிணி விடுத்து
நனைமுதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்......*

---

அக. 366, குடவாயிற் கீரத்தனார்.

கவினிய - அழகு பெற்ற. போர்பு - நெற்கதிரின் போர். களமர்-உழவர். பகடு - எருது. தளை - கட்டு. காயல் - உப்பு. கண் - இடம். சினைஇ - சினம் கொண்டு. அள்ளல் - சேறு. நனை - தேன். நுளையர் - பரதவர்.

# 4. கடற்கரை

நெய்தல் என்னும் கடற்கரைப் பகுதி மற்ற நிலங்களைப் போல் வளம் இல்லாதது ; ஆயினும் 'வானம் வேண்டா வறன்இல் வாழ்க்கை' என்று அங்கு வாழ்வோரின் வாழ்க்கை சிறப்பிக்கப்படுகிறது. எந்த நிலப்பகுதியில் நீர் அற்றுப் போனாலும் கடல் வற்றுதல் இல்லை. ஆதலின் வறட்சி என்பது கடற்கரை அறியாதது.

## தாழை மணம்

கடற்கரையில் வளரும் மரங்களில் புலவர் உள்ளங்களைக் கவர்வன தாழை மரங்கள். அழகில்லாமல் காணப்படும் அவற்றின் தோற்றமும் புலவர்நெஞ்சில் சில உவமைகள் எழச் செய்கின்றன. தாழம்பூவின் அமைப்பு மட்டும் தனிச் சிறப்பு உடையது. அதன் மணமோ, கடற்கரையின் புலால் நாற்றத்தையே மாற்ற வல்ல பெருமை உடையது.

கடற்கரையில் மணல்மேடு உயரமாக உள்ளது. அங்கே கழிமுள்ளிச் செடிகள் வளர்ந்திருக்கின்றன. அருகே தாழைமரங்கள் செழித்திருக்கின்றன. அவற்றின் மேற்பகுதி பேயின் தலை போல் காணப்படுகின்றது. அடிப் பகுதி சருச்சரை உடையது. தாழைப்பூக்களின் நீண்ட புற இதழ்கள் இரு வரிசையிலும் பற்கள்போல் முள் உடையனவாக இருக்கின்றன ; உள்ளே இருக்கும் மெல்லிய இதழ்களைக் காவல் புரிவன போல் அவை தோன்றுகின்றன. வயிற்றில் (உட்புறத்தில்) தாது கொண்டுள்ளன. அத்தகைய பேரரும்புகள் பல ஒருங்கே தூய்மையாக விரிந்து மலர்கின்றன. அவற்றின் மணம் கடற்கரையின் புலால் நாற்றத்

தைத் தாக்கி அழிக்கின்றன ; எங்கும் பூமணமே கமழ்கின்றது.

முண்டகம் கெழீஇய மோட்டுமணல் அடைகரைப்
பேஎய்த் தலைய பிணர்அரைத் தாழை
எயிறுடை நெடுந்தோடு காப்பப் பலவுடன்
புலவுப்பொருது அழித்த பூநாறு பரப்பின்......

தாழை முள்ளை எயிறு என்று கூறியதும், தோடு காப்பதாகக் கூறியதும் உருவக நயம் உடையன. புலவரின் கற்பனையில் வெறுந் தாழம்பூ இல்லை ; வாள் ஏந்திய வீரர் காக்கும் காவல் மிக்க கோட்டையே அந்தப் பூவில் உள்ளது. அந்த நினைவு மாருமல் தொடர்ந்து வருதலாலேயே, புலால்நாற்றத்தை மாற்றும் பூமணம் என்னுமல், புலால் நாற்றத்தைப் போரிட்டு அழித்த பூமணம் என்று, பொருது என்னும் சொல்லை ஆள்கிறுர்.

## கடல் ஆமை

ஆமை முதலிய உயிர்களின் வாழ்க்கையைப் புலவர் எவ்வாறு கண்டறிந்தனரோ, தெரியவில்லை. ஆமை எங்கே முட்டை இடும், பிறகு என்ன செய்யும், எவ்வாறு காவல் புரியும், காவல் புரிவது ஆண் ஆமையா பெண் ஆமையா என்பவற்றை எல்லாம் நுணுகி ஆராய்ந்து, அவற்றின் குடும்ப வாழ்க்கையைப் பாடியுள்ளனர்.

---

*அக. 130, வெண்கண்ணஞர்.

முண்டகம் - கழிமுள்ளி. கெழீஇய - பொருந்திய. மோட்டு - உயர்ந்த. பிணர் - சருச்சரை. அரை - அடி. எயிறு - பல். தோடு - இதழ். வாலிதின் - தூய்மையாக, வெண்ணிறமாக. விரீஇ - விரிந்து. புலவு - புலால் நாற்றம்.

கடற்கரையில் நிறையக் கொடி விட்டு அரும்பு தழைத்திருக்கிறது. சூல் நிறைந்த ஆமை ஒன்று அந்தக் கொடிகளைச் சிதையுமாறு இழுத்து, வளைந்த உப்பங்கழியின் மணல் மேட்டின் பக்கம் சேர்த்து, அவற்றிடையே மறைத்து முட்டை ஈனுகின்றது. அந்த முட்டைகள் யானைக்கொம்பால் செய்த வட்டுப் போல் உருவம் அமைந்து, புலால் நாறுகின்றன. பெண்யாமை ஈன்றுவிட்டுச் சென்ற பிறகு, ஆண் ஆமை குஞ்சு வெளிப்படும் வரையில் அவற்றைக் காத்துவருகின்றது.

அடும்புகொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்
குப்பை வெண்மணல் பக்கம் சேர்த்தி
நிறைச்சூல் யாமை மறைத்துஈன்று புதைத்த
கோட்டுவட்டு உருவின் புலவுநாறு முட்டைப்
பார்ப்புஇடன் ஆகும் அளவைப் பகுவாய்க்
கணவன் ஓம்பும்......*

## காக்கையின் கனவு

கடலிலே சுறாமீன் திரிகிறது. அதனால் பரதவர் மீன் வேட்டையை நிறுத்தியுள்ளனர். அவர்கள் மீன்பிடித்துக் கரைக்குக் கொண்டுவந்தால், அவற்றை உலர்த்தினால், கடற்கரையில் வாழும் காக்கைக்கு வயிறார உணவு கிடைக்கும்; இறாமீன் முதலியவற்றைப் பெற்று மகிழும். ஆனால் சுறாமீன் திரிவது மீன்பிடிப்பதற்கு இடையூறாகவே, காக்கைக்குப் போதிய உணவு இல்லை. இவ்வளவுதான் புலவர் கண்டவை,

*அக. 160, குமுழி ஞாழலார் நப்பசலையார்.

கொடு - வளைந்த. குப்பை - திரண்ட. சூல் - கர்ப்பம். கோட்டு-யானைக்கொம்பால் செய்த. இடன் ஆகும்-வெளியாகும். அளவை - அளவில். பகுவாய் - பிளந்த வாய். கணவன் - ஆண் ஆமை.

அறிந்தவை. ஆனால் அவர் கற்பனையில் உணர்ந்தவை இவ் வளவில் நிற்கவில்லை. உணவு குறைந்தபோது, மக்கள் எவ்வாறு உணர்வார்களோ அவ்வாறு காக்கையும் உணர்வ தாகப் புலவர் கற்பனை செய்கிறார். காக்கை கனவு காண் கிறதாம். இறாமீன் கிடைப்பதாகக் கனவு காண்கிறதாம். இவ்வாறு அதன் ஏக்கம் கனவில் புலப்படச் செய்கிறார். அந்நிலையிலும் - வறுமை நிலையிலும் - காக்கை தனியாகத் துன்புறாமல், துணையோடு கூடி வாழ்வதால், கனவுகாணும் அளவிலும் அதன் வாழ்க்கையில் அமைதி இருப்பதாகக் காட்டுகிறார்.

தாழைமரத்தின் தாழ்ந்த கிளையில் சிறிய கடற்காக்கை துன்பத்தோடு தங்கியிருக்கிறது. விருப்பம் மிக்க தன் பெடையுடன் (பெண் காக்கையுடன்) தங்கியிருக்கிறது. சுறாமீன் திரியும் அக்கடலில் மீன்வேட்டை ஆடுதல் நிறுத்தப் பட்டுள்ள நள்ளிரவில் அக் காக்கை உறங்குகின்றது. உறங்கும்போது வெண்ணிறமான இறாமீன் கிடைத்து உண்பதாகக் கனவு காண்கிறது.

> கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
> கோட்டுமீன் வழங்கும் வேட்டம்மடி பரப்பின்
> வெள் இறாக் கனவும் நள்ளென் யாமம்......

## வீரப் பெருமீன்

மீன்வேட்டை, கடற்கரையில் வாழும் மக்களின் முதல் தொழில். பெரிய பெரிய மீன்களை எறிஉளி கொண்டு

*அக. 170, மதுரைக் கள்ளில் கடையத்தன் வெண்ணாகனார்.
காமர் - விருப்பமான. கோட்டுமீன் - கொம்பு உள்ள சுறா. வழங்கும் - திரியும். மடி - இல்லாமற்போன.

கொன்று கரைக்குக் கொண்டுவருவதில் அவர்கள் பெரு மிதம் கொள்கின்றனர். அந்த மீன்களோ கடலில் உரிமை யோடு வாழ்ந்தவை ஆதலால், எளிதில் அவர்களுக்கு அடங்குவதில்லை. உளி தாக்கிப் புண்பட்டு இரத்தம் சொரியும் நிலையிலும் துள்ளிக் குதித்துக் கடலைக் கலக்கும் வீரத்தை அவற்றிடையே காட்டுகிறார் புலவர். கடல் போர்க்களம் போல் தோன்றுமாறு செய்கிறார். அவை செந்நிறக் குருதி சொரிய, நீர்த்திவலை தெறிக்க, ஒளிவீசித் துள்ளும் காட்சியில் வானவில்லைக் காட்டுகிறார்.

பரதவர், குறுகிய இறப்பு (இறவாணம்) உடைய குடிசைகளில் வாழ்பவர்கள் ; கொலைத் தொழிலை விரும்பு பவர்கள். அவர்கள் உளி எறிந்து தாக்கிப் பெரிய மீனைத் தாக்குகிறார்கள். அந்த மீன் செருக்கு உடையது. உளி பட்ட புண்ணிலிருந்து ஒழுகிய இரத்தத்தால் கடலின் நீர் நிறம் மாறுபட, வானத்தை அழகுபடுத்தும் வானவில்போல் வளைந்து தாவுகிறது. பசிய திவலைகளை உடைய, அலைகள் மிக்க கடலைக் கலக்கி, வலிமை குன்றித் திமில் பக்கமாகச் செல்கின்றது.

குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்
எறிஉளி பொருத ஏமுறு பெருமீன்
புண்உமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட
விசும்பணி வில்லின் போகிப் பசும்பிசிர்த்
திரையயில் அழுவம் உழக்கி உரன்அழிந்து
நிரைதிமில் மருங்கில் படர்தரும்*

---

*அக. 210, உலோச்சனார்.

குறி - சிறிய. ஏமுறு - செருக்குக் கொண்ட. பிசிர் - துவலை, அழுவம் - காடு. உழக்கி - கலக்கி.

## மாலைக் கடற்கரை

கடற்கரையைப் பாடும் புலவர் அங்கே உணர்வு மிகும் நேரமாக (சிறுபொழுதாக) கதிரவன் மறையும் வேளையைக் கொண்டுள்ளனர். கடற்கரையில் கதிரவன் மறையும் நேரத்தில் காணும் காட்சிகளைத் தொகுத்துரைக்கிறார் புலவர் ஒருவர். அவருடைய சொல்லோவியத்தில் உப்பங்கழியில் உள்ள மலர்கள் கூம்புவதைக் குறிக்கும்போது, ‘ கழிமலர் கமழ்முகம் கரப்ப ’ என்னும் தொடர் கற்பனைநயம் செறிந்ததாக அமைந்துள்ளது. மலர்கள் தம் மணம் கமழும் முகத்தை மறைத்துக்கொள்கின்றனவாம். இவ்வாறு ஓரிரு சொற்களால் ஓவியம் உயிர்பெற்று விளங்கச்செய்யும் ஆற்றல், கற்பனைத் திறன் மிக்க புலவர்க்கே உள்ளதாகும்.

ஞாயிற்றின் மண்டிலம் வெப்பமும் ஒளியும் குறைகின்றது. மேற்குத் திசையில் உள்ள மலை செக்கர் ஒளியால் நிறம் விளங்குகிறது. வண்டுகளின் கூட்டம் மலர்களில் பாய்ந்து ஊதுகிறது. தாழைச் சோலைகளின் மேல் நாரைக்கூட்டம் ஒலிக்கிறது. கடற்கரையில் விளையாடிக் கொண்டிருந்த நண்டு வளைக்குள் செல்கிறது. அலைகள் ஒலி அடங்குகின்றன. மீன்படகுகள் தொழில் மறந்து அமைதியாகக் கிடக்கின்றன. செவ்வானம் தோன்றுகிறது. துணையோடு கூடிய அன்றில்பறவை மணல்மேட்டில் பனைமரத்தின் உள்மடலில் சேர்கிறது. கழியில் மலர்ந்த மலர்கள், மணம் கமழும் முகங்களை மறைக்கின்றன (கூம்புகின்வன). பொழில் சூழ்ந்த வீட்டில் புன்னையின் நறுமண

---

*எற்பாடு

நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும் - தொல். பொருள். 8.

மலர்கள் பொன்நிறம்கொண்டு மலர்கின்றன. இவ்வாறு பகலை மெல்ல மெல்லப் போக்கி இரவு வருகின்றது.

*மண்டிலம் மழுக மலைநிறம் கிளர*
*வண்டினம் மலர்பாய்ந்து ஊத மீமிசைக்*
*கண்டல் கானல் குருகினம் ஒலிப்பக்*
*கரைஆடு அலவன் அளைவயின் செறியத்*
*திரைபாடு அவியத் திமில்தொழில் மறப்பச்*
*செக்கர் தோன்றத் துணைபுணர் அன்றில்*
*எக்கர்ப் பெண்ணை அகமடல் சேரக்*
*கழிமலர் கமழ்முகம் கரப்பப் பொழில்மனைப்*
*புன்னை நறுவீ பொன்நிறம் கொளாஅ*
*எல்லை பைப்பயக் கழிப்பி எல்உற......*

ஔவையார்க்கும் இந்தக் காட்சி கவர்ச்சியாகத் தோன்றியது. வெள்ளாங்குருகுகள் மாலைபோல் ஒழுங்கு பெற வானில் பறந்து செல்பவை. அவற்றின் வெண்ணிறக் காட்சி ஔவையார்க்குக் கூதள மலரால் புனைந்த வெண்ணிற மாலையை நினைவூட்டியது. வெள்ளாங்குருகுகள் தாவிப் பறக்கும் விரைவையும் கண்டார் புலவர். வானத்தில் விசையோடு எறிந்த கூதளமாலை போல் பறந்து செல்வதாகக் கூறினார்.

---

*அக. 260, மோசிக் கரையனார்.

மீமிசை - மேலே. கண்டல் - தாழை. கானல் - சோலை. குருகினம் - பறவையினம் (நாரையினம்). அலவன் - நண்டு. அளைவயின் - வளையில். செறிய - சேர. திரை - அலை. பாடு - ஒலிய. அவிய - அடங்க. திமில் - மீன்படகு. எக்கர் - மணல்மேடு. பெண்ணை - பனை. கரப்ப - மறைக்க.

விசும்புவிசைத் தெறிந்த கூதளங் கோதையின்
பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ*

## நாரையின் துயர்

கடற்கரையில் ஒரு துன்பக் காட்சியை எடுத்துரைக்கிறார் நக்கீரர். பரதவச் சிறுவர் இட்ட வலையில் ஆண் நாரை ஒன்று அகப்பட்டுக்கொள்கிறது. அதன் துணையான பெண் நாரை தன் கூடு உள்ள பனைமரத்தில் உட்கார்ந்து வருந்துகிறது. கூட்டில் உள்ள குஞ்சுகளைத் தழுவியவாறே துயருற்று, இரைதேடி உண்ணவும் மனம் இல்லாமல் வாடுகிறது. இடையிடையே தன் துணையை அன்பான குரலால் கூவி அழைக்கிறது.

கரிய குழம்பிய சேறு உள்ள வயலில் காலையில் வேட்டையாடச் செல்கின்றனர் சிறுவர் சிலர். கொழுமையான மீனை உணவாகக் கொண்ட அந்தச் சிறுவர்களின் (நுண்ணிய கயிற்றால் ஆகிய அழகிய) வலையில் அகப்படுகின்றது ஆண்நாரை. அதன் வருகையை எதிர்பார்த்து வருந்துகிறது பெண்நாரை. மாலைவேளையில் தனித்துத் தங்கியிருக்கும் போது, இரையும் தின்னுமல் வருந்துகிறது. துன்பப்படும் குஞ்சுகளைத் தழுவிக்கொண்டு, பனைமரத்தின்மேல் இருந்து அன்பு தோன்ற ஒலிக்கிறது.

இருஞ்சேற்று அள்ளல் நாட்புலம் போகிய
கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிருஅர்
நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென

---

*அக. 273. கூதளங் கோதை - கூதாளி மாலை. வாப்பறை - தாவிப் பறத்தல். வளைஇ - வளைந்து.

*அல்குறு பொழுதின் மெல்கிரை மிசையாது*
*பைதல் பிள்ளை தழீஇ ஒய்யென*
*அங்கண் பெண்ணை அன்புற நரலும்......**

## பரதவர் வாழ்க்கை

பரதவர் கடலுக்குள் சென்று மீன்பிடித்துக் கரைக்குத் திரும்பியதும், அவர்கள் முதலில் செய்வது, சுற்றம் எல்லாம் ஒன்றுகூடிப் பெற்ற மீன்களைப் பங்கிடுதலே ஆகும். உழவர்களிடையே காணப்படும் வேளாண்மை, அவர்களிடமும் காணப்படுகிறது. இரவலர் பலர்க்கும் வாரிக் கொடுக்கும் கொடை உள்ளது.

கரையில் மீன்படகுகள் அணுகியதும், அவற்றை அனைவரும் கூடி இழுத்துக் கரைசேர்க்கும் காட்சிக்கு உவமையாக அமைவது, கடற்கரையிலிருந்து உள்நாட்டிற்குச் செல்லும் உப்புவண்டிகளைச் செலுத்தும் காட்சியே ஆகும். கடலிலிருந்து கரைக்கு வரும் ஒரு காட்சிக்கு, கரையிலிருந்து நாட்டுக்குள் செல்லும் மற்றொன்று உவமையாவது நயமாக உள்ளது.

செம்படவர்வலை சிறு சிறு கண்கள் உடையது. நீண்ட கயிறு கட்டப்பட்டது. அதுகொண்டு கடலின் பெருமை கெடுமாறு கூட்டமான மீன்களைப் பிடிக்கிறார்கள் பரதவ மக்கள். துணையோடு கூடிய மகிழ்ச்சி உடையவராய் இளையோரும் முதியோருமாய்ச் சுற்றத்தோடு நெருங்கி, பிடித்த மீன்களை இழுத்துக் கரையில் சேர்க்கின்றார்கள்.

---

*அக. 290, நக்கீரர்.

பட்டென - அகப்பட்டுக்கொள்ள. மிசையாது - தின்னாமல். பைதல் - துன்பம். பிள்ளை - குஞ்சு.

அரிய துறைகளில் உப்பு வாணிகர் செலுத்தும் வண்டிகளை எருதுகள் கூடி இழுப்பதுபோல், சிறுமணல் செறிந்த கடற்கரையில் ஆரவாரம் செய்து இழுக்கிறார்கள். பெரிய களத்தில் நெல்லைத் தொகுத்த உழவர்கள் வந்தோர்க்கு வாரி வழங்குதல்போல், அவர்களும் இரந்தவர்களுடைய வறிய கலம் நிறையுமாறு மீன்களைச் சொரிந்து தருகிறார்கள். பிறகு பல கூறுகளாக அமைத்து விலைகூறி விற்கிறார்கள். விற்றபின், உயர்ந்த மணல்கரையில் தூங்குகிறார்கள்.

நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலைக்
கடல்பாடு அழிய இனமீன் முகந்து
துணைபுணர் உவகையர் பரதமாக்கள்
இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி
உப்புஒய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பகடு ஒப்பக் குழீஇ
அயிர்திணி அடைகரை ஒலிப்ப வாங்கிப்
பெருங்களம் தொகுத்த உழவர் போல
இரந்தோர் வறுங்கலம் மல்க வீசிப்
பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுஉயர் திணிமணல் துஞ்சும்......*

பரதவர் வளைந்த படகில் சென்று மீன்வேட்டை ஆடுகின்றனர். வேட்டை கைகூடுகின்றது. பெரிய புலால்

*அக. 30, முடங்கிக் கிடந்த நெடுஞ் சேரலாதன்.

வலந்த - கட்டிய. பாடு - பெருமை. துவன்றி - நெருங்கி. ஒய் - செலுத்தும். உமணர் - உப்புவாணிகர். ஒழுகை - வண்டி. நோன்பகடு - வலிய எருது. வாங்கி - இழுத்து. மல்க - நிறைய. கொள்ளை - விலை. கோடு - கரை.

நாற்றம் வீசும் சிறு குடிகளை உடைய தம் ஊர்க்குத் திரும்பு கின்றனர். சிறுசிறு கண்களை உடைய அழகிய வலையின் பயனைப் பாராட்டுகின்றனர். தாம் பிடித்த கொழுமையான கண்களை உடைய அயிலைமீனைப் பலர்க்கும் பகுத்துக் கொடுக்கின்றனர்.

கொடுந்திமில் பரதவர் வேட்டம் வாய்த்தென
இருப்புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங்கண் அவ்வலைப் பயம்பா ராட்டிக்
கொழுங்கண் அயிலை பகுக்கும்......*

*அக. 70, மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனார்.

கொடு - வளைந்த. திமில் - படகு. வாய்த்தென - வாய்க்க. பாக்கம் - கடற்கரை ஊர். பயம் - பயன்.

# 5. வானம்

## மழை ஓசை

**வா**னத்தில் விளங்கும் காட்சிகளுக்குக் கணக்கு இல்லை. அவற்றின் மாறுதல்களோ வியப்பூட்டுவன. தண் மதியும் விண்மீன்களும் இரவில் ஒளிவீசி வானத்தை அழகு படுத்துவது ஒருபுறம் இருக்க, ஓயாமல் மாறி மாறித் திரிந் தும் பல்வேறு வண்ணக் கோலங்கள் கொண்டும் முகிற் குலங்கள் நல்கும் எழில் விருந்து எத்தகையது! கடலி லிருந்து நீரை முகந்து கருவுற்ற மாதர்போல் வானில் இவர்ந்து சுமக்கமுடியாமல் நொந்து மழைபொழிவதாகப் புலவர் செய்யும் கற்பனையும் அழகாக உள்ளது. சுமை தாங்கமுடியாமல் துன்புற்று நீரைப் பொழிந்துவிட்டு இளைப் பாறுகின்றனவாம்! 'பழங்கண் (துன்பம்) கொண்ட கொழும்பல் கொண்மூ' என்கிறார் இடைக்காடனார். போழ்ந்த போல மின்னி, தாழ்ந்த போல வந்து, சோர்ந்த போலச் சொரிந்து என்று அவர் அடுக்கிக் கூறும் தொடர் கள் மழை பொழிவது போன்ற ஒலிநயத்தை விளைக்கின் றன. புலவரின் உள்ளம், பெய்யும் மழையுடன் ஒன்றுபட்டு, அதன் ஓசையையே உணர்ந்து நம் செவியில் விழுமாறு பாட்டில் வடித்துத் தருகிறது. இடிமுழக்கம் இல்லாமல் பெய் யும் மழை, புலவர்செவிக்கு இனிய யாழோசையாக இன்பம் பயக்கிறது.

மேகங்கள் கடலில் நீரை முகந்து, திசையெல்லாம் இருண்டுசென்று, பரந்த உலகம் மறையுமாறு வலமாக எழுகின்றன. நீரைச் சுமந்து வருந்தித் துன்பம்கொண்ட

வளமான பல மேகங்கள், வானைப் பிளப்பன போல் ஒருங்கே மின்னுகின்றன. மண்ணில் இறங்குவதற்குத் தாழ்ந் தனபோல நெருங்கி நெருங்கி வருகின்றன. நீரைத் தாங்க மாட்டாமல் சோர்ந்தனபோல் பலமுறையும் பொழிகின்றன. இடியும் குமுறலும் இல்லாமல் பாணரின் வடித்தல் பொருந் திய நல்ல யாழின் நரம்பு ஒலித்தாற்போல் இனிய குரலோடு மிக்க துளியைப் பெய்கின்றன.

மாக்கடல் முகந்து மாதிரத்து இருளி
மலர்தலை உலகம் புதைய வலன்ஏர்பு
பழங்கண் கொண்ட கொழும்பல் கொண்மூப்
போழ்ந்த போலப் பலஉடன் மின்னித்
தாழ்ந்த போல நணிநணி வந்து
சோர்ந்த போலச் சொரிவன பயிற்றி
இடியும் முழக்கும் இன்றிப் பாணர்
வடிஉறு நல்யாழ் நரம்புஇசைத் தன்ன
இன்குரல் அழிதுளி தலைஇ......*

திசைகளை எல்லாம் மூடிக்கொள்வதுபோல் கருநிற முகில்கள் வானமெங்கும் படரும் காட்சி அப்புலவர்க்கு உலகம் மாய்வது போல் தோன்றுகிறது. இப்பாட்டில் காணும் மழைக் காட்சியில் அமைதியும் யாழின் இனிமையும் இல்லை. அச்சமும் அதிர்ச்சியும் உள்ளன. விண்ணை பிளந்துவிடுவது போன்ற மின்னல் அச்சம் விளைக்கிறது. இடி முழக்கம் நிலத்தின் நெஞ்சு திடுக்கிடுவதுபோல்

---

*அக. 374, இடைக்காடனார்.

மாதிரத்து - திசைகளில். பழங்கண் - துன்பம். கொண்மூ - மேகம். போழ்ந்த - பிளந்தன. நணி - அருகே. வடி - வடித்துத் திருத்தல். அழிதுளி - மிக்க துளி. தலைஇ - ஏற்பட்டு - பெய்து.

உள்ளது. துஞ்சுவதுபோல, இமைப்பதுபோல, ஏறுவது போல என்று அடுக்கிவைத்துக் கூறும் தொடர்களும் மற்றொருவகை மழையோசையை நம் கற்பனைச் செவியில் விளைக்கின்றன.

எல்லாம் மாய்வதுபோல் எங்கும் இருண்டு தோன்று கிறது. கண் இமைப்பதுபோல் மின்னுகிறது. அவ்வாறு மின்னும்போது விண் பிளந்துபோவதுபோல் இருக்கிறது. நீர்கொண்டு வானத்தில் மேலே ஏறுவதுபோல் மேகம் ஒலி மிகுந்து பரவிச்செல்கிறது. நிலத்தின் நெஞ்சு திடுக்கிடும்படியாக ஓயாமல் இடிக்கிறது. இவ்வாறு பலவும் செய்து மிக்க நீரைப் பொழிகிறது மழை.

துஞ்சுவது போல இருளி விண்பக
இமைப்பது போல மின்னி உறைக்கொண்டு
ஏறுவது போலப் பாடுசிறந்து உரைஇ
நிலம்நெஞ்சு உட்க ஓவாது இலத்தாங்கு
ஆர்தளி பொழிந்த வார்பெயல்......*

## இருளும் மின்னலும்

மழை பெய்துகொண்டே இருக்கிறது. எங்கும் நீர் மயமாகக் காணப்படுகிறது. நிலம் வேறாகவும் வானம் வேறாகவும் இருந்த நிலை மாறி, இரண்டும் நீரால் ஒன்று பட்டுக் கலப்பது போல் உள்ளது. கதிரவன் எங்கே

---

*அக. 139, இடைக்காடனார்.

பக - பிளக்க. உறை - நீர். பாடு - ஒலி. உரைஇ - உராய்ந்து. உட்க - துணுக்கம் கொள்ள. ஓவாது - ஓயாது. சிலைத்து - இடித்து. பெயல் - மழை.

உள்ளான் என்று அறியமுடியாதவாறு வானம் தன் ஒளி யிழந்து பரந்த மழைமேகங்களால் மறைக்கப்பட்டுள்ளது.

மேகம் கடலின் நீரை முகந்து நிறைந்த சூல் (கருப்பம்) கொள்கிறது. ஒளி மிக்க மின்னலோடு வலமாக எழுந்து முழங்குகிறது. வெயிலால் வாடித் துன்புற்ற பெண்யானை தன் துணையோடு கை மறையும் வெள்ளத்தில் விளையாடுமாறு பெருமழை பெய்கிறது. நிலமும் வானமும் மழையின் கால் களால் பொருந்திச் சேர்ந்திடுமாறு பெய்கிறது. நாழிகை வட்டிலால் நாழிகை அளந்து எண்ணுவோரைத் தவிர, மற்றவர் ஞாயிறு உள்ள இடத்தை அறியாதபடி எங்கும் இருண்டு பெய்கிறது. உலகம் அஞ்சுமாறு எங்கும் பரவிப் பெய்கிறது. இத்தகைய மேகத்தின் சூரலிலும் தண்மை இருக்கிறது.

கடல்முகந்து கொண்ட கமஞ்சூல் மாமழை
சுடர்நிமிர் மின்னொடு வலன்ஏர்பு இரங்கி
என்றாழ் உழந்த புன்தலை மடப்பிடி
கைமாய் நீத்தம் களிற்றொடு படீஇய
நிலனும் விசும்பும் நீர்இயைந்து ஒன்றிக்
குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது
கதிர்மருங்கு அறியாது அஞ்சுவரப் பாஅய்த்
தளிமயங் கின்றே தண்குரல் எழிலி......*

வானைப் பிளப்பதுபோல் தோன்றும் மின்னல், கண்ணை இமைப்பதுபோல் உள்ள மின்னல் என்பன இடைக்காட

*அக. 43, மதுரையாசிரியர் நல்லந்துவனார்.

கமம் சூல் - நிறைந்த கர்ப்பம். வலன் ஏர்பு - வலமாக எழுந்து. இரங்கி - ஒலித்து. என்றாழ் - வெயில். மாய் - மறையும். படீஇய - படிய, மூழ்க. குறுநீர்க் கன்னல் - சிறிது நீரை உடைய நாழிகை வட்டில். பாஅய் - பரவி. எழிலி - மேகம்.

ஞரின் கற்பனை. கடலனார் என்னும் புலவரின் கற்பனையில், மின்னல் இருளைக் கிழித்துக்காட்டுவதுபோல் உள்ளது.

இருள்கிழிப் பதுபோல் மின்னி*

## வானத்தில் போர்

வானவில் கண்ணுக்கு இனிய காட்சியாக உள்ளது. 'உருகெழு திருவில்' என்று புகழப்படும் அது மலைமேல் வளைந்து தோன்றுகிறது. அவ்வாறு திருக்கோலம் இட்டுத் தொடங்கும் மழையின் பயனாக மண்ணுலகம் முற்றும் கவின் பெறுகிறது.

வானவில் மலைபோல் தோன்றுகிறது. அது அச்சம் தருவதாகத் தோன்றுகிறது. மேகம் முரசு போல் முழங்குகிறது. கடலிலிருந்து நீரை எடுத்துவந்து தாழ்ந்து பெரு மழையாய்ப் பெய்கிறது. திசை எல்லாம் மறையுமாறு பரந்து பெய்கிறது. பெரிய நிலப்பரப்பு அழகு பெற்று இன்பம் எய்துகிறது.

மலைமிசைக் குலைஇய உருகெழு திருவில்
பணைமுழங்கு எழிலி பௌவம் வாங்கித்
தாழ்பெயல் பெருநீர் வலன்ஏர்பு வளைஇ
மாதிரம் புதைப்பப் பொழிதலின் காண்வர
இருநிலம் கவினிய ஏமுறு காலை......†

---

*அக. 72, எருமை வெளியனார் மகனார் கடலனார்.

†அக. 84, மதுரை எழுத்தாளன்.

குலைஇய - வளைத்த. உரு - அச்சம். பணை - முரசு. பௌவம் - கடல். ஏர்பு - எழுந்து. மாதிரம் - திசை. காண்வர - காட்சி பெற, அழகாக. கவினிய - அழகுபெற்ற.

புலவர் சிலருடைய கண்ணுக்கு மேகங்களின் மழைக் கோலம் வேந்தர்களின் போர்க்கோலமாய்த் தோற்றம் அளிக்கிறது. இடியொலி முரசொலியாக, மின்னல் வேலின் ஒளியாக, வானவில் வெற்றிவேந்தரின் மார்பில் திகழும் மாலை யாக, புலவர்களின் கற்பனை போர்க்களத்தைக் காண் கின்றது.

மழையின் இடியோசையும் மின்னொளியும் புலவர்க்குப் போர்க்களத்துக் காட்சியை நினைவூட்டுகின்றன. அதனால் முரசுபோல் முழங்குகின்றது என்று மழையைக் கூறும் புலவர், போர்க்களத்துத் தலைவன் உயர்த்திய வேல் போல் மின்னுகிறது என்கிறார்.

*வேய்பயில் அடுக்கம் புதையக் கால்வீழ்த்து*
*இன்னிசை முரசின் இரங்கி...*
*வெல்போர் வழுதி செல்சமத்து உயர்த்திய*
*அடுபுகழ் எஃகம் போலக்*
*கொடிட மின்னிப் பாயின்றால் மழையே..*

அரசனது வேல்போல் மின்னி, அவனது முரசுபோல் முழங்குகிறது என்று கூறிய மற்றொரு புலவர், வான வில்லை யும் உவமைப்படுத்துக் கூறுகிறார். திருமாலின் மார்பின் மாலை போல் வானவில் தோன்றுகிறது என்கிறார்.

*காவியல் நெடுந்தேர்க் கைவண் செழியன்*
*ஆலங் கானத்து அமர்கடந்து உயர்த்த*

---

*அக. 312, மதுரை மருதன் இளநாகனார்.

வேய் - மூங்கில். அடுக்கம் - மலை. வழுதி - பாண்டியன். சமத்து - போர்க்களத்து. அடுபுகழ் - கொன்று பெறும் புகழ். எஃகம் - வேல். பாயின்று - பரவிற்று.

வேலினும் பல்லூழ் மின்னி முரசென
மாயிரு விசும்பிற் கடியிடி பயிற்றி
நேர்க்திர் நிரைத்த நேமியஞ் செல்வன்
போர்அடங்கு அகலம் பொருந்திய தார்போல்
திருவில் தேஎத்துக் குலைஇ...

## வீண் ஆரவாரமோ ?

மேகத்தை விளித்துப் பாடும் பாட்டு ஒன்று தோழியின் கூற்றாக உள்ளது. இருண்டு எழுந்து, இடித்து முழங்கி, மின்னி விளங்கி ஆரவாரம் செய்யும் மேகத்தை நோக்கி, 'வீணே ஆரவாரம் செய்து ஏமாற்றப் போகிறாயோ? பயன் தரும் வகையில் மழை பெய்வாயோ?' என்று கேட்கிறாள் அவள். (தலைவன் உள்ளத்தில் இந்தச் சொல் பாய்ந்து, "நீ தரும் உறுதிமொழிகள் வீணான ஏமாற்றமாய் முடியுமோ? உண்மை முயற்சியாய்த் திருமணமாகிய பயன் விளைக்குமோ?" என்று வினவும் வினவாக அமைகிறது).

பெரிய கடல் நீரை முகந்துகொண்டு மேகங்கள் பெருங் கூட்டமாக வருகின்றன. இருண்டு தோன்றுகின்றன. உயர்ந்த வானத்தில் வலமாக எழுந்து வளைத்துக் கொள்கின்றன. தோலால் போர்க்கப்பட்ட முரசு போல் ஒலிக்கின்றன. பேராண்மையோடு தொழிலாற்றும் வீரர்கள் உறையிலிருந்து கழித்து எறியும் வாள்போல் செறிந்து

*அக. 175, ஆலம்பேரி சாத்தனார்.

கால் இயல் - காற்றுப்போல் இயங்கும். செழியன் - பாண்டியன். பல்லூழ் - பலமுறை. கடிஇடி - கடுமையான இடி. நேமியஞ் செல்வன் - சக்கரம் ஏந்திய திருமால். அகலம் - மார்பு. தேஎத்து - ஒரு திசையில்.

விளங்கி மின்னுகின்றன. இவ்வாறு செய்தும் பெய்யாமலே அப்பால் செல்கின்றன.

> பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ
> இருண்டுஉயர் விசும்பின் வலன்ஏர்பு வளைஇப்
> போர்ப்புஉறு முரசின் இரங்கி...
> ...பெருஞ்செய் ஆடவர்
> கழித்துஎறி வாளின் நளிப்பன விளங்கும்
> மின்னுடைக் கருவியை ஆகி நாளும்
> கொன்னே செய்தியோ அரவம்...*

## முகிலா? யானையா?

நீல வானத்தில் இருண்ட மேகங்களைக் காணும் புலவர்கள், நீலநிற மலையில் செருக்கித் திரியும் கரிய யானைக் கூட்டங்களை நினைத்துக்கொள்கின்றனர். மழை பெய்ய விழுந்துள்ள கால்கள் (மழைத் தாரைத் திரள்கள்) தொலைவிலிருந்து நோக்குவார்க்கு யானையின் துதிக்கைகள் போல் உள்ளன. மழை பெய்யுமுன் இடித்து முழங்கும் மேகங்கள் மதயானைகள் போல் இருக்க, மழை பெய்தபின் அமைதியாய்ச் செல்லும் மேகங்கள் மதம் மாறி அடங்கிய யானைகள்போல் உள்ளனவாம்.

வானத்தில் இருண்ட தோற்றத்துடன் செல்லும் மேகங்கள் மலையில் இயங்கும் யானைக்கூட்டம் போல் தோன்றுகின்றன.

---

*அக. 188, வீரை வெளியன் தித்தனார்.

இருங்கிளை - பெரிய சுற்றம், கூட்டம். கொண்மூ - மேகம். போர்ப்பு - போர்வை. செய் - செயல். நளிப்பன - செறிவு உடையனவாய். கொன்னே - வீணே. அரவம் - ஒலி, ஆரவாரம்.

**......வேய்பயில் அடுக்கத்து**
**யானைச் செல்லினும் கடுப்ப வானத்து**
**வயங்குகதிர் மழுங்கப் பாஅய்..**

ஒலி செய்யும் கடலிலிருந்து நீரை முகந்து எழுந்த ஓசையோடு மேகம் கூடி வருகிறது. பெரிய யானையின் துதிக்கை போல் தோன்றுமாறு கால் சாய்த்து, கருநிறமான பெண் யானைக் கூட்டம்போல் சேர்ந்து கூடிவருகிறது. மகளிர் விரும்பி விளையாடும் கழங்கு போன்ற பனிக்கட்டியோடு விரையும் துளிகளைச் சிதறிப் பெய்யத் தொடங்குகிறது.

**பாடுஇமிழ் கடலின் எழுந்த சும்மையொடு**
**பெருங்களிற்றுத் தடக்கை புரையக் கால்வீழ்த்து**
**இரும்பிடித் தொழுதியின் ஈண்டுவன குழீஇ**
**வணங்கிறை மகளிர் அயர்ந்தனர் ஆடும்**
**கழங்குஉறழ் ஆலியொடு கதழ்உறை சிதறிப்**
**பெயல்தொடங் கின்றால் வானம்...†**

மழை பெய்தபின் வானில் திரியும் மேகம் நீர் இல்லாமல் வறிதாகிவிட்டது எனக் கூறப்படுகின்றது. அது மதம் பிடித்த யானை பிறகு மதம் மாறித் திரிவது போல் உள்ளதெனக் கூறியுள்ளார் புலவர் ஒருவர்.

---

*அக. 323, பறநாட்டுப் பெருங்கொற்றனார்.
கடுப்ப - போல. பாஅய் - பரவி.
†அக. 334, மதுரைக்கூத்தனார்.
பாடு - ஒலி. இமிழ் - ஒலிக்கும். சும்மை - ஒலி. தடக்கை - பெரிய கை. புரைய - போல. இரும்பிடி - கரிய பெண்யானை. தொழுதி - கூட்டம். ஈண்டுவன - சேர்வனவாகி. வணங்கு - வளைந்த. உறழ் - போன்ற. அயர்ந்தனர் - அயர்ந்து, விரும்பி. தொடங்கின்று - தொடங்கிற்று.

கடாஅம் மாறிய யானை போலப்
பெய்துவறிது ஆகிய பொங்குசெலல் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத்து உழிதர...

## மலையில் வெண்முகில்

முன்னாள் மாலையில் இருண்டு இடித்துப் பெருமழை பெய்த மேகங்கள் இருந்த வானம், வைகறையில் மெல்லிய வெண்ணிறமான முகில்கள் உடையதாய் விளங்குகின்றது. அந்த வெண்முகில்கள் மலையைச் சூழ்ந்து காணப்படும்போது, சூளைப்புகை போல் தோன்றுகின்றன.

புலியோடு போர் செய்து வருந்திய நடை உடைய ஆண்யானை தலையில் புண்பட்டுள்ளது. நீண்ட பிளவாகிய அந்தத் தலைப்புண் கழுவப்படுமாறு இரவில் ஆலங்கட்டியோடு மிக்க மழை பொழிகின்றது. வைகறையில் மிக வெண்மையாக அருவியில் நீர் பெருகி ஓடுகின்றது. மலை மறையுமாறு வெண்ணிற மேகம் சூழ்ந்து சூளைப்புகை போல் தோன்றுகிறது.

உழுவையொடு உழந்த உயங்குநடை ஒருத்தல்
நெடுவகிர் விழுப்புண் கழாஅக் கங்குல்
ஆலி அழிதுளி பொழிந்த வைகறை
வால்வெள் ளருவிப் புனல்மலிந்து ஒழுகலின்

---

*அக. 125, பரணர்.

கடாஅம் - மதம். பொங்கு செலல் - பொங்கிச் செல்லுதல். கொண்மூ - மேகம். மை - கருமை (நீல நிறம்). மாதிரம் - திசை. உழிதர - திரிய.

*இலங்குமலை புதைய வெண்மழை கவைஇக்*
*கலம்சுடு புகையின் தோன்றும்...**

## அந்தி வானம்

அந்திப்பொழுது, மேற்குவானத்தில் பலவகை மயங்கிய தோற்றங்களை உண்டாக்குவது போலவே, துயரால் வருந்தும் மக்களின் உள்ளத்திலும் பலவகைக் கலக்கத்தை விளைக்கின்றது. இளங்கீரனார் என்ற புலவர் பாடிய பாட்டில், துயருற்று வருந்திய பெண் ஒருத்தி அந்திப்பொழுதைப் பற்றியும் வானத்திலும் வையத்திலும் ஏற்படும் சில மாறுதல்களைப் பற்றியும் கூறி வருந்துகிறாள். அழகிய வருணனைப் பகுதி அமைந்த அந்த அந்திப்பொழுது பற்றிய பாடலால் புலவர் அந்திஇளங்கீரனார் எனச் சிறப்பிக்கப்பட்டார்.

வண்டுகளின் கூட்டம் சுனையில் உள்ள பூக்களை விட்டு மரக்கிளைகளில் உள்ள பூக்களை நாடிச் செல்கின்றது. அது, செல்வம் குறைந்தவர்களால் பயன் இல்லாமையால் அவர்களின் தொடர்பைவிட்டுச் செல்வம் நிறைந்தவர்களை நாடும் நெஞ்சத்தோடு பொருந்தும் அன்பில்லாத மக்களைப் போல் உள்ளது. குற்றம் அற்ற மான்கூட்டம் இருள்படர்தலைக் கண்டு மருள்கின்றது. உலையில் செந்நிறமாக வெந்து பிறகு மெல்ல ஆறிவரும் இரும்பு போல அந்தியின் செக்கர் மலர்கின்றது. வியக்கத்தக்க அறிவை அகற்றும் சோர்வுத் துன்பம் மிகுகின்றது. அகன்ற பெரிய வானம் அழகிய

---

*அக. 308, பிசிராந்தையார்.

உழுவை - புலி. உயங்கு - வருந்தும், ஒருத்தல் - ஆண்யானை. வகிர் - பிளப்பு. கழாஅ - கழுவி. அழிதுளி - மிக்க மழைத்துளி. வால் - வெண்மை. கவைஇ - சூழ்ந்து.

மேகங்களைத் தோற்றுவிக்கின்றது. இவ்வாறு பகற் பொழுதை வழிவிட்டனுப்புகின்றது துன்பம் தரும் இந்த மாலைக்காலம்.

நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்
பயன்இன் மையின் பற்றுவிட்டு ஒரூஉம்
நயன்இல் மாக்கள் போல வண்டினம்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர
மைஇல் மானினம் மருளப் பையென
வெந்துஆறு பொன்னின் அந்தி பூப்ப
ஐஅறிவு அகற்றும் கையறு படரொடு
அகல்இரு வானம் அம்மஞ்சு ஈனப்
பகல்ஆற்றுப் படுத்த பழங்கண் மாலை..

## இளவேனில்

இளவேனிற்காலமும் முன்பனிக்காலமும் விண்ணி லும் மண்ணிலும் பல அழகிய மாறுதல்களை ஏற்படுத்துவன. அவ்வக் காலத்து மலரும் மலர்கள் இன்னவை, அவற்றின் அழகு இத்தகையவை, வானில் அப்போது முகில்கள் இவ் வாறு தோன்றுவன, அப்போது காய்க்கும் காய்கள் இன் னின்ன, நிலம் அடையும் மாறுதல்கள் இன்னவை எனப் பலவகை விளக்கங்களுடன் அவ்வக் கால வருணனைகள் அமைந்துள்ளன.

வானத்தில் மழையின் தொழில் முடிந்தாற்போல் தோன்றுகிறது. (வானம் முகில்கூட்டம் இல்லாமல்

*அக. 71, அந்தி இளங்கீரனார்.

ஒரூஉம் - நீங்கும். நயன் - நன்மை, அன்பு. மைஇல் - குற்றம் இல்லாத. ஐ - வியப்பான. கையறு - செயலற்ற - சோர்வான. படர் - துன்பம். மஞ்சு - மேகம். பழங்கண் - துன்பம்.

தெளிந்த நீலநிறம் பெற்று விளங்குகிறது). முருக்க மரங்கள் மலர்ந்திருக்கின்றன. மகளிரின் செம்பஞ்சி ஊட்டிய நகம் போல் முருக்கின் அரும்புகள் தோன்றுகின்றன. அவற்றின் பூவிதழ்கள் கூரிய முனை உடையன. மலரில் தேன் உண்ணும் வேட்கையால் அவற்றில் வண்டுகள் பாய்ந்து தாதுக்களைக் கிளறி உதிர்த்திடுகின்றன. கோங்க மரங்களும் குரவமரங்களும் மலர்கள் நிறைந்துள்ளன. குரவ மலர்கள் சிறியவை; வெண்ணிறமானவை. கோங்க மலர்கள் பொன்தட்டுப் போன்றவை. வண்டுகளின் கூட்டம் குரவமலர்களில் ஊதும்போதெல்லாம், அவை கோங்க மலர்களில் உதிர்ந்து, பொன்தட்டுக்களில் அறுபட்ட வெள்ளிக் கம்பித் துண்டுகள் உதிர்ந்துள்ளதுபோல் காட்சியளிக்கின்றன. வண்டுகள் அப்போது விட்டுவிட்டு ஒலிக்கும் ஒலி, தெளித்துவிட்ட விளரி நரம்பின் இசைபோல் கேட்கின்றது. இத்தகைய அழகிய இளவேனிலில் மான்கள் இன்பமாய் வாழ்கின்றன.

*மாக விசும்பின் மழைதொழில் உலந்தென*
*குவிமுகை முருக்கின் கூர்நுனை வைஎயிற்று*
*நகைமுக மகளிர் ஊட்டுகிர் கடுக்கும்*
*முதிராப் பல்லிதழ் உதிரப் பாய்ந்துடன்*
*மலருண் வேட்கையின் சிதர்சிதர்ந் துகுப்பப்*
*பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி*
*நுண்கோல் அறைகுறைந்து உதிர்வன போல*
*அரவ வண்டினம் ஊதுதொறும் குரவத்து*
*ஓங்குசினை நறுவீ கோங்கலர் உறைப்பத்*
*துவைத்தெழு தும்பித் தவிர்இசை விளரி*

*உதைத்துவிடு நரம்பின் இம்மென இமிரும்*
*மாண்எழ முற்ற காமர் வேனில்......**

## முன்பனிக் காலம்

மழை பெய்து பெய்து வெறுத்துக் கடந்து சென்று விட்ட வெண்ணிற மேகங்கள் வானத்தில் பொங்கிச் செல் கின்றன. அடிக்கப்பட்ட பஞ்சு மென்மையுற்றாற் போன்ற துவலை தூவுதலும் கழிகின்றது. அகன்ற வயலில் நீண்ட தண்டு உடைய கரும்பு வெண்ணிறமாய்ப் பூத்திருக்கின்றது. திரண்ட காம்பு உடைய அந்தப் பூக்கள் வாடைக்காற்று வீசும்போது, மேல்காற்றால் அலைக்கப்படும் பூளைப் பூவைப் போல் அசைகின்றன. பசுமையான இலைகள் அடர்ந்த புதர்களில் எல்லாம் பகன்றைமலர்கள் வெண்ணிறமாக மலர்ந்து, நீலவண்ணம் ஊட்டிய தோலின் நிறம் மறையுமாறு பதியவைத்த கேடகத்தின் கண்ணாடி போல் தோன்றுகின் றன. கொழுமையான இலைகளை உடைய அவரையின் வள மான அரும்புகள் மலர்கின்றன. முறையாக மலரும் தோன்றியின் ஒளியுள்ள மலர்களும் மலர்கின்றன. இடந் தோறும் பறவையினங்கள் கல்லென்று ஒலிக்கின்றன. இவ் வாறு பனிக்காலம் வந்துள்ளது.

*பொய்துபுலந் திறந்த பொங்கல் வெண்மழை*
*எஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன*

---

அக. 317, வடமோதங்கிழார்.

மாகம் - வானம். உலந்தென - முடிய. வை எயிற்று மகளிர் - கூரிய பற்களை உடைய பெண்கள். ஊட்டு உகிர் - பஞ்சி ஊட்டிய நகம். கடுக்கும் - போலும். சிதர் - வண்டு. கன்னம் - தட்டு. நுண்கோல் - மெல்லிய கம்பி. அரவ - ஒலியுடைய. எமுற்ற - இன்புற்ற.

துவலைத் தூவல் கழிய அகல்வயல்
நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்
கோடைப் பூளையின் வாடையொடு துயல்வரப்
பாசிலைப் பொதுளிய புதல்தொறும் பகன்றை
நீல்உண் பச்சை நிறம்மறைத்து அடைச்சிய
தோல்எறி பாண்டிலின் வாலிய மலரக்
கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ
ஊழுறு தோன்றி ஒண்பூத் தளைவிடப்
புலந்தொறும் குருகினம் நரலக் கல்லென...
அற்சிரம் வந்தன்று..

பனிக்காலத்தில் பெருமழை பெய்து வெள்ளம் ஓடுவதில்லை. ஆயின், நிலத்தில் நீர் ஊறிக் கிடக்கும். தூறலாகத் தூறிய மழைநீர் சிறிதளவாக ஓடும். மிக்க விசையோடு ஓடும் நெடுந் தேர்களின் சக்கரம் ஆழ்ந்து சென்ற வழியில், நீர் பாம்பு போல் வேகமாக ஓடும். அவ்வளவிற்கே நீர் நிற்கும் காலம் அது. அப்போது பயறு காய்த்து முற்றிவிட்டிருக்கும். குவிந்திருந்த விரல்கள் விரிந்து பற்று நீங்கி நிற்பது போல், பயற்றங்காய்கள் முற்றி விரிந்து நிற்கும்.

வீங்குவிசைப் பிணித்த விரைபரி நெடுந்தேர்
நோன்கதிர் சுமந்த ஆழிஆழ் மருங்கில்
பாம்பென முடுகுநீர் ஓடக் கூம்பிப்

---

*அக. 217, கழார்க்கீரன் எயிற்றியார்.

எஃகு - பஞ்சு அடிக்கும் கருவி. கணைக்கால் - திரண்ட காம்பு. துயல்வர - அசைய. பொதுளிய - நிறைந்த. பாசிலை - பசியஇலை. நீல் - நீலம். தோல் - கிடுகு, கேடகம். பாண்டில் - கண்ணடி. வாலிய - வெண்மையாக.

*பற்றுவிடு விரலின் பயறுகாய் ஊழ்ப்ப*
*அற்சிரம் நின்றன்றால் பொழுதே...*

## கோடையும் வாடையும்

வீசும் காற்றுவகைகளில் கோடையும் வாடையும் பாட்டுக்களில் பயின்று வருகின்றன. கோடையினும் வாடையே மிகுதியாகப் பாடப்பட்டுள்ளது. விளாமரத்திலும் மூங்கிலிலும் வண்டுகள் துளைத்த துளைகளில் மேல்காற்று (கோடை) புகுந்து எழுப்பும் ஒலி இனிய இசை போன்றது என்பர்†. நீரற்ற சுனைகளில் புகுந்து அது எழுப்பும் ஓசை பறைஓசை போன்றது என்பர்‡.

வாடைக்காற்றைப் பற்றிய குறிப்புக்கள் பல உள்ளன. வாடைக்காற்று வீசும் காலத்தில் மலரும் மலர்கள் பலதிறத்தன. கழனிகளில் வாடை புகுந்து வீசும்போது உண்டாகும் ஒலியும் தோற்றமும் பாடப்பட்டுள்ளன. குளிர்ந்த நீர்த்துவலையோடு வீசுவதால் அதை மக்களும் வரவேற்பதில்லை; பறவை விலங்குகளும் வரவேற்பதில்லை. எல்லோருடைய உடலையும் நலிவிக்கும் தன்மை உடைய காற்று அது. குன்றுகளும் குளிரால் நடுங்குமாறு நலிவிப்பது அது. பிரிவுத் துன்பத்தால் வருந்தும் துணைவியரை உடலளவில் மட்டும் அன்றி உள்ளத்திலும் நலிவிக்கும் கொடுமை உடையது அக் காற்று. அம் மகளிர் அதை நோக்கி முறையிடுவ

---

*அக. 339, நரைமுடி நெட்டையார்.

வீங்கு - மிக்க. விரைபரி - விரைந்து செல்லும் குதிரைகள். நோன்கதிர் - வலிய ஆர்கள். ஆழி - சக்கரம். ஊழ்ப்ப - முறையாக முற்ற.

†அக. 82, ‡அக. 321.

தாகவும் வெறுத்துரைப்பதாகவும் இரண்டு அழகிய பாட்டுக்கள் உள்ளன.

நெடுநாளாகப் பசியால் துன்புற்ற யானையின் வாடிய கண்போல் தோன்றுகிறது நீர் அற்ற வறிய சுனை. அந்தச் சுனையில் புகுந்து வரும் மேல்காற்று மலைப்பிளப்பில் தெளிந்த ஓசை செய்கிறது. இழுத்துக் கட்டிய பறையின் ஒலிபோல் கேட்கின்றது அந்த ஓசை.

*பசித்த யானைப் பழங்கண் அன்ன*
*வறுஞ்சுனை முகந்த கோடைத் தெள்விளி*
*விசித்துவாங்கு பறையின் விடரகத்து இயம்ப**

வாடைக்காற்று வீச, அவரையின் அழகிய மலர்கள் உதிர்கின்றன ; செந்நிறமான வளைந்த துளை உள்ள பவளம் போல் ஈங்கை மலர்கின்றது ; குளிர்ந்த புதலில் உள்ள பகன்றையின் தாழ்ந்த பூங்கொத்துக்கள் சிறு மழைத்துவலையால் ஊரின் அருகே அழகாக மலர்ந்துள்ளன ; மழைநீர் புதிதாக வருதல் நின்றுவிட்டது ; கிளைத்துக் கரு விரிந்து எழுந்து வளைந்த நெல்கதிர்கள் தழைத்துள்ளன. அத்தகைய வயல்கள் உள்ள பள்ளங்களைத் துழாவிக் கல்லென்னும் ஓசையோடு விரைந்து வந்துள்ளது இரக்கம் அற்ற வாடைக்காற்று.

*அவரை ஆய்மலர் உதிரத் துவரின*
*வாங்குதுளைத் துகிரின் ஈங்கை பூப்ப*
*இறங்குபோது அவிழ்ந்த ஈர்ம்புதல் பகன்றை*
*கறங்குநுண் துவலையின் ஊருழை அணியப்*

---

**அக. 321, கயமனார்.*

பழங்கண் - அழகற்ற கண். விசித்து - இழுத்து. பறையின் - பறை போல். விடரகத்து - மலைப்பிளப்பில்.

பெயல்நீர் புதுவரல் தவிரச் சினைநேர்பு
பீள்விரிந்து இறைஞ்சிய பிறங்குகதிர்க் கழனி
நெல்ஒலி பாசவல் துழைஇக் கல்லெனக்
கடிதுவந்து இறுத்த கண் இல் வாடை....*

வளமான வயலில் நெல் கதிர் ஈன்றிருக்கிறது. நெல்லின் தோடுகள் நெருப்பின் கொழுந்து போல் செந்நிறமாக உள்ளன. கதிர்கள் பலவாகக் கிளைத்திருக்கின்றன. நிரம்பிய அகன்ற வயலில் வரப்புக்களே அணையாக அந்தக் கதிர்கள் கிடந்து அலையுமாறு வாடைக்காற்று வீசுகின்றது. பனிக் காலத்தின் தன்மையும் தனிமைத் துன்பமுங் கொண்டதாக வாடை விளங்குகின்றது. கரும்புகள் பூத்திருக்கின்றன. பூத்த கரும்பின் தண்டின் மேல் இருந்த வெண்ணிற நாரை, வாடைக்காற்றால் வருந்திக் கூவுகின்றது. நுண்ணிய பல துவலைகளைக் கொண்ட குளிர்ந்த பனிக்காலம் இத்தகையது.

...வளவயல்
அழல்நுதி அன்ன தோகை ஈன்ற
கழனி நெல்லின் கவைமுதல் அலங்கல்
நிரம்புஅகல் செறுவில் வரம்புஅணையாத் துயல்வரப்
புலம்பொடு வந்த பொழுதுகொள் வாடை
இலங்குபூங் கரும்பின் ஏர்கழை இருந்த

---

*அக. 243, கொடியூர் கிழார் மகனார் நெய்தல் தத்தனார்.

துவரின - செந்நிறம் உடையன. துகிரின் - பவளம் போல். இறங்கு - தாழ்ந்த. கறங்கு - ஒலிக்கின்ற. நேர்பு - நேர்ந்து. பீள் - உள்ளே இருந்த கதிர். இறைஞ்சிய - வணங்கிய. பிறங்கு - விளங்குகிற. ஒலி - தழைத்த. பாசவல் - பசு அவல், பசுமையான பள்ளம். துழைஇ - துழாவி. கடிது - விரைந்து. இறுத்த - தங்கிய. கண்இல் - கண்ணோட்டம் இல்லாத.

*வெண்குருகு நரல வீசும்*
*நுண்பல் துவலைய தண்பனி நாளே..*

தலைவன் பிரிந்திருந்த காலத்து வாடைக்காற்று வருத்த வருந்தியிருந்த தலைவி, அவன் திரும்பி வருதல் அறிந்து அதனைப் பழிக்கின்றாள். "வாடைக்காற்றே! பனி வருத்து கின்ற நள்ளிரவின் இருளில் தனித்துள்ளவரின் தாங்கும் வலிமையை ஆராய்ந்து உணராமல், அவரோடு பகை ஒன்றும் இல்லாதிருந்தும், வெறுக்கும்படியாகக் குளிர்ந்து வீசுகின் றாய். மேற்கொண்ட கடமைக்காகச் சென்ற தலைவர் விரைந்து வருவாரானால், நீ எமக்குத் தோற்று ஓடுவாய் அல்லையோ?" என்கிறாள்.

*பனிஅடூஉ நின்ற பானாள் கங்குல்*
*தமியோர் மதுகை தூக்காய் தண்ணென*
*முனிய அலைத்தி முரண்இல் காலை;*
*செய்வினை மருங்கில் சென்றோர் வல்வரின்...*
*ஓடுவை மன்னால் வாடைநீ எமக்கே...*†

தலைவன் பிரிந்து சென்ற காலத்துப் பிரிவாற்றாமல் வருந்தும் தலைவி வாடைக்காற்றை விளித்துக் கூறுகிறாள்.

---

*அக. 13, பெருந்தலைச் சாத்தனார்.

நுதி - முனை. தோகை - தோடு. கவை - பிரிந்தது. அலங்கல் - கதிர். செறு - வயல். துயல்வர - அசைய. ஏர்கழை - அழகிய தண்டு. நரல - ஒலிக்க.

†அக. 125, பரணர்.

அடூஉநின்ற - வருத்துகின்ற. பால்நாள் - நள்ளிரவு. மதுகை - வலிமை. தூக்காய் - சீர்தூக்காமல். முரண் - பகை. காலை - காலத்தும். வல் - விரைவில்.

" தனித்தவளாய், பிரிந்தவரை நினைந்து சில வளையல்களும் நெகிழுமாறு பெரு விருப்பம் கொண்ட நெஞ்சத்தோடு, அவர் வரும் திசையை நோக்கிச் சாவது போன்ற துன்பத்தோடு வருந்தும் என்னை நோக்கி இரக்கம் கொள்ளாமல், பனித்துவலையால் தாமரைமலரும் கரிந்துபோகுமாறு பனி வீசும் நள்ளிரவில், குன்று நடுங்கி நெகிழ்வது போல் குளிர் செய்யும் வாடைக்காற்றே! நீ என்னை வருத்துவதற்காகவே வந்தாய் போல் தோன்றுகிறாய்; என்னைப் பிரிந்த கொடியவர் சென்ற நாட்டில் இத்தன்மையோடே சோர்வுறாமல் செல்வாயாக. கடமையில் ஆர்வம் கொண்ட அவர் அப்போதாவது என்னை நினைக்கக் கூடும் " என்கின்றாள்.

எமியம் ஆகத் துனிஉளங் கூரச்
சென்றோர் உள்ளிச் சில்வளை நெகிழப்
பெருநசை உள்ளமொடு வருதிசை நோக்கி
விளியும் எவ்வமொடு அளியள் என்னாது...
களிறுஉயிர்த் தன்ன கண்அழி துவலை
முளரி கரியும் முன்பனிப் பானாள்
குன்றுநெகிழ்ப் பன்ன குளிர்கொள் வாடை
எனக்கே வந்தனை போறி...
கொடியோர் சென்ற தேஎத்து மடியாது
இனையை ஆகிச் சென்மதி;
வினைவிதுப் புறுநர் உள்ளலும் உண்டே....*

*அக. 163, கழார்க்கீரன் எயிற்றியார்.

எமியம் - தனியாக உள்ளேம். துனி - துன்பம். கூர - மிக. விளியும் - இறக்கும். எவ்வம் - துன்பம். அளியள் - இரங்கத் தக்கவள். முளரி - தாமரை. போறி - போலுதி, போல் உள்ளாய். மடியாது - சோர்வுறாமல். இனையை - இத்தன்மை உடையாய். சென்மதி - செல்க.

## 6. உவமைகள்

### கலைஞர் கண்

ஒன்றைக் காணும்போது அதுபோன்ற மற்றொன்று நினைவுக்கு வருதல் இயற்கை. கலைஞரின் கண், பொருள்களைக் கண்டு கண்டு அவற்றின் வடிவழகையும் சிறந்தெழிலையும் போற்றிப் பயின்ற பயிற்சி நிறைந்தது. ஆகையால், புலவர் ஒரு பொருளைக் கண்டதும், அதனோடு ஒப்புமை உடைய மற்றொரு பொருளையும் அகக்கண்ணில் கொணர்ந்து ஒப்பிட்டு மகிழ்வர். இத்தகைய அனுபவமே அவர்கள் இயற்றும் பாட்டுக்களில் உவமைகளாக அணிபெற நிற்கும்.

இவ்வாறு ஓரிரு தலைமுறையில் புலவர் சிலர் அமைத்துச் சென்ற உவமைகளைப் பிற்காலத்துப் புலவர் வாய்பாடு போல் போற்றி அவற்றை அவ்வாறே தம் பாட்டுக்களில் அமைத்துச் செல்வர். முந்திய தலைமுறையினர், மாதர் கண் கயல் போன்றது என்றும் முகம் மதி போன்றது என்றும் பாராட்டி அமைத்த உவமைகளையே, பிந்திய தலைமுறையினர் கயற்கண் மதிமுகம் என வாய்பாடுகளாக்கி அமைத்திடக் காண்கிறோம். சங்க இலக்கிய உவமைகளுக்கும் பிற்கால இலக்கியத்தில் உள்ள உவமைகளுக்கும் உள்ள வேறுபாடு இத்தன்மையானதே. ஆயினும், உவமைகளைக் கண்மூடிக் கூறிச் செல்ல எல்லாப் புலவர்களாலும் இயலாது. உயர்ந்த கற்பனைத் திறன் வாய்ந்த புலவர்கள் புதியன புனைந்து கூறுவர். அல்லது, முன்னோர் கண்ட உவமைகளையே புது வகையில் கண்டு புத்துணர்ச்சியோடு கூறுவர். குமரகுருபரர், சிவப்பிரகாசர் முதலான புலவர்களின் பாட்டுக்களிலும்

பாரதியாரின் பாட்டுக்களிலும் புதிய உவமைகளையும் கற்பனைத் திறனையும் காணலாம்.

## மகளிர் தோள்

பிற்காலத்து இலக்கியங்களில் மூங்கில் போன்ற தோள் என்று மகளிர்தோளை உவமைப்படுத்தி வருணித்தல் மிகுதியாக உள்ளது. சங்க இலக்கியத்துள் அந்த உவமையின் தோற்றத்தைக் காண முடிகின்றது. மூங்கில் போன்ற தோள் என்பதில்—வரைத்தோள், அமைத்தோள், வேய்த்தோள் என்ற தொடர்களில்—மூங்கிலின் எப்பகுதி தோள் போல் உள்ளது, எக்காரணத்தால் உவமை ஆயிற்று என்பது விளங்காமல், தொன்றுதொட்டுப் பயின்றுவரும் வாய்பாட்டையே அறிகின்றோம். சங்க இலக்கியம் உவமைக்குக் காரணமான ஒப்புமைத் தோற்றத்தை நன்கு விளக்குகின்றது.

> காம்பின்
> கண்ணிடை புரையும் நெடுமென் பணைத்தோள்*

என்று புலவர் ஒருவர் பாடினார். நீண்ட மெல்லிய பெரிய தோள் என்று தோளைக் குறிப்பிட்டார். மூங்கில் போன்றது என்று வாளா கூறாமல், மூங்கிலில் இரண்டு கணுக்களுக்கு இடைப்பட்ட பகுதி போன்றது என்றார். நெடுமையும் குழைவும் புலப்பட ஒப்புமை அமைந்துள்ளது. ஆயினும் பெருந்தோள் என்னும் தன்மை விளங்கவில்லை. அதற்காக,

---

*அக. 271, காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்.

காம்பு - மூங்கில். கண்இடை - கணுக்களுக்கு இடையே உள்ள பகுதி. புரையும் - போன்ற. பணை - பெரிய.

வளம் மிக்க இடத்தில் செழித்து வளர்ந்த மூங்கில் என்னும் கருத்தை,

**ஆடியல் இளமழை சூடித் தோன்றும்**
**பழந்தூங்கு விடரகத்து எழுந்த காம்பின்***

என்று விளக்கியுள்ளார். ஒரு மலைப் பிளப்பில் செழித்து வளர்ந்த மூங்கில் என்றும், பழங்கள் விளையும் மரங்களை உடைய அத்தகைய வளம் மிகுந்த இடம் என்றும், மழை தவழும் மலை என்றும் கூறுகின்றார். அங்கு வளர்ந்த மூங்கிலாதலின் உவமைக்கு ஏற்ற பெருமையும் உடையது என்பதைப் புலப்படுத்துகிறார்.

**தோளே...**
**வேயமைக் கண்ணிடை புரை இ†**

என்று சுருங்க எடுத்துரைத்துள்ளார் புலவர் பரணர். இவ்வாறு சுருங்க எடுத்துரைத்தபோதிலும் மூங்கில்கணுக்களுக்கு இடைப்பட்ட பகுதி என்று ஒப்புமையான தோற்றம் விளங்கவைத்துள்ளார்.

மூங்கில் பெரும்பாலும் நோக்கே நெடுக வளர்வது. அவ்வாறாயின் தோளின் வளைவு புலப்படாத குறை உள்ளது. ஆகவே வளைந்த மூங்கிலின் இரு கணுக்களுக்கு இடைப்பட்ட பகுதியாயின் ஒப்புமை நிரம்புகின்றது. புலவர் அத்தகைய மூங்கிலின் பகுதியையே கருதினார் என்பதற்குக் கபிலர் பாட்டு ஒன்று சான்றாக உள்ளது.

---

*அக. 271.

ஆடு இயல் - அசையும் இயல்புள்ள. தூங்கு - பழுத்துத் தொங்கும். விடரகம் - மலைப்பிளவான இடம்.

†அக. 152.

புரைஇ - போன்று.

அகல்மலை
வாங்கமைக் கண்ணிடை கடுப்பயாய்
ஓம்பினள் எடுத்த தடமென் தோளே*

தலைவியின் தோள்கள் பெரியவை மென்மையானவை என்றும், அகன்ற மலையில் வளர்ந்து விளைந்துள்ள மூங்கிலின் கணுக்களுக்கு இடைப்பட்ட பகுதியைப் போன்றவை என்றும் பாடியுள்ளார்.

## கயல் உமிழும் நீர்

கண்ணைக் கயலுக்கு உவமை கூறுதல் இலக்கிய மரபு. தமிழிலக்கியத்தின் பிறப்பிடமான சங்கப் பாட்டுக்களுள்ளும் அது காணப்படுகின்றது. ஆயின் முதல் முதலாகக் கற்பனையுடன் ஒப்புமை கண்ட புதுமைச் சுவை அந்தப் பழம் பாட்டுக்களில் புலனாகின்றது. கயல்மீனை இயற்கையான நிலையில் காண வேண்டுமானால், நீரை விட்டுப் பிரித்துத் தனியே காணல் இயலாது. நீரில் மூழ்கிப் பிறழ்ந்து செல்லும் நிலையே அதன் இயற்கையான நிலை. நீரில் மூழ்கிப் பிறழ்ந்து செல்லும்போது அதன் வாயிலிருந்து நீர் உமிழப்பட்டுத் தோன்றும்; அதன் உடல் முழுதும் நீரால் நனைந்து தோன்றும். கயல் போன்ற வடிவும் கருமையும் ஒளிவிட்டுப் பிறழும் பிறழ்வும் உடையது கண். மின்னுதலால் மீன் என்று அது பெயர் பெற்றது. ஒளியே கண்ணின் சிறப்பு. ஆகவே கயலைக் கண்ணுக்கு ஒப்புமை கண்ட சான்றோர், நீரில் மூழ்கி நீர் உமிழ்ந்து செல்லும் கயலை, நீரால் நனைந்து நீர் துளிக்கும் கண்ணுக்கு உவமையாக்கிப் பொருத்தினர்.

---

*அக. 18.

வாங்கு அமை - வளைந்த மூங்கில். கடுப்ப - போல. யாய் - தாய். ஓம்பினள் எடுத்த - போற்றி வளர்த்த. தட - பெரிய.

...மல்கி
கயல்உமிழ் நீரின் கண்பனி வார*

என்று பாடினர் சங்கப் புலவர் ஒருவர்.

கண்கள் இரண்டு ; ஆகவே தனியே ஒரு கண்ணைக் கண்டு ஒப்புமை கூறுதல் இயலாது. இரண்டு கண்ணும் மாறுபட அமைந்து, போர் வீரர் இருவர் ஒருவர்க் கொருவர் மாறுபட்டு இயங்குதல் போன்றுள்ளன. ஆகவே, இரு கயல்மீன்களே உவமையாதல் பொருந்தும். மற்றொரு பாட்டில் இந்த விளக்கம் புலனுகின்றது :

குளித்துப்பொரு கயலின் கண்பனி மல்க†

பொரு என்ற சொல்லால் இரண்டு கயல்கள் ஒரே தன்மையனவாய் அமைந்து ஒன்றற்கொன்று ஒத்து இயங்கும் பான்மை விளங்கவைத்தார் புலவர். போர் என்னும் தமிழ்ச் சொல் இக்காலத்தில் உள்ளது போல் மறைந்திருந்து தாக்குவதையோ, வலியார் மெலியாரை அழிப்பதையோ குறிப்பது அன்று. வயது, வலிமை, உடற்கட்டு, உள்ளத் துணிவுமுதலியவற்றும் ஏந்தும் கருவி முதலியவற்றும் ஒத்தவர் இருவர் சில விதிகளுக்கு உடன்பட்டு ஒத்து இயங்கிச் செய்வதே போர் எனப்படும். போர் என்பதன் அடிச்சொல்லாகிய பொரு என்பது ஒப்புமையைக் குறிக்கும் சொல்லே ஆகும்.

---

*அக. 169, தொண்டி ஆமூர்ச் சாத்தனர்.
வார - ஒழுக. மல்கி - நிறைந்து.

†அக. 313, பாலை பாடிய பெருங்கடுங்கோ.
கயலின் - கயல்போல. மல்க - நிறைந்து பெருக. இம்முறை கடந்து பலர் பலரோடு கலந்து தாக்குவதை நெறிப்பட்ட போர் என்று கொள்வதில்லை ; மயங்கியது (மயங்கிய ஞாட்பு) என்பர் முன்னேர்.

(பொரு - ஒப்பு). ஆதலின் பொருகயல் என்ற புலவர் ஒத்து இயங்கும் கயல் இரண்டனையே கருதினார் என்பது தெளிவு.

## கண்ணும் குவளையும்

கண்களை மலர்க்கு உவமிக்கும்போதும் இணைந்து வைத்த இரண்டு மலர்களையே கூறியுள்ளனர்; ஒன்றற்கொன்று எதிரிட்டு அமைந்த இரண்டு மலர்கள் போன்றவை எனக் கூறியுள்ளனர்.

*மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன*
*மாயிதழ் மழைக்கண் மாஅயோள்**

*மாயிதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன*
*திருமுகத்து அலமரும் பெருமதர் மழைக்கண்†*

*குவளை*
*எதிர்மலர் இணைப்போ தன்ன......மழைக்கண்‡*

இவ்வாறு கண்களைக் குவளைமலர்க்கு நிகராகக் கூறிய புலவர்கள், கண்களின் அழகுக்கும் ஒளிக்கும் ஒப்புமை பெறக் கூடியவாறு, ஆழ்ந்த நீர்நிலைகளில் செழித்து வளரும் குவளை மலர்களைக் குறிப்பிட்டுள்ளனர் :

*நெடுநீர் பயந்த நிரையிதழ்க் குவளை*
*தண்கயம் பயந்த வண்கால் குவளை§*

---

*அக. 62, பரணர்.
பிணைத்தன்ன - இணைத்துவைத்தாற்போன்ற.
†அக. 361, எயினந்தை மகனார் இளங்கீரனார்.
‡அக. 381, மதுரை இளங்கௌசிகனார்.
§அக. 395, எயினந்தை மகனார் இளங்கீரனார்.
வண் - வளமான. கால் - காம்பு.

குவளைமலரின் காம்பு வளமானது (வண் கால்) எனவே மலரின் வளம் கூறாமலே புலப்பட வைத்தார்.

குவளைமலர் அழகாலும் நிறத்தாலும் கண்ணுக்கு உவமையாகத் தக்கது. அவ்வாறு ஒப்புமை கூறும்போது, புலவரின் கற்பனைஉள்ளம் கண்ணின் கருவிழிக்கு ஏற்ற கருநிறப் பொருளை மலரிலும் கண்டு மகிழ்கிறது. குவளை மலரில் தேன் நுகர வந்து மொய்க்கும் கருநிற வண்டே அவ்வாறு அமைந்து கண்ணின் விழிக்கு உவமையாகிறது.

> தண்கயத்து அமன்ற வண்டுபடு துணைமலர்ப்
> பெருந்தகை இழந்த கண்*

> சுரும்புண
> நெடுநீர்ப் பயந்த நிரையிதழ்க் குவளை
> எதிர்மலர் இணைப்போது அன்னதன்
> அரிமதர் மழைக்கண்†

கண்கள் கலங்கி அழும் நிலைமையாயின், புலவர்களின் கற்பனை அதற்கு ஏற்றவாறு உவமை தேடியுள்ளது. கண்ணீரால் கலங்கும் கண்கள், மழை பெய்தமையால் மழை நீரை ஏற்றுக் கலங்கிய குவளைமலர்களைப் போன்றன என்று பாடியுள்ளனர்.

> தண்கயம் பயந்த வண்கால் குவளை
> மாரி மாமலர் பெயற்குஏற் றன்ன
> நீரொடு நிறைந்த பேரமர் மழைக்கண்‡

*அக. 59, மதுரை மருதன் இளநாகனார்.
அமன்ற - நெருங்கி விளைந்த. பெருந்தகை - பேரழகு.
†அக. 381, மதுரை இளங்கௌசிகனார்.
‡அக. 395, எயினந்தை மகனார் இளங்கீரனார்.
பெயற்கு ஏற்றன்ன - மழைத்துளிகளை ஏற்றாற்போன்ற. மாரி - மழைக்காலத்து. மாமலர் - கருநிறக் குவளைமலர். மழைக் கண் - குளிர்ந்த கண்.

உள்ளத்துக் கலக்கத்தின் காரணமாக அலமந்து பார்க்கும் கண்களை ஒரு புலவர் நயமுற உவமப் படுத்தியுள்ளார். உவமமாகக் கூறப்பட்டவை நீல மலர்கள். அவற்றில் கலக்கமும் அலமரலும் புலப்படுதல் வேண்டும். ஆகையால் அந்த மலர்களும் இயல்பான நிலைமையில் இல்லை. அவை காற்றால் அசைந்தாடுகின்றன. காற்றால் அசைந்தாடும் நீல மலர்களைப் போன்ற கண்கள் என்றார் புலவர்.

**தண்கமழ் நீலம்**
**காலொடு துயல்வந் தன்னநின்**
**ஆயிதழ் மழைக்கண் அமர்ந்த நோக்கே***

கண்களை மட்டும் தனியே நோக்காமல், அழகிய முகத்தில் அமைந்தவாறு அவற்றின் எழிலைக் கண்ட புலவர், அதற்கு ஏற்ப உவமையை விரிவுபடுத்தியுள்ளார். தூய தாமரை மலரில் குவளைமலர் இரண்டனை இணைத்துவைத்தாற் போன்ற கண்கள் என்று விளக்கியுள்ளார்.

**தூமலர்த் தாமரைப் பூவின் அங்கண்**
**மாயிதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன**
**திருகத்து அலமரும் பெருமதர் மழைக்கண்......†**

கண்ணை மட்டும் அல்லாமல், கண்ணின் சிறு பகுதியாகிய கண்ணோரத்தையும் அழகுபட ஒப்புமை கூறி

*அக. 357, எருக்காட்டுத் தாயங்கண்ணனார்.

கால் - காற்று. துயல்வந்தன்ன - அசைந்தாற்போன்ற. அமர்த்த - மாறுபட்ட, எதிரெதிர் அமைந்த.

†அக. 361, எயினந்தைமகனார் இளங்கீரனார்.

பூவின் அங்கண் - பூவினிடத்தில். அலமரும் - சுழலும்.

யுள்ளனர். கண்ணின் கடை (ஓரம்) செவ்வரிகளை உடையதாய் விளங்கும் காட்சி, செந்நிறம் சிறிது பெற்றுள்ள பித்திகை அரும்பைப் புலவர்க்கு நினைவூட்டுகிறது. மிக்க மழையால் தழைத்து வளர்வதாகிய, மழைக்காலத்தில் மலரும் பித்திகையின் மணமுள்ள முகையின் பின்புறம் போன்ற கடைக்கண் என்கிறார்.

> மலிபெயல் கலித்த மாரிப் பித்திகத்துக்
> கொயலரு நிலைய பெயல்ஏர் மணமுகைச்
> செவ்வெரிந் உறழும் கொழுங்கடை மழைக்கண்......*

## கண்ணும் வேலும்

வேல் போன்ற கண் என்று வேலை உவமை கூறுவதிலும் அகநானூற்றுப் பாட்டு ஒன்று விளக்கம் தந்து உதவுகின்றது. வடிவு, கடைக்கூர்மை, ஒளி இவற்றால் வேல் ஒத்திருப்பினும், கண்ணின் செவ்வரிக்கு நிகரான பகுதி வேலில் இல்லை. ஆதலின் உவமை கூற வந்த புலவர், படைக்கலக் கொட்டிலில் தொழில் இல்லாமல் கிடக்கும் வேலைக் கூறாமல், போர்க்களத்து வேலைக் கூறியுள்ளார்; போர்க்களத்தில் பகைவர் உடலில் பாய்ந்து இரத்தம் தோய்ந்த வேலை உவமையாக்கியுள்ளார். இரத்தம் தோய்ந்த வேல் முழுதும் செந்நிறம் பெறாமல், இரத்தம் சில வரிகள் போல் ஒதுங்கிச் சிவந்து தோன்றும் ஆகையால், உவமை கண்ணின் செவ்வரிகளையும் விளக்குவதாக உள்ளது:

---

*அக. 42, கபிலர்.

மலி பெயல் - மிக்க மழை. கலித்த - தழைத்த. கொயலரு - கொய்ய முடியாதவாறு மிகுதியாக உள்ள. வெரிந் - பின்புறம். உறழும் - போன்ற.

வேத்தமர்க் கடந்த வென்றி நல்வேல்
குருதியொடு துயல்வந் தன்னநின்
அரிவேய் உண்கண்......*

## மா வடு

கண்ணை மாவடு (மாம்பிஞ்சு) போன்றது என்று கூறும் உவமையும் பிற்காலப் புலவர்களின் பாட்டுக்களில் உயிரற்ற வாய்பாடு போல் வழங்குகிறது. சங்கப் புலவர் ஒருவர் மாவின் வடு எந்த நிலையில் கண்ணுக்கு உவமை ஆகத்தக்கது என்பதை விளக்கியுள்ளார். மாவடுவைக் கத்திகொண்டு இரு துண்டாக அறுத்தால், வெண்ணிறக் கொட்டை பாதி யாய்த் தோன்றும் பகுதி, கண்ணின் வடிவத்திற்கு உரிய உவமையாகும். இரும்புக் கத்தி பட்ட காரணத்தால், அறு பட்ட இளங் கொட்டையின் வெண்ணிறம் மெல்ல மாறி நீல நிறமாக அமையும். பாதி வடுவின் இடையே தோன்றும் இந்த நீலநிறப் பகுதி, கண்ணின் இடையே உள்ள கருவிழி போல்வதாகும். இதனையே புலவர் கண்ணுக்கு உவமை ஆக்கியுள்ளார் :

......எஃகுற்று
இருவேறு ஆகிய தெரிதகு வனப்பின்
மாவின் நறுவடி போல உண்கண்......†

---

*அக. 27, மதுரைக் கணக்காயனார்.
வேத்தமர் - வேந்தரோடு நிகழ்த்தும் போர். துயல் வந்தன்ன - அசைந்தாற்போன்ற. அரி வேய் - செவ்வரி பொருந்திய.

†அக. 29, வெள்ளாடியனார்.
எஃகு உற்று - கத்தி பட்டு. தெரிதகு - விளங்கும்.

## மான் நோக்கு

பெண்கள் மருண்டு நோக்கும் பார்வையை மானின் பார்வைக்கு ஒப்புமை கூறுதல் மரபு. இதையே புலவர் ஒருவர் நயம்பெற அமைத்து ஒரு பாட்டில் கூறியுள்ளார். பிரிந்துசென்ற தலைவன் காட்டுவழியில் பெண்மானைக் கண்டு அதன் மருண்ட பார்வையைக் காணும்போதெல்லாம் தன் காதலியை நினைத்துக்கொள்வானும்; பெண்களின் பார்வையின் மருட்சி அத்தகையது எனப் புலப்படுத்தியுள்ளார் :

கருங்கோட்டு இரலை காமர் மடப்பிணை
மருண்டமான் நோக்கம் காண்தொறும் நின்நினைந்து*

## வேங்கை மரம்

அவ்வப்போது கண்ணெதிரே காணும் ஒன்றைத் தவிர மற்றவற்றை நினைக்காதது வளராத மனம்; வளர்ந்த மனமோ, ஒன்றைக் காணும்போதே மற்றதையும் நினைவிற்குக் கொண்டுவந்து இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்க வல்லது. இன்று காணும் பொருளோடு இரண்டு ஆண்டுகளுக்குமுன் கண்ட மற்றொன்றை ஒப்பிட்டுக் காணும். இங்குக் காணும் பொருளோடு எங்கோ தொலைவில் உள்ள வேறொரு பொருளை ஒப்பிட்டுக் காணும். கண்டவற்றைக் கொண்டு காணாதவற்றையும் அளந்துபார்க்க முயலும் மனம், இவ்வாறு வேறு காலத்திலும் வேறு இடத்திலும் உள்ள பொருள்களை நினைவிற் கொண்டுவந்து ஒப்பிடுவது இயற்கையே.

---

*அக. 74, மதுரைக் கவுணியன் பூதத்தனார்.

கோடு - கொம்பு. இரலை - மான்வகை. காமர் - அழகிய. பிணை - பெண்மான்.

புலவர் ஒருவர் மலையில் மாலைக் கால இருளில் வேங்கை மரத்தைக் காண்கிறார். இருளுக்கு இடையே வேங்கை மலர்களும் தளிர்களும் ஒளிவீசுவதைக் கண்டு வியக்கிறார். அவருக்கு நீலக் கடலினிடையே தோன்றும் கதிரவனுடைய தோற்றம் நினைவிற்கு வருகிறது. இரண்டையும் ஒப்பிட்டு மகிழ்கிறார்.

நீலமணி போல் இருண்ட மாலைக்காலத்தில் வேங்கை மரத்தின் பெரிய கிளைகள் நிறைய மலர்கள் மலர்ந்திருக்கின்றன ; ஒளி பொருந்திய தளிர்களும் தழைத்து விளங்குகின்றன. இக் காட்சி, நீலநீறக் கடலில் பயன்மிக்க திருவினை நல்கும் பல கதிர்களை உடைய ஞாயிறு தோன்றினாற்போல் உள்ளது.

*பயங்கெழு திருவின் பல்கதிர் ஞாயிறு*
*வயங்குதொழில் தரீஇயர் வலன்ஏர்பு விளங்கி*
*மல்குகடல் தோன்றி யாங்கு மல்குபட*
*மணிமருள் மாலை மலர்ந்த வேங்கை*
*ஒண்தளிர் அவிர்வரும் ஒலிகெழு பெருஞ்சினை......**

## வானமும் கடலும்

சிவன் திருமால் ஆகிய தெய்வங்களின் நிறங்களை ஒரு பாட்டில் உவமையாக வைத்து அழகிய கடற்கரையின் அந்திக் காட்சி வருணிக்கப்பட்டுள்ளது.

மாலைக்காலம், கடற்கரையில் அழகான காட்சி அளிக்கிறது. வானம் அந்திப் பொழுதின் செக்கர்நிறம் கொண்டு

---

அக. 298, மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்.

வயங்கு - விளங்குகிற. தொழில் தரீஇயர் - உலகிற்குத் தொழில் தர. வலன் ஏர்பு - வலமாக எழுந்து. மல்கு - நிறைந்த. மணிமருள் - நீலமணி போன்ற. ஒலி - தழைத்தல்.

சிவந்து தோன்றுகிறது. கடல் தன் இயல்பாய நீலநிறம் அழகாக விளங்கப்பெறுகிறது. இருபெருந் தெய்வங்களாகிய செந்நிறச் சிவனும் நீலநிறத் திருமாலும் ஒருங்கே பொருந்திய தோற்றம் போல் அக் காட்சி விளங்குகிறது.

...இருபெருந் தெய்வத்து
உருஉடன் இயைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடல்அணி கொளாஅ
வந்த மாலை......*

## நரைத்த தலை

முன்னமே அமைந்துள்ள சில எண்ணங்கள், சில பொருள்களைக் காணும்போது தோன்றி உவமைகளாக அமைவது உண்டு. கடற்கரையில் இளைய மகளிர் சிற்றில் இழைத்து விளையாடுகின்றனர். அலைகள் வந்து அவற்றை அழிக்கின்றன. இளையவரின் விளையாட்டுக்குப் பகையாக உள்ள முதியவரின் நினைவு புலவர்க்கு வருகின்றது ; வெண்ணிறமான அலைகள் முதியவரின் நரைத்த தலைபோல் உள்ளன என்கின்றார்.

மூத்தோர் அன்ன வெண்தலைப் புணரி
இளையோர் ஆடும் வரிமனை சிதைக்கும்......†

## காதல் மரம்

நீண்டு தொடர்ந்த உருவகமாக அமையும் பாட்டுக்களும் ஒரு சில உள்ளன. காதல்நோயை ஒரு பெரிய மரமாக உருவகப்படுத்துகிறார் ஔவையார். அம்பல், அலர், அன்பு,

---

*அக. 360, மதுரைக் கண்ணத்தனார்.
இயைந்த - பொருந்திய.
†அக. 90, மதுரை மருதன் இளநாகனார்.

துயரம் முதலிய எல்லாம் அந்தப் பெரிய மரத்தின் பல்வேறு உறுப்புகள் ஆகின்றன.

தலைவனைப் பிரிந்து வருந்தும் வேட்கையாகிய நோய் மார்பில் தோன்றி இளமுளையாய் வளர்ந்து, சோர்வு உடைய நெஞ்சின் வருத்தமாகிய திரண்ட அடிமரமாய் நீண்டு, ஊரார் சொல்லும் அம்பலே அழகிய கிளைகளாகி, தீராத காதலாகிய தளிர்களைப் பரப்பி, புலவர்கள் புகழ்ந்த நாணம் என்னும் பண்பு இல்லாத பெரிய மரமாகி, நிலத்தின் எல்லை எல்லாம் தன்னுள் கொண்டு, அயலார் கூறும் அலர் என்னும் அரும்பு களை எடுக்கின்றது.

முலையிடைத் தோன்றிய நோய்வளர் இளமுளை
அசைவுஉடை நெஞ்சத்து உயவுத்திரள் நீடி
ஊரோர் எடுத்த அம்பல் அஞ்சினை
ஆராக் காதல் அவிர்தளிர் பரப்பிப்
புலவர் புகழ்ந்த நாண்இல் பெருமரம்
நிலவரை எல்லாம் நிழற்றி
அலர்அரும்பு ஊழ்ப்ப......*

## உவமை அடுக்கு

உவமை பல தொடர்ந்து ஒரு கருத்தை விளக்கும் பாட்டுக்களும் இந் நூலில் உள்ளன. ஒரு பரத்தை குல மகளிரைப் பழித்துக் கூறும் சொற்களில் மூன்று உவமை கள் அமைந்துள்ளன. பாகன் நெடுங்காலம் உயிர்வாழ்தல்,

---

*அக. 273, ஔவையார்.

அசைவு - சோர்வு, தளர்ச்சி. உயவு - வருத்தம். திரள் - திரண்ட அடிமரம். அம்பல் - செவியளவில் மெல்லச் சொல்லும் பழிச்சொல். நிழற்றி - நிழல்செய்து. அலர் - பிறர் கேட்குமாறு தூற்றும் பழி.

கொலையில் வல்ல யானை கொல்லாமல் அருளும் காரணத் தாலேயே ஆகும் ; அதுபோல் தலைவன் அவர்களை விட்டுத் தன்னிடம் வந்திடுமாறு செய்யத் தன்னால் முடியும் என்றும், தான் அங்கே செல்லாமல் இருக்கும் காரணத்தாலேயே அந்த மகளிர் அங்கே உரிமையோடு அவனுடன் வாழமுடிகின்றது என்றும் கூறுகின்றாள். அங்கு அவள் சென்றால், கதிரவனை நோக்கிச் சாய்ந்துவிடும் நெருஞ்சிமலர் போல் தன்னோடு தலைவன் தொடர்ந்து திரிவான் என்கின்றாள். அவ்வாறு திரியுமாறு செய்யத் தவறினால், சோழர்க்குமுன் தோற்று உடைந்த ஆரியர்படைபோல் தன் முன்கையின் வளையல்கள் உடைந்து கெடுவனவாக என்கின்றாள்.

> பாகன் நெடிதுஉயிர் வாழ்தல் காய்சினக்
> கொல்களிற் றியானை நல்கல் மாறே ;
> தாமும் பிறரும் உளர்போல் சேறல்...
> யான்அவண் வாரா மாறே ; வரினே
> சுடரொடு திரிதரும் நெருஞ்சி போல
> என்னொடு திரியான் ஆயின்...
> ஆரியர் படையின் உடைகஎன்
> நேரிறை முன்கை வீங்கிய வளையே.*

## கமுகு

உவமைகள் அடுக்காக அமைந்துள்ள அழகு, கமுக மரத்தினை வருணிக்கும் பாட்டிலும் காணப்படுகிறது.

கமுகின் கழுத்து, குடைபோன்றது. அதன் பாளையின் வயிறு, வடித்த வாள் போன்றது. அழகிய புதிய பூக்கள்,

---

*அக. 336, பாவைக் கொட்டிலார்.

நல்கல்மாறே - அருளுவதால். சேறல் - செல்தல் - செல்லு தல். அவண் - அங்கே. வாராமாறே - வாராததால்.

தொடுத்த மாலை போன்றவை. பூங்கொத்து விரிவது, நீண்ட கவரி போல் உள்ளது. வெண்ணிறப் பூக்கள், முத்துக்கள் போன்றவை.

தொடையமை பன்மலர்த் தோடுபொதிந்து யாத்த
குடையோ ரன்ன கோள்அமை எருத்தின்
பாளை பற்றழிந் தொழியப் புறஞ்சேர்பு
வாள்வடித் தன்ன வயிறுடைப் பொதிய
நாளுறத் தோன்றிய நயவரு வனப்பின்
ஆரத் தன்ன அணிகிளர் புதுப்பூ
வாருறு கவரியின் வண்டுண விரிய
முத்தின் அன்ன வெள்வீ தாஅய்
அலகின் அன்ன அரிநிறத்து ஆலி
நகைநனி வளர்க்கும் சிறப்பின் தகைமிகப்
பூவொடு வளர்ந்த மூவாப் பசுங்காய்*

**தாமரை**

பொய்கையில் மலர்ந்துள்ள தாமரையை வருணிக்கும் இடத்திலும் அடுக்கடுக்கான உவமைகள் தொடர்ந்து அமைந்துள்ளன.

கடல்போல் அகன்ற நீர்ப்பரப்பு உடையது பொய்கை. துளை பொருந்திய தாமரைத்தண்டு மூங்கில் போன்றது. பசிய இலைகள் களிற்றின் செவி போன்றவை. தாமரை

---

*அக. 335, மதுரைத் தத்தங் கண்ணனார்.

தொடை - தொடுத்தல். தோடு - தொகுதி. யாத்த - கட்டிய. கோள் - காய் கொள்ளுதல். எருத்து - கழுத்து. சேர்பு - சேர்ந்து. நயவரு - நயத்தல் பொருந்திய, இனிய. வார்உறு - நீட்சி அமைந்த, நீண்ட. தாஅய் - பரவி. அலகு - பலகறை. அரிநிறத்து - ஒளியான நிறம் உடைய. ஆலி - ஆலங்கட்டி.

முகைகள் கழு உயர்ந்தமைந்தன போல் உள்ளன. அவற்றின் இடையிடையே பூத்த தாமரைமலர்கள் முறுவல் கொண்ட முகங்கள் போல் உள்ளன.

கடல்கண் டன்ன கண்அகல் பரப்பின்
நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்
கழைகண் டன்ன தூம்புடைத் திரள்கால்
களிற்றுச்செவி அன்ன பாசடை மருங்கின்
கழுநிவந் தன்ன கொழுமுகை யிடையிடை
முறுவல் முகத்தின் பன்மலர் தயங்கப்
பூத்த தாமரை......*

## கூரிய நோக்கு

இயற்கையைக் கூர்ந்து கவனித்து அறிந்த அறிவால், பொருள்களின் வடிவ அமைப்பில் உள்ள ஒற்றுமை புலவர்களுக்கு எளிதில் புலனாகின்றது.

பாலைவழியில் உள்ள நடுகல்லை ஆள் என்று எண்ணி யானை உதைக்கின்றது. அதன் நகம் சிதைகின்றது. சிதையும் நகம், பனை நுங்கின் தோடு போல் ஒடிகின்றது.

அத்த நடுகல் ஆள்என உதைத்த
கான யானைக் கதுவாய் வள்ளுகிர்
இரும்பனை இதக்கையின் ஒடியும்......†

---

*அக. 176, மருதம் பாடிய இளங்கடுங்கோ.

கண் அகல் - இடம் அகன்ற. பக - பிளக்க. தூம்பு - உள்துளை. கால் - தண்டு. பாசடை - பசிய இலை.

†அக. 365, மதுரை மருதன் இளநாகனார்.

அத்தம் - பாலைவழி. வள் - வளமான. இதக்கை - நுங்கின் மேல்தோடு.

நண்டுகளின் கண்கள் வேப்ப அரும்பு போல் உள்ளன வாம்.

வேப்புநனை அன்ன ஈர்ங்கண் ஞெண்டு...

## அரும்பும் மலரும்

சில மலர்கள் அரும்புகள் முதலியவற்றைப் புலவர் களின் கண்கள் கூர்ந்து கண்டு வடிவ அமைப்புக்களை நன்கு உணர்ந்து தக்க உவமைகளை அமைக்க உதவியிருக்கின்றன.

ஈங்கையின் அரும்பு இரவம்வித்தினைப் போன்றது. அதன் வெண்ணிற மலர் ஆலங்கட்டி போன்றது.

இரங்காழ் அன்ன அரும்புமுதிர் ஈங்கை
ஆலி அன்ன வால்வீ....

குவளையின் அரும்பு மலர்வதற்காக நெகிழும்போது, ஓந்தியின் கரிய தாடி போல் உள்ளது.

வைவால் ஓதி மைஅணல் ஏய்ப்பத்
தாதுஉறு குவளைப் போதுபிணி அவிழ......†

தளவு என்னும் செம்முல்லையின் சிவந்த அரும்பு சிவல் என்னும் பறவையின் முள் போன்றது.

...தளவின் இதல்முள் செந்நனை......‡

பகன்றையின் சுரிந்தமுகம் உடைய அரும்பு, வளைகள் அறுத்தெடுத்து எஞ்சிய சங்கின் தலை போன்றது.

---

*அக. 125, பரணர்.
காழ் - வித்து. ஆலி - ஆலங்கட்டி. வால்வீ - வெள்ளைப்பூ.
†ஷை - வைவால் - கூரிய வாலை உடைய. ஓதி - ஓந்தி. மை - கரிய. அணல் - தாடி. ஏய்ப்ப - போல. பிணி - கட்டு.
‡ஷை. 23, ஒரோடோகத்துக் கந்தரத்தனார்.
இதல் - சிவல். நனை - அரும்பு.

*வேளாப் பார்ப்பான் வாளரம் துமித்த
வளைகளைந் தொழிந்த கொழுந்தின் அன்ன
தளைபிணி அவிழாச் சுரிமுகப் பகன்றை**

இருப்பையின் அரும்பு குவிந்தது; பூனையின் அடி போன்றது. பூ வெண்ணிறமானது; யானைத் தந்தத்தைக் கடைந்தெடுத்தாற் போன்றது.

*வெருக்கடி அன்ன குவிமுகிழ் இருப்பை
மருப்புக்கடைந் தன்ன கொள்ளை வான்பூ......†*

அதிரல் (காட்டு மல்லிகை) நுண்ணிய கொடி உடையது. அதன் மெல்லிய வரிகளை உடைய அரும்புகள் காட்டுப் பூனையின் கூர்மையான பற்களைப் போன்றவை.

*பார்வல் வெருகின் கூர்எயிற்று அன்ன
வரிமென் முகைய நுண்கொடி அதிரல்......‡*

## துதிக்கை

யானையின் துதிக்கை, மழைபெய்யும் முகிலின் காலுக்கும், மலைப்பாம்புக்கும் உவமையாகிறது.

யானை தன் நெற்றியில் வைத்துக்கொண்ட துதிக்கை, குன்றின்மேல் ஏறும் பாம்பு போல் தோன்றும்.

---

*நெடு 24, ஆலூர் மூலங்கிழார்.

வேளா - வேள்வி செய்யாத. துமித்த - அறுத்த. தளைபிணி - கட்டுண்ட பிணிப்பு.

†அக. 267, பாலைபாடிய பெருங்கடுங்கோ.

வெருகு - பூனை. முகிழ் - அரும்பு. மருப்பு - தந்தம். கொள்ளை - மிகுதி.

‡அக. 391, காவன் முல்லைப் பூதனர்.

பார்வல் - பார்வை. வெருகு - காட்டுப்பூனை.

...களிறுதன்
வரிநுதல் வைத்த வலிதேம்பு தடக்கை
கல்லூர் பாம்பின் தோன்றும்......*

யானை தன் வாய் நிறையுமாறு உள்ளே வைத்த துதிக்கை, குன்றினுள் புகும் பாம்பு போல் தோன்றும்.

...யானைதன்
வாய்நிறை கொண்ட வலிதேம்பு தடக்கை
குன்றுபுகு பாம்பின் தோன்றும்......†

## சில தொடர்கள்

சங்க காலப் புலவர்கள் இயற்கையை மிகக் கூர்ந்து நோக்கிச் சிறந்த கற்பனைத் திறனோடு கட்புலன் வளரப் பெற்றவர்கள் என்பதற்கு இத்தகைய உவமைகளே அல்லாமல், சிறு சிறு தொடர்களும் சான்றாக உள்ளன. இந்தச் சிறு தொடர்களை நினைத்தவுடன், பொருள்களின் வடிவங்களே மனக்கண்ணில் வந்து நிற்கும் அளவிற்கு இவை மிகப் பொருத்தமாக அமைந்துள்ளன.

காடியைப் பற்றிக் கூறும் புலவர்கள் அதன் முன்னங் காலைக் கை என்றே குறிப்பிடுகின்றனர்.

வண்கை எண்கு‡
பெருங்கை ஏற்றை$

*அக. 349, மாமூலனார்.
வலி தேம்பு - வலிமை குறைந்த. கல் - குன்று.
†அடி. 391, காவன் முல்லைப் பூதனார்.
‡அக. 15, மாமூலனார்.
எண்கு - காடி.
$அக. 8, 72. பெருங்குன்றூர்கிழார், எருமை வெளியனார் மகனார் கடலனார். ஏற்றை - ஆண் காடி.

பெருங்கை எண்கு*

பல்லியைக் குறிப்பிடும் இடத்தில் பிளந்தாற் போல் விளங்கும் அதன் வாய் கூறப்படுகிறது.

பகுவாய்ப் பல்லி†

இருப்பைப்பூ (இலுப்பைப்பூ) மற்ற மலர்கள் போல் இராமல், பழம் போல் தோன்றுகிறது. அதைப் பற்றிக் கூறுமிடத்தில்,

பழம்போல் சேற்ற தீம்புழல்‡

என்கிறார் புலவர்.

அவரையைக் குறிக்கும் புலவர், 'கோழிலை அவரை' என்கிறார். வள்ளியைக் 'கொழுங் கொடி வள்ளி' என்கிறார்.§

## அசையும் நிலைகள்

அசையாத நிலையில் பொருள்களின் வடிவங்களை விளக்குவதற்குத் தக்க உவமைகளைக் கண்டு கூறுதல் எளிது. பொருள்கள் அசைந்து ஆடும் நிலையினை விளக்க, அவை போலவே அசைந்து தோன்றும் வேறு பொருள்களை உவமையாக எடுத்துரைக்க வேண்டுமானால், புலவரின் உள்ளத்தில் பல பொருள்களின் வடிவங்கள் இயல்புகள் முதலிய எல்லாம் நினைவில் இருக்க வேண்டும்; வேண்டும்போது ஒப்பான அசைவுகள் மனக்கண்ணில் தோன்றும் அளவிற்கு

---

*அக. 171, கல்லாடனார்.

† ,, 88, ஈழத்துப் பூதன் தேவனார்.

‡ ,, 171, கல்லாடனார்.

§ ,, 217, கழார்க்கீரன் எயிற்றியார்.

நினைவாற்றலும் இருக்க வேண்டும். பொய்கையில் முள் கொடியில் சிக்கிய ஆம்பல்இலை வாடைக்காற்றால் எழுந் தெழுந்து அடங்கும் காட்சியைக் கண்ட புலவர்க்கு உடனே கொல்லன் உலைக்களத்துத் துருத்தி நினைவுக்கு வருகிறது. பொய்கையில் காற்று வீசத் தாமரைஇலை ஆடுவதைக் காணும் புலவர், யானையின் செவிகளின் அசைவை நினைத்துக் கொள்கிறார். மழை பெய்யும்போது யானையின் முகத்தில் விழும் ஆலியை (ஆலியங் கட்டியை)க் கண்ட புலவரின் கற்பனையில், மலையில் சிதறிவிழும் முத்துக்கள் தோன்று கின்றன. காயாவை அடுத்து அசையும் காந்தளைக் காணும் புலவர் மயிலுக்கு அஞ்சும் பாம்பை நினைத்துக் கொள்கிறார். காந்தளை ஊதிவரும் வண்டைக்காணும்போது மகளிர்கையில் எடுத்து விளையாடும் வட்டுக்காய் நினைவுக்கு வருகிறது. இவ்வாறு ஒன்றன் அசைவைக் காணும்போது, அதனைப் பலவகையால் ஒத்திருக்கும் மற்றொரு பொருளின் அசைவு நினைவுக்கு வருதல் புலவரின் கற்பனைவளத்திற்குத் தக்க சான்றாகும்.

மருத நிலத்துப் பொய்கையின் கரையில் பிரம்பின் கொடி வளர்ந்திருக்கின்றது. கொடியில் அரத்தின் வாய் போல் அழகிய முள் உள்ளது. நீண்ட அந்த முள்கொடி ஆம்பலின் அகன்ற இலையில் சிக்கிக்கொள்கின்றது. அசைந்து வரும் வாடைக்காற்று அதனை அசைக்க, ஊதப்படும் உலைக் களத்தில் விசைத்து இழுத்துவிடப்படும் துருத்தி போல் மேலே எழுந்து எழுந்து நெகிழ்ந்து விழுகின்றது.

*பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்*
*அரவாய் அன்ன அம்முள் நெடுங்கொடி*
*அருவி ஆம்பல் அகலடை துடக்கி*

அசைவரல் வாடை தூக்கலின் ஊதுலை
விசைவாங்கு தோலின் வீங்குபு நெகிழும்......*

நீர்மேல் உயர்ந்துள்ள நீண்ட காம்பு உடைய தாமரை யின் அகன்ற இலைகள், பெரிய குளம் கலங்குமாறு காற்று வீசும்போதெல்லாம் யானையின் காதுகள் போல் அசைந்து ஆடுகின்றன.

நிலமிசை நிவந்த நெடுந்தாள் அகல்இலை
இருங்கயம் துளங்கக் கால்உறு தோறும்
பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும்†

மலையில் மழை பொழிகிறது. ஆலங்கட்டி விழுகிறது. யானைகள் மழைக்கு ஒதுங்கிநிற்கின்றன. அவற்றின் முகத் தில் விழும் ஆலங்கட்டிகள், குன்றுகளின்மேல் சிதறும் முத்துக்கள் போல் தோன்றுகின்றன. யானைகளின் முகத்தில் விழுந்த ஆலங்கட்டிகள் சிதறிப் பாறைகளின்மேல் படிகின்றன. பாறைகளின்மேல் விழுந்த ஆலங்கட்டிகள், அவற்றின்மேல் கோலம் செய்தாற்போல் அழகாகத் தோன்றுகின்றன.

...முத்தம்
வரைமுதல் சிதறி யவைபோல் யானைப்

---

*அக. 96, மருதம் பாடிய இளங்கடுங்கோ.

அரவாய் - அரத்தின் வாய். அருவி - நீர் மிகுதி. அகல் அடை - அகன்ற இலை. தூக்கலின் - அசைத்தலினால். தோல் - துருத்தி. வீங்குபு - வீங்கி.

†அக. 186, பாணர்.

நிவந்த - உயர்ந்த. தாள் - தண்டு, காம்பு. துளங்க - அசைய. கால் - காற்று. செவியின் - காதுபோல்.

புகர்முகம் பொருத புதுநீர் ஆலி
பளிங்குசொரி வதுபோல் பாறை வரிப்ப......*

நீல நிறமான பூக்கள் பூத்து மயில் போல் காயாமரம் அழகாகத் தோன்றுகிறது. அதற்கு அடுத்தாற்போல் நிலத்தில் காந்தள் மலர் பூத்துக்கிடக்கிறது. காந்தள், மெல்லிய கைபோல் நீண்ட காம்புடன் இருப்பதால் படம் எடுத்த பாம்பு போல் தோன்றுகிறது. மயிலைக் கண்டால் பாம்பு அஞ்சிப் படம் எடுத்தல் இயற்கை. மலர்ந்த காயாமரத்தின் மெல்லிய கிளை ஒன்று படிந்திருக்கக் காந்தள் மலர்ந்து நீண்ட துடுப்புடன் அசையும் காட்சி, மயிலைக் கண்டு அஞ்சிப் படம் எடுக்கும் பாம்பு போல் காணப்படுகிறது. கைபோல் விளங்கும் காந்தள்மலரில் தேன் நுகர வந்து வண்டுகள் குடைந்து ஊதுகின்றன. வண்டுகள் சூதாடு கருவியாகிய வட்டுப்போல் தோன்றுகின்றன. கைபோன்ற காந்தள்மலரில் விளங்கும் வண்டுகள், மகளிர் கையால் எடுத்து ஆடும் வட்டுப் போல் காட்சி அளிக்கின்றன.

விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ அரவின்
அணங்குடை அருந்தலை பைவிரிப் பவைபோல்
காயா மென்சினை தோய நீடிப்
பல்துடுப்பு எடுத்த அலங்குகுலைக் காந்தள்
அணிமலர் நறுந்தாது ஊதும் தும்பி
கையாடு வட்டின் தோன்றும்......†

*அக. 108, தங்கால் பொற்கொல்லனார்.

வரைமுதல் - குன்றின்மேல். புகர் - புள்ளிகள். வரிப்ப - கோலம் செய்ய.

†அக. 108, தங்கால் பொற்கொல்லனார்.

பொறி - புள்ளிகள். மஞ்ஞை - மயில். வெரீஇ - அஞ்சி. அணங்கு உடை - வருத்தம் செய்தலை உடைய. பை - படம்.

கொக்குகள் மாலைவேளையில் இரைதேடி முடிந்தபின் தம் இருப்பிடம் நாடித் திரும்பிப் பறக்கும்போது வானத்தில் அழகான காட்சியாகத் தோன்றும். இயற்கை யுணர்வால் அவை எப்படியோ முன்னும் பின்னுமாக முறைப்பட இருந்து வளைவாக மாலை போல் அமைந்து பறந்துசெல்லும். அறிவுள்ள சிறுவர்களை அவ்வாறு நடந்துசெல்லுமாறு பயில்விப்பது பெருமுயற்சியாகும். ஒரு சிறு முயற்சியும் இன்றி வானத்தில் ஒழுங்குபெற மாலை போல் வளைந்து அமைந்து கூட்டமாகப் பறக்கும் கொக்குகளின் இயற்கைத் திறன் வியந்து போற்றத்தக்கதாகும். நக்கீரரின் கண்ணைக் கவர்ந்த காட்சிகளுள் இது ஒன்று. மாலைநேரத்தில் வானம் சிவந்து தோன்றுகிறது. அந்தச் செக்கர்வானத்தைத் தீண்டுவதுபோலவே இந்தக் கொக்குகளின் ஒழுங்கு தோன்றுகிறது. இந்தக் காட்சியைக் கண்ட நக்கீரரின் கண்ணுக்கு ஓர் உவமை தோன்றியது. அவர் முருகவேளை வழிபடும் அன்பராதலின், செக்கர்வானையும் அதில் ஒழுங்குற அமைந்து தோன்றிய வெண்ணிறக் கொக்குக் கூட்டத்தையும் கண்ட அவர்க்கு முருகனுடைய செந்நிற மார்பும் அம்மார்பில் அமைந்த முத்துமாலையும் நினைவுக்கு வந்தன.

**நெடுவேள் மார்பின் ஆரம் போலச்**
**செவ்வாய் வானம் தீண்டிமீன் அருந்தும்**
**பைங்கால் கொக்கின் நிரைபறை உகப்ப......***

*அக. 120.

ஆரம் - முத்துமாலை. நிரைபறை - வரிசையாகப் பறத்தல். உகப்ப - உயர்ந்து செல்ல.

## ஓசை ஒப்புமை

புலவர் சிலர்க்குக் கண்கள் கூர்ந்துநோக்கும் திறன் பெற்றுப் பண்பட்டிருப்பதுபோல், சிலர்க்குச் செவிகள் நுண்ணிய ஓசை வேறுபாடுகளையும், வெவ்வேறு பொருள்களின் ஓசைகளினிடையே உள்ள ஒற்றுமைகளையும் தெளிவாக அறியும் ஆற்றல் பெற்றுள்ளன. நெல் பொரியாக மாறும் போது ஏற்படும் ஓசை எவ்வளவு நுட்பமானது ! அதையும் உற்றுக் கேட்டு அறிந்து அதற்கு ஏற்ற மற்ருேர் ஓசையை உவமையாகக் கூறுகிருர் ஒருவர். அவருடைய செவிப்புலன் மிக நுட்பமாக வளர்ந்தமைந்தது எனலாம்.

பாலைநிலத்தில் வற்றி உலர்ந்த மூங்கில்களின்மேல் கருங்குரங்கு பாய்வதால், மூங்கிலின் வெண்மையான நெல் உதிர்கின்றது. உதிரும் நெல், கடுவெயிலால் காய்ந்துள்ள பாறைமேல் பரவ, உடனே நகத்தை நெரிப்பது போன்ற ஓசையோடு பாறையின் வெம்மையால் பொங்கிப் பொரிந்து விடுகின்றது.

> ...முசுக்கலை
> பைதறு நெடுங்கழை பாய்தலின் ஒய்யென
> வெதிர்படு வெண்ணெல் வெவ்வறைத் தாஅய்
> உகிர்நெரி ஓசையின் பொங்குவன பொரியும்......*

இவ்வளவு சிறிய ஒலியையும் நுணுகி ஆராய்ந்து ஒப்புமை கூறிய புலவர்களுக்கு, மேல்காற்று மலைச்சுனையில்

---

*அக. 267, பாலை பாடிய பெருங்கடுங்கோ.

முசுக்கலை - ஆண் கருங்குரங்கு. கழை - மூங்கில் தண்டு. பைது அறு - பசுமை அற்ற. வெதிர் - மூங்கில். அறை - பாறை. தாஅய் - பரந்து. உகிர் - நகம்.

வீசும்போது எழும் ஓசைக்கு உவமை தோன்றுதல் அரிது அன்று. ஆயினும் இதில் ஒரு நயம் அமையக் கூறுகிறார். அந்தச் சுனை நீரில்லாமல் வறண்ட சுனை. அதனால்தான் மேல் காற்று உள்ளே புகுந்து ஓசை செய்ய முடிகிறது. நீரற்ற சுனை என்பதை விளக்குவதற்காக முன்னமே ஓர் உவமை அமைத்துள்ளார். உவமையாக வரும் பொருளும் வேறு நிலத்துப் பொருள் அன்று; சுனை உள்ள மலைநிலத்து விலங்கே; மலை போன்ற உடல்பெற்ற யானையே. வறட்சிக் காலத்தில் மலையில் சுனை வற்றுதல் போல், உணவு இல்லாமல் வருந்தும் யானையின் உடலில் முதலில் வாடியிருப்பவை அதன் கண்களே. உணவில்லாமல் வாடிய காரணத்தால் பசுமை யற்றுக் குழிந்துள்ள கண்களைப் போல் நீர் வற்றிய சுனையும் உள்ளே குழிந்து பசுமை அற்றுக் காணப்படும். இவ் வாறு மலைநிலத்துப் பொருளின் மாறுதலுக்கு, அதே நிலத்தில் உள்ள மற்றொன்றன் மாறுதலை உவமையாக்கியது போற்றத் தக்கது.

மழை இல்லாமையால் வறண்டு பாலையாய்ப் போன மலையில் சுனைகள் நீர் இல்லாமல் வறியனவாய்க் கிடக்கின் றன. அங்குத் திரியும் யானைகள் தின்னத் தீனி இல்லாமல் பசியால் வாடிக் கண்கள் குழிந்து தோன்றுகின்றன. நீர் அற்ற சுனைகள் ஆழ்ந்து கிடக்கும் காட்சி, வாடிய அந்த யானைகளின் குழிந்த கண்களைப் போலவே தோன்று கின்றது. மேல்காற்று வீசுகின்றது. அந்த வறுஞ்சுனை களில் புகுந்து வரும் மேல்காற்று தெளிந்த ஓசை எழுப்பி வருகின்றது. அது மலைப் பிளப்பில் புகுந்து ஒலிக்கும்போது, பறைஒலி போல் கேட்கின்றது.

பசித்த யானைப் பழுங்கண் அன்ன
வறுஞ்சுனை முகந்த கோடைத் தெள்விளி
விசித்துவாங்கு பறையின் விடரகத்து இயம்ப.....

## பொருளும் கருத்தும்

சில பருப்பொருள்களுக்கு நுண்ணிய கருத்துக்களை உவமையாக்கிக் கூறும் இடங்களும் அழகாக அமைந் துள்ளன.

மாலையில் சுனையில் உள்ள பூக்கள் தேன் இல்லாமல் குவிந்துபோவன ஆகையால் வண்டுகள் அவற்றை விட்டு மரங்களில் உள்ள மலர்களை நாடிச் செல்கின்றன. எப்போ தும் செல்வம் நிறைந்தவர்களையே நாடும் நோக்கத்துடன், செல்வம் குறைந்தவர்களைப் பயன் இல்லாதவர்கள் எனக் கருதி அவர்களின் தொடர்பை விட்டு நீங்குவார்கள் நன்றி யில்லாத கயவர்கள். அவர்களின் செயல் போல், மாலையில் சுனையில் உள்ள பூக்கள் தேன் இல்லாமல் குவியும் நிலைகண்டு வண்டுகள் விட்டுத் துறந்து மரக்கிளைகளில் உள்ள மலர்களை நாடிச் செல்கின்றன.

நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்
பயன்இன் மையின் பற்றுவிட்டு ஒரூஉம்
நயனில் மாக்கள் போல......†

---

*அக. 321, கயமனார்.

பழுங்கண் - வாடிய கண். கோடை - மேல்காற்று. தெள்விளி - தெளிந்த ஓசை. விசித்து வாங்கு - வாரால் இழுத்துக் கட்டப் பட்ட. இயம்ப - ஒலிக்க.

†அக. 71, அந்தி யிளங்கீரனார்.

தேரும் - ஆராயும். ஒரூஉம் - நீங்கும். நயன் - நல்லபண்பு - நன்றியுணர்ச்சி.

பருப்பொருள்களுக்கு உவமை கூறி விளக்குவதைவிட நுட்பமான கருத்துக்களுக்குத் தக்க உவமைகள் கூறி விளக்குவது அரிய திறனாகும். காதல் முதலிய பண்புகளுக்கு அமைந்துள்ள உவமைகள் போற்றத்தக்கன.

காதல், மழைவெள்ளம் போன்றது. நாணம், உப்பால் கட்டிய அணை போன்றது. காதல் வெள்ளத்தின்முன் இந்த நாணம் என்னும் அணை நில்லாது.

...மிகுபெயல்
உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம்......*

நெஞ்சின் பலவகை நிலைகளுக்கு மணல் மண் ஆகிய வற்றின் தன்மைகள் உவமைகளாக அமைந்துள்ளன.

பிரிவாற்றுத் துன்பத்தால் நெஞ்சம் நெகிழ்ந்து கரைவதற்கு, நீர் ஓடும் வாய்க்காலில் நுண்ணிய மணலாலாகிய மேடு கரைவது உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

புனல்கால்
அயிர் இடு குப்பையின் நெஞ்சுநெகிழ்ந்து அவிழ......†

காதலால் நெஞ்சு நெகிழ்ந்து வருந்தும் நிலைமைக்கு உவமையாக, மழையை ஏற்ற மண் கரைந்து நெகிழும் தன்மை கூறப்பட்டுள்ளது.

இகுபெயல் மண்ணின் ஞெகிழ்பு அஞர் உற்ற......‡

---

*அக. 208, பரணர்.
பெயல் - மழை. சிறை - அணை. வரை - எல்லை.

†அக. 163, கழார்க்கீரன் எயிற்றியார்.
அயிர் - சிறுமணல். குப்பை - தொகுதி - மேடு.

‡அக. 32 , நல்வெள்ளியார்.
இகு - சொரிதல். மண்ணின் - மண் போல். நெகிழ்பு - நெகிழ்ந்து. அஞர் - துன்பம்.

# 7. நாகரிகம்

## மக்கட்பேறு

'பெறுமவற்றுள் யாம் அறிவதில்லை அறிவறிந்த மக்கட்பேறு அல்ல பிற'* என்று உணர்ந்து மக்களைப் பெற்று வளர்ப்பதில் ஆர்வம் கொண்டிருந்தனர் பழந்தமிழர். குற்றம் அற்ற அறிவினை உடைய சிறுவரைப் பகைவரும் தம் பகைமை மறந்து விரும்புவர் என்பது அக் காலத்து மக்கள் வாழ்க்கையில் கண்டது. அத்தகைய சிறுவரைப் பெற்றவர்க்கு வாழ்வில் ஒரு குறையும் இல்லை ; அவர்கள் இவ்வுலகத்தில் புகழோடு விளங்கி, மறுமையுலக வாழ்வையும் மாசில்லாமல் அடைவார்கள் என்று பலரும் பழமொழியாகக் கூறிவந்தனர்.

*இம்மை உலகத்து இசையொடும் விளங்கி*
*மறுமை உலகமும் மறுஇன்று எய்துப*
*செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்*
*சிறுவர்ப் பயந்த செம்ம லோர்எனப்*
*பல்லோர் கூறிய பழமொழி...*†

## கலை விளக்கம்

பழங்காலத்தில் வீடுதோறும் கலையின் விளக்கம் இருந்தது. சிறப்பாக, இசைக்கலை மக்கள் வாழ்க்கையோடு

---

*திருக்குறள், 61.

†அக. 66, செல்லூர்க் கோசிகன் கண்ணனார்.

மறு - குற்றம். இன்று - இன்றி, இல்லாமல். எய்துப - அடைவார்கள். செறுநர் - பகைவர். செயிர்தீர் - குற்றம் அற்ற. காட்சி - அறிவு. செம்மலோர் - தலைமை உடையவர்.

இயைந்திருந்தது. பண்ணும் திறமுமாக இசை பாகுபாடு பெற்று வளர்ந்திருந்தது. காதலனைப் பாராட்டித் தோழியிடம் கூறும் காதலி, இசை நூலின் எண்முறைப்படி இயற்றிய பண்ணைவிட, பாணன் புதுமையாக இயற்றிய திறத்தைவிடக் காதலன் இனியவன் என்று கூறுகின்றாள். அதனால் இசையின் இனிமையை உணர்ந்து ஒப்பிட்ட கலையுணர்ச்சி விளங்குகின்றது.

> எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
> புதுவது புனைந்த திறத்தினும்
> வதுவை நாளினும் இனியனால் எமக்கே.*

## பாவை வழிபாடு

இளமகளிர், தைத்திங்களின் இறுதியில் மழை பெய்து குளிர்ச்சி மிகுந்த நாட்களில், வண்டல் விளையாட்டுக்கு வைத்திருக்கும் பாவையை நீர் உண்ணும் துறையில் கொண்டுவந்து குரவைக் கூத்து ஆடுவது பண்டைக்கால வழக்கம்.

> தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்...
> வண்டற் பாவை உண்துறைத் தரீஇத்
> திருநுதல் மகளிர் குரவை அயரும்...†

இவ் வழக்கமே பிற்காலத்தில் பாவை வழிபாடு, பாவை நோன்பு என வளர்ந்தது. திருப்பாவை திருவெம்பாவை ஆகிய சமயப்பாடல்களில் குறிப்பிடப்படும் நோன்பு இதுவே.

---

*அக. 352, அஞ்சியத்தைமகள் நாகையார்.

†அக. 269, மதுரை மருதன் இளநாகனார்.

வண்டல் - சிறுமியர் விளையாட்டு. தரீஇ - கொண்டுவந்து. நுதல் - நெற்றி.

## கொடியோர் வாழ்வு

அக் காலத்தில் வேங்கடமலைக்கு அப்பால் நாகரிகம் அற்ற மக்கள் கொலைத்தொழில் வல்ல கொடியவர்களாய் வாழ்ந்துவந்தனர். வழிபறித்து உண்பதே அவர்களின் வாழ்க்கையாய் இருந்தமையின் அவர்களின் மனமும் பார்வையும் செயலும் கொடுமை நிறைந்தனவாக இருந்தன.

அவர்கள் வளைந்த வில் உடையவர்கள்; கொடிய பார்வை உடையவர்கள். இனிய முழக்கம் செய்யும் அழகிய எருதைக் கொன்று, கொழுப்புப் பொதிந்த சிறந்த தசையை நெருப்பில் வைத்து எடுத்து (நன்றாகவும் சுடாமல்), வருத்தம் செய்யும் பேய்களைப் போல் வெளுத்த ஊனைத் தின்பார்கள்; நீர் வேட்கை நீங்குவதற்காகத் தோப்பி என்னும் கள்ளைக் குடிப்பார்கள். புலால் கமழும் கையோடும் கழுவாத வாயோடும், வெண்கடப்பமரம் உள்ள சிற்றூரில் கூத்தாடுவார்கள். ஓயாமல் ஒலிக்கும் கோட்டானின் ஒலியே அவர்களுடைய கூத்துக்கு ஏற்ற தாளமாகும்.

**இன்சிலை எழில்ஏறு கெண்டிப் புரைய**
**நிணம்பொதி விழுத்தடி நெருப்பின்வைத் தெடுத்து**
**அணங்கரு மரபின் பேஎய் போல**
**விளர்ஊன் தின்ற வேட்கை நீங்கத்**
**துகள்அற விளைந்த தோப்பி பருகிக்**
**குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்**
**புலாஅல் கையர் பூசா வாயர்**
**ஒராஅ உருட்டும் குடுமிக் குராலொடு**
**மராஅஞ் சீறூர் மருங்கில் தூங்கும்.....**

*அக. 265, மாமூலனர்.

சிலை - முழக்கம். கெண்டி - கொன்று. புரைய - உயர்வான. விழு - சிறந்த. தடி - தசை. விளர் - வெண்மையான. துகள்அற -

## நிதிக்குக் காவல்

தமிழ் வேந்தர்கள் போர் வெற்றியாலும் திறையாலும் பெற்ற செல்வங்களைச் சிறந்த நகரங்களில் சேர்த்து வைத்திருந்தனர். சோழர் குடந்தையில் அவ்வாறு நிதி சேர்த்து வைத்திருந்ததாகத் தெரிகிறது.

இளம் பெண்ணை வெளியே செல்லாதவாறு தடுத்து இல்லின்கண் இருக்கச்செய்து தாய் காக்கும் காவலை விளக்குமிடத்தில், பகைவர் நாட்டை வென்று திறையாகப் பெற்ற நிதியைச் சோழர் குடந்தையில் வைத்துக் காத்தல் அதற்கு உவமையாகக் கூறப்படுகிறது.

கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியினும் செறிய
அருங்கடிப் படுக்குவள் அறன்இல் யாயே.*

## நடுகல்

இன்று ஒருவர் இறந்தபின் பத்தாம் நாளோ பதினாறாம் நாளோ நடைபெறும் இறுதிச் சடங்கைக் ‘கல்லெடுப்பு’ என்னும் தமிழ்ப்பெயரால் கூறுவது உண்டு. அந்த இறுதிச் சடங்கில் சில கற்களை வைத்து அவற்றிற்கு நீராட்டி, சந்தனம் முதலியன பூசி, மலர் அணிந்து வழிபடுதலும், அவ்வாறு வழிபடும்போது இறந்தவர் பெயருடன் அவ

---

குற்றமற. விளைந்த - முதிர்ந்த. குலாஅ - வளைந்த. பூசா - கழுவாத. ஓராஅ - நீங்கா, ஓயாத. மராம் - வெண்கடப்பமரம்.

*அக. 60, குடவாயிற் கீரத்தனார்.

செறிய - உட்பட்டுக்கிடக்க. கடி - காவல். அறன் - அறம். யாய் - தாய்.

ருடைய முன்னோர் பெயரையும் கூறுதலும் உண்டு. இந்தச் சடங்குகளுக்கும் 'கல்லெடுப்பு' என்னும் பெயருக்கும் தோற்றுவாய், பழங்காலத் தமிழரிடம் இருந்துவந்த நடுகல் வழிபாடு என்னும் வழக்கமே ஆகும். அதைப் பற்றிய குறிப்புக்கள் சில நெடுந்தொகையிலும் உள்ளன.

பசுக்களைக் கவர்ந்து சென்ற பகைவரைத் தடுத்துப் போர் செய்து அவற்றை மீட்டார்கள் வீரர்கள். அப் போரில் இறந்த வீரர்களின் நல்ல புகழை நிலைநிறுத்துவதற் காகக் கல் நட்டு வழிபாடு செய்தார்கள். பெண் யானை படுத்துக் கிடந்தாற் போல் தோன்றும் குன்றின் பக்கத்தில் இயற்கையாக நிற்கும் சில கற்கள் நட்டுவைத்த நெடுங்கற்களைப் போலவே தோன்றின. அவற்றின் அகன்ற இடத்தில் பல வடிவம் செதுக்கிப் பல பெயர்களையும் பொறித்தார்கள்; நீராட்டினார்கள். அவற்றின் ஈரமான புறத்தில் நறுமணம் உள்ள மஞ்சள் பூசினார்கள். அம்பு கொண்டு ஆத்திமரத்தில் நார் உரித்து, அதைக்கொண்டு சிவந்த கரந்தைப் பூக்களைக் கண்ணியாகத் தொடுத்து, வண்டு ஒலிக்குமாறு கற்களுக்குச் சூட்டினார்கள். இவ்வாறு வழிபாடு செய்துவிட்டு வீரர்கள் தம் ஊர்க்குத் திரும்பி னார்கள்.

> தறுகண் ணாளர் நல்லிசை நிறுமார்
> பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்
> நட்ட போலும் நடாஅ நெடுங்கல்
> அகலிடம் குயின்ற பல்பெயர் மண்ணி
> நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய
> அம்புகொண்டு அறுத்த ஆர்நார் உரிவையின்
> செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி

*வரிவண்டு ஆர்ப்பச் சூட்டிக் கழற்கால்*
*இளையர்பதிப் பெயரும் அருஞ்சுரம்.....*

நடுகல்லுக்கு மயிற்பீலி சூட்டி, துடி ஒலித்து, நெல் லால் செய்த கள்ளோடு செம்மறிக் குட்டியைப் பலியாகக் கொடுத்தல் உண்டு.

*நடுகல் பீலி சூட்டித் துடிப்படுத்துத்*
*தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்......†*

## இராமனும் கண்ணனும்

இராமாயண பாகவதக் குறிப்புக்கள் நெடுந்தொகையில் சில இடங்களில் உவமைகளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

வெற்றிவேல் ஏந்தும் பாண்டியரது திருவணைக்கரை யில் (தனுஷ்கோடியில்) கடற்கரையில் போரில் வல்ல இராமன் தன் படைத்தலைவர்களுடன் அரிய மறை (ரகசியம்) ஆராய்தற் பொருட்டு ஓர் ஆலமரத்தின் அடியில் தங்கியதாக வும், அந்த மரத்திலிருந்த பறவைகளின் ஒலி மிகுதியாக இருந்ததை அறிந்து அவற்றை அடங்கியிருக்கச் செய்ததாக வும் கூறப்படுகின்றது.

*வென்வேல் கவுரியர் தொன்முது கோடி*
*முழங்குஇரும் பௌவம் இரங்கும் முன்துறை*

---

*அக. 269, மதுரை மருதன் இளநாகனர்.

தறுகணாளர் - அஞ்சாமை உள்ள வீரர். இசை - புகழ். நிறு மார் - நிறுத்த. குறும்பொறை - சிறு குன்று. குயின்ற - செதுக்கிய. கண்ணி - நீராட்டி. ஆர் - ஆத்தி. இளையர் - வீரர்.

†அக. 35, அம்மூவனர்.

தோப்பி - நெல்லிலிருந்து செய்யும் கள்வகை. துரூஉ - செம்மறி யாட்டின் குட்டி.

வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம்......*

வடநாட்டில் யமுனையாற்றின் துறையில் நீராடிய ஆயர்மகளிரின் ஆடைகளை எடுத்துக்கொண்டு குருந்த மரத்தின்மேல் இருந்த கண்ணன், பிறகு பலதேவர் அங்கு வருதலைக் கண்டு, அந்த மகளிர் தழையையே ஆடையாகக் கொண்டு மறைந்துகொள்வதற்காக, தான் இருந்த மரம் தாழுமாறு மிதித்தார் என்று குறிப்பிடப்படுகிறது.

...வடாஅது
வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை
அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்
மரம்செல மிதித்த மால்......†

## இமயக் காட்சி

உலகத்தில் மிக உயர்ந்த மலையாகிய இமயமலையைப் பற்றிப் போதுமான குறிப்புக்கள் சங்க இலக்கியத்தில் இல்லை எனலாம். அது, பெயரளவில் ஆங்காங்குச் சுட்டிக் கூறப்படுகின்றது. மாமூலனார் என்னும் புலவர் இமயத்தை நேரில் கண்டிருக்கக்கூடும். அவருடைய பாட்டில் அதைப் பற்றிய குறிப்பு உள்ளது.

---

*அக. 70, மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனார்.

கவுரியர் - பாண்டியர். பௌவம் - கடல். இரங்கும் - ஒலிக்கும். அவித்த - அடக்கிய. வீழ் - விழுது.

†அக. 59, மதுரை மருதன் இளநாகனார்.

வடாஅது - வடக்கே. தொழுநை - யமுனை. அண்டர் - ஆயர். உடீஇயர் - உடுத்துக்கொள்வதற்காக. செல - தாழ்ந்து கொடுக்குமாறு.

இமயமலை புகைபோல் மேலெழுந்து அகன்ற வானத்தில் உயர்ந்து விளங்குகின்றது. பனி தவழும் தீச்சுடர் போல் தோன்றுகிறது என்கிறார்.

புகையின் பொங்கி வியல்விசும்பு உகந்து
பனிஊர் அழற்கொடி கடுப்பத் தோன்றும்
இமயச் செவ்வரை......*

## கப்பல்

திரைகடலில் ஓடும் வழக்கம் பழங்காலத் தமிழர்க்கு உண்டு. சேரன் செங்குட்டுவன் கடற்படையும் உடைய வனாய், அரபியரைத் துரத்தி வென்று 'கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன்' எனப் புகழப்பட்டான். தமிழ் நாட்டு வணிகர், சாவகம் முதலிய கிழக்கிந்தியத் தீவுகளுக்குக் கப்பலில் சென்று வாணிகம் செய்துவந்தனர். கடற்கரை யில் பல துறைமுகப் பட்டினங்கள் செழித்து விளங்கி யிருந்த காலம் அது. ஆதலின் துறைமுகத்திலிருந்து கப்பல் கள் புறப்பட்டு அசைந்து செல்லும் காட்சி அக்காலப் புலவர்கள் பலமுறை கண்டறிந்த காட்சியே. மருதன் இள நாகனார் என்ற புலவரின் பாட்டு ஒன்று, கப்பல்கள் மிகப் பெரியனவாய் இருந்தன என்றும், அவை அசைந்து புறப் பட்டபோது உலகமே அசைந்தெழுவது போல் இருந்தன என்றும், பலநாள் இரவும் பகலும் செல்லக்கூடிய நீண்ட பயணங்கள் இருந்தன என்றும், கப்பல்களுக்குத் துறை முகத்தை அறிவிக்கக் கலங்கரைவிளக்கங்கள் இருந்தன என்றும், அவற்றைக் கண்டு நீகான் (மாலுமி) குறித்த இடத் திற்குச் செலுத்திவந்தான் என்றும் அறிவிக்கின்றது.

*அக. 265, மாமூலனார்.

புகையின் - புகைபோல். உகந்து - உயர்ந்து. கடுப்ப - போல.

கப்பல் கரையை விட்டுப் புறப்படுகின்றது. பெரிய கப்பல் ஆதலின், உலகமே இடத்தைவிட்டு அசைவதுபோல் அச்சம் தோன்றுகிறது. புலால் வீசும் அலைகளை உடைய கடல்நீரை இடையே பிளந்து போகின்றது. இரவும் பகலும் சோர்ந்து தங்குதல் இன்றி, விரைந்து வீசும் இயல்பு உடைய காற்றுச் செலுத்தச் செல்கின்றது. ஓட்டும் நீகான், கரை உயர்ந்த செறிந்த மணலை உடைய அகன்ற துறையில் மாடத்தின்மேல் அமைந்து ஒளி பொருந்திய விளக்கு உள்ள இடம் அறிந்து செலுத்துகின்றான்.

உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ
இரவும் எல்லையும் அசைவுஇன்று ஆகி
விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்
கோடுஉயர் திணிமணல் அகல்துறை நீகான்
மாட ஒள்எரி மருங்குஅறிந்து ஒய்ய.....

## தேர்

குதிரைகள் பூட்டிய தேர்கள் பழங்காலத்தில் சிறந்த ஊர்திகளாக இருந்தன. நாடெங்கும் தேர் ஓடும் நெடுந் தெருக்கள் ஆறுபோல் அகலமாய் அமைந்திருந்தன. குதிரை களைப் பேணி வளர்க்கும் முறையும், அவற்றின் மனம் அறிந்து செலுத்தும் முறையும் நன்கு போற்றப்பட்டிருந்தன. அவற்றிற்கு நல்ல அலங்காரங்களும் செய்து அழகுற

*அக. 255, மதுரை மருதன் இளநாகனார்.

உரு - அச்சம். வங்கம் - கப்பல். போழ - பிளக்க. எல்லை - பகல். அசைவு - தங்குதல். வங்கூழ் - காற்று. கோடு - கரை. மருங்கு - பக்கம், திசை. ஒய்ய - செலுத்த.

வைத்திருந்தனர். குதிரை நூல் என்று நூலும் எழுதிப் போற்றப்பட்டிருந்தது. குதிரைகள் நன்கு வாய்க்கப் பெற்று விரைந்து ஓடும் தேர்களின் காட்சி, சில புலவர்களால் சொல்லோவியமாக்கித் தரப்படுகிறது. புனல் பாய்ந்தாற் போல் ஓடும் குதிரைகள், கணை கழிந்தாற்போல் செல்லும் தேர்ச்சக்கரங்கள், பால் கண்டாற் போன்ற மணல்வழி, வாய்க்கால் அமைந்தாற் போன்ற தேர்வழி என்று உலோச்சனர் கூறும் தொடர்களில் தேர் ஓடும் ஓட்டமே அமைந்துள்ளது. ஓடும் குதிரையின் வாயில் வழியும் நுரையும், அது சிலந்திநூல் போல் சிதறிவிழும் காட்சியும் பாடப்பட்டுள்ளன. செல்லும் வேகத்தால் தேர் காற்றுப் போல் இருந்தது என்றும், பார்க்கும் கண்ணின் பார்வைக்கும் எட்டவில்லை என்றும் கூறப்படுகிறது.

குதிரை நூலின் இலக்கணங்கள் அமைந்த பிறப்பு உடையவை ; நீல மணியால் ஆகிய நெற்றிச் சுட்டி அணிந்தவை ; கொய்யப்பட்ட மயிர் பொருந்திய பிடரி சருச்சரையாக அடர்ந்திருப்பவை ; நெய் பெய்து மிதித்துத் தந்த கவளத்தை வெறுத்தவை ; கொழுமையான சோற்றை உண்பவை ; வரிசையாகப் பொருந்தி ஒரு தன்மையாகச் செல்பவை ; செந்தினையின் கதிர் நீண்டு வளர்ந்தாற் போன்ற வளைந்த தலை உடையவை ; இத்தகைய நல்ல குதிரைகள் நான்கு பூட்டிய தேர் அது. பருத்த கழுத்தில் நெருங்கத் தாங்கும் நுகம் பொருந்தியுள்ளது. அழகிய புள்ளிகளை உடைய பல வடங்கள் ஒலிக்குமாறு குதிரைகள் பூட்டப்பட்டுள்ளன. அறிவுடைய பாகன் ஏவ, தாழ்ந்த துறையில் நீர் பாய்தல் போல அவைகள் தாவிச் செல்கின்றன. அம்பு செல்வதுபோல் தேரின் வலிய சக்கரங்கள் விரைந்து

ஓடுகின்றன. காற்றால் திரண்ட பால் போன்ற வெண் மணலில் வாய்க்கால் போல் வழி (சுவடு) ஏற்படுமாறு தேர் ஓடுகின்றது.

*நூல்அமை பிறப்பின் நீல உத்திக்*
*கொய்மயிர் எருத்தம் பிணர்படப் பெருகி*
*நெய்ம்மிதி முனை இய கொழுஞ்சோற்று ஆர்கை*
*நிரல்இயைந்து ஒன்றிய செலவின் செந்நினைக்*
*குரல்வார்ந் தன்ன குவவுத்தலை நன்னான்கு*
*வீங்குசுவல் மொசியத் தாங்குநுகம் தழீஇப்*
*பூம்பொறிப் பல்படை ஒலிப்பப் பூட்டி*
*மதியுடை வலவன் ஏவலின் இகுதுறைப்*
*புனல்பாய்ந் தன்ன வாமான் திண்தேர்க்*
*கணைகழிந் தன்ன நோன்கால் வண்பரி*
*பால்கண் டன்ன ஊதை வெண்மணல்*
*கால்கண் டன்ன வழிபடப் போகி......**

வல்லவனாகிய பாகன், குதிரைகள் அடங்கிச் செல்வதற்கு வேண்டிய கடிவாளக் கயிற்றைப் பூட்டுகின்றான். வளைந்த நுகத்தில் பிணித்த தலையோடு வேகமான நடையும், காற்றின் வேகம் போன்ற மிகவிரைவான ஓட்டமும்கொண்டு குதிரைகள் ஓடுகின்றன. கொல்லன் வலித்து இழுக்கும் துருத்திபோல் வெப்பமான பெருமூச்சு விடுகின்றன. பால் கடையும்போது மிதக்கும் வெண்ணெயின் பெரிய நுரை போல் மிக வெண்மையாய் வாயின் தெவிட்டலாய் வழியில்

---

*அக. 400, உலோச்சனார்.

உத்தி-நெற்றியின் அணிகலம். பிணர் - சருச்சரை. முனைஇய - வெறுத்த. ஆர்கை - உணவு. சுவல் - புறக்கழுத்து. இகு - தாழ்ந்த. வாம் மான் - தாவும் குதிரை. நோன் கால் - வலிய சக்கரம். ஊதை - காற்று. கால் - வாய்க்கால்.

மெல்லிய நுரைகள் வழிகின்றன. அவை சிலந்தியின் நூல் போல் நுட்பமானவையாய்ச் சிதறுகின்றன. பதமாக உலர்ந்த அரிசி இட்டு முறுக்கிச் சுற்றிய திரிமரத்தின் ஒலி போல்,அழகிய மணலில் தேரின் சக்கரம் அறுத்துச்செல்லும் ஒலி கேட்கின்றது.

வல்லோன் அடங்குகயிறு அமைப்பக், கொல்லன்
விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய உயிராக்
கொடுநுகத்து யாத்த தலைய கடுநடைக்
கால்கடுப் பன்ன கடுஞ்செலல் இவுளி
பால்கடை நுரையின் பரூஉமிதப்பு அன்ன
வால்வெண் தெவிட்டல் வழிவார் நுணக்கம்
சிலம்பி நூலின் நுணங்குவன பாறி
ஐதுஉணங்கு வல்சி பெய்துமுறுக் குறுத்த
திரிமரக் குரலிசை கடுப்ப வரிமணல்
அலங்குகதிர்த் திகிரி ஆழி போழ......*

வரிசையாகப் பறக்கும் அன்னப் பறவைகள் போல் தோன்றுகின்றன, விரைந்த ஓட்டமும் புன்மையான பிடரியும் செருக்கும் கொண்ட குதிரைகள். மெல்லப் பூட்டிய கடிவாள வாரை ஒருசேரப் பொருந்தப் பற்றிச் செலுத்தல் வேண்டும். சக்கரம் மென்னிலமான வழியை அறுத்துச் செல்லும். செல்லும் வேகத்தால் காற்றுப் போல் தோன்றும்.

---

*அக. 224, ஆவூர் மூலங்கிழார்மகனார் பெருந்தலைச் சாத்தனார்.

வெய்ய - வெப்பமாக. உயிரா - உயிர்த்து - மூச்சுவிட்டு. யாத்த - கட்டிய. கால்கடுப்பு - காற்றின் வேகம். இவுளி - குதிரை. பரூஉ - பெரிய. நுணக்கம் - மென்மையானது. பாறி - சிதறி. வல்சி - உணவு, அரிசி. கடுப்ப - போல. அலங்கு - அசையும். கதிர் - சக்கரத்தின் உறுப்பு.

தேர் நூலின்படி அமைந்து, கண்ணின் பார்வையைப் பயனற்றதாக்கி விரைந்து செல்லுவது, பண்ணுதல் உடையது அந்தப் பெரிய தேர்.

நிரைபறை அன்னத் தன்ன விரைபரிப்
புல்உளைக் கலிமா மெல்லிதின் கொளீஇய
வள்புஒருங்கு அமையப் பற்றி முள்கிய
பல்கதிர் ஆழி மெல்வழி அறுப்பக்
கால்என மருள ஏறி நூல்இயல்
கண்நோக்கு ஒழிக்கும் பண்அமை நெடுந்தேர்...

மிக வேகமாகத் தேரைச் செலுத்திவந்த பாகனைத் தலைவன் பாராட்டிக் கூறும்போது "வானில் வழங்கும் இயல்பை உடைய காற்றைக் குதிரைகளாகப் பூட்டினையோ ? அல்லது, உன் மனத்தைத்தான் குதிரைகளின் வடிவாகப் பூட்டினையோ ?" என்கிறான். வாயுவேகம் மனவேகம் என்று இன்று கூறப்படும் தொடர் இதிலிருந்து எழுந்ததாகும்.

வான்வழங்கு இயற்கை வளிபூட் டினையோ ?
மான்உரு வாகநின் மனம்பூட் டினையோ ?......†

தன்னலம் அற்றுப் பிறர்நலம் கருதி வாழ்ந்த பண்ணன் என்னும் வள்ளலைப் பாராட்டும் பாட்டு ஒன்றில்,

---

*அக. 234, பேயனார்.

பறை - பறத்தல். பரி - செல்லும்வகை. உளை - தலையாட்டம். கலி - செருக்கு. மா - குதிரை. வள்பு - கடிவாளத்து வார். முள்கிய - உள்ளே பதிந்த. கதிர் - சக்கரத்தின் கதிர்கள். கால் - காற்று.

†அக. 384, ஒக்கூர் மாசாத்தியார்.

வளி - காற்று. மான் - குதிரை.

*தனக்கென வாழாப் பிறர்க்குஉரி யாளன்**

என்னும் தொடர் அமைந்துள்ளது.

கையில் ஒன்று வைத்திருப்பது போல் காட்டி ஏமாற்றி வெறுங்கையை விரித்தல் வழக்கம். இது பயனற்றுக் கழியும் கனவு ஒன்றைப் பற்றிக் குறிப்பிடும்போது அமைந்துள்ளது. பிரிந்த தலைவியைக் கனவில் கண்டு மகிழ்ந்த தலைவன் விழித்தபோது ஏமாற்றம் அடைந்ததை அது விளக்குகின்றது.

*வறுங்கை காட்டிய வாய்அல் கனவு...†*

---

*அக. 54, மாற்றூர்கிழார் மகனார் கொற்றங் கொற்றனார்.

†அக. 39, மதுரைச் செங்கண்ணனார்.

வாய்அல் - உண்மை அல்லாத, பொய்த்துப்போன.

# 8. உள்ளம்

## நாணம்

இளைஞர் நாணம் உடையவர்களாய் - செய்யத் தகாதன கண்டபோது உள்ளம் ஒடுங்கும் பண்பு உடையவர்களாய் - பிறர் போற்றத்தக்க நெறியில் நடந்து வருகிறார்கள் ; உள்ளத்தில் காதல் வளர்ந்த பிறகு அந்த நாணம் படிப்படியாகக் குறைவதை உணர்கிறார்கள் ; ஓர் எல்லை கடந்தபிறகு நாணம் இல்லாமற் போவதையும் உணர்கிறார்கள். 'பிறர் கண்டால் என்ன எண்ணுவார்கள் !' என்று பழிக்கு அஞ்சிய உள்ளம் உடையவர்களாக இருந்தவர்களும், அந்நிலையில் 'யார் கண்டால் என்ன? என்னவாவது எண்ணிக் கொள்ளட்டும் ; என் காதல்துணையைப் பெற்றால் அல்லாமல் யான் இனி உயிர் வாழேன்' என்று துணிகிறார்கள். உள்ளத்தில் அதுவரையில் சிறப்பிடம் பெற்று இருந்துவந்த நாணம் என்னும் பண்பு இருந்த இடம் தெரியாமல் மறைந்து, காதலே முழு உணர்வாக விளங்குகிறது. இந்த நிலையைப் பரணர் ஓர் உவமை கூறி விளக்குகிறார். நீர் வரும் வழியில் உப்பால் அணை அமைத்திருந்தால், நீர் வாராத வரையில் அது அணையாகத் தோன்றி நிற்கும். மழை பெய்து நீர் வந்ததோ, அது உடனே கரைந்து அழியத் தொடங்கும். பெய்த மழைநீர் வெள்ளமாகத் திரண்டு வந்ததும் உப்பால் ஆகிய அணை அடியோடு அழியும். அதுபோல், காதல் வளரும் உள்ளத்தில் தொடக்கத்தில் நாணம் சிறிதளவு இடையிடையே தோன்றித் தோன்றித் தடுக்கும். காதல் மிகுந்தபோதோ, நாணம் இருந்த இடம் தெரியாமல் போய்விடும்.

*மிகுபெயல்*
*உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல*
*நாணுவரை நில்லாக் காமம்......**

## உடம்பும் உயிரும்

யாக்கை நிலையாமையைக் கூறுமிடத்து, "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே, உடம்போடு உயிரிடை நட்பு" என்கின்றது திருக்குறள். இக் கருத்து அகநானூற்றில் உள்ளதே ஆகும். ஒருத்தி தன் உயிர்வாழ்க்கையில் வெறுப்புற்றபோது, "அசையும் கிளைகளில் உள்ள கூடு பொலிவிழந்து போக வேறு இடத்திற்குப் பறவை புறப்பட்டுச் செல்வது போல், உடம்பு இங்கே ஒழிய என் உயிர் பிரிந்து எழுந்து, என் கணவர் கடமையைச் செய்து கொண்டிருக்கும் தொலைநாட்டிற்குச் செல்வதாக" என்கிறாள்.

*அலங்கல் அஞ்சினை குடம்பை புல்லெனப்*
*புலம்பெயர் மருங்கில் புள்எழுந் தாங்கு*
*மெய்இவண் ஒழியப் போகிஅவர்*
*செய்வினை மருங்கில் செலீஇயர்என் உயிரே......†*

## சொல்லின் ஆற்றல்

கணவன் பிரிந்து சென்றால் மனைவி உயிர் வாழ்தல் அரிது ; ஆதலின் செல்லாதிருக்கவேண்டும் என்று வற்புறுத்

*அக. 208, பரணர்.
சிறை - அணை. பெயல் - மழை. வரை - எல்லை. காமம் - காதல்.
†அக. 113, கல்லாடனார்.
அலங்கல் - அசைவு. குடம்பை - கூடு. புலம் - இடம். பெயர் - பிரிந்து புறப்படும். புள் - பறவை. இவண் - இங்கே. செலீஇயர் - செல்வதாக.

திக் கூறுதல் உண்டு. ஒருகால் செல்லுதல் உண்டானால், விரைவில் திரும்பி வருவேன் என்று கணவன் கூறுவதற்கு முன், " நீ விரைந்து வரும் செய்தியை எமக்கு உரைக்க வேண்டா. திரும்பிவரும் வரையில் உயிரோடு இருந்து வாழ வல்லவர்க்கு உரைத்துவிட்டுப் போ " என்று கூறுவதாகத் திருக்குறள்* விளக்குகின்றது. அகநானூற்றில், இந்தக் கருத்தே, " பிரிந்து செல்லும் தலைவரே! நீர் திரும்பிவரும் செய்தியை, கண் கலுழும் எமக்கு உரைக்காதீர். பாலை வழியே சென்றார் என்று எண்ணி ஆற்றியிருக்க வல்லவர்க்கு உரைக்க " என்று அமைந்துள்ளது.

*அரிமதர் மழைக்கண் கலுழச் செல்வீர்*
*வருவீர் ஆகுதல் உரைமின் மன்னே......†*

*...கானம்*
*சென்றோர் மன்என இருக்கிற் போர்க்கே†*

இளவேனிற்காலம் காதலர்க்கு இன்பம் ஊட்டுவதில் சிறந்தது. கவலை இல்லாமல் பிரிய வல்லவரும் பிரிய முடியாத காலம் அது.

*இகழுநர் இகழா இளநாள் அமையம்......‡*

என்ற அழகிய தொடர் அதைக் குறிக்கிறது.

---

*செல்லாமை உண்டேல் எமக்குஉரை ; மற்றுநின், வல்வரவு வாழ்வார்க்கு உரை. - திருக்குறள், 1151.

†அக. 387, மதுரை மருதன் இளநாகனார்.

அரி - செவ்வரி பரந்த. மதர் - மதர்த்த. மழை - குளிர்ந்த. இருக்கிற்போர்க்கு - இருக்க வல்லவர்க்கு.

‡அக. 25, ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன்.

இகழுநர் - பிரிவுத் துன்பத்தைப் புறக்கணிப்பவர். அமையம் - பொழுது.

காதலர் அன்புகனிந்து உள்ளம் உருகுமாறு கூறும் சொற்கள் எலும்பையும் நெகிழ்விக்கும் சொற்களாம்.

என்பு நெகிழ்க்கும் கிளவி*

என்னும் தொடர் போற்றத் தக்கதாகும்.

## நெஞ்சின் துணை

மனம் போன போக்கில் போதல், உரம் இல்லாதவர்களின் வாழ்க்கை ; அவர்களே உண்மையில் கோழைகள். மனத்திற்கு ஒரு போக்கு – ஒரு நெறி – ஏற்படுத்தி அதில் செலுத்துகிறவர்கள், உரம் மிகுந்தவர்கள் ; வாழ்க்கையில் வீரர்கள் அவர்களே. இத்தகைய உரம் உடையவர்களும் இளமையில் காதல் வளர்ந்த நிலையில் ஓரளவு கலங்கி நிற்பார்கள். மனம் போன போக்கில் போகிறவர்களுக்கு அப்போது உள்ளத்தில் போராட்டம் இல்லை ; புறத்தே மட்டுமே போராட்டம் இருக்கும் ; பிறரால் வரும் இடையூறுகள் மட்டுமே அவர்கள் காண்பன. ஆனல், நெறி வகுத்து வாழ்கிறவர்களுக்கு உள்ளத்தில் போராட்டம் உண்டு ; வெளி இடையூறுகளைப் பற்றி அவர்கள் அவ்வளவாகக் கவலைப்படுவதில்லை. தம் நெஞ்சைத் தமக்குத் துணையாக வைத்திருப்பதற்கு முயல்வார்கள். காதல் வயப்பட்ட நெஞ்சம் கலங்கும்போதும், கடமையில் சோர்வுறும்போதும், நெஞ்சைக் கடிந்து ஒறுப்பார்கள் ; தடுத்து நிறுத்துவார்கள் ; இன்சொல் கூறிக் குழந்தையை வேண்டுவது போலவும் வேண்டுவார்கள். இளைஞன் ஒருவன் தன் மனத்திற்குக் கூறும் சொல்லாக அமைத்து மதுரைக் கணக்காயனர் இதை விளக்குகிறர்.

---

*அக. 225, எயினந்தை மகனர் இளங்கீரனர்.

நெஞ்சே ! உனக்கு வன்சொல் சொல்லி ஒறுத்தாலும் (தண்டித்தாலும்) விடமாட்டாய். இன்சொல் சொல்லி நிறுத்தினாலும் நிற்கமாட்டாய். ஒன்றுபட்ட நண்பர் போல் என் நிலையைப் போற்றி உணர்ந்திடு. உனக்கு யான் உறவினன் அல்லேனோ ?

ஒறுப்ப ஓவலை ; நிறுப்ப நில்லலை ;
புணர்ந்தோர் போலப் போற்றுமதி ; நினக்குயான்
கிளைஞன் அல்லனோ நெஞ்சே......*

## சொல்லைக் கடந்த நிலை

சொற்கள் கருத்தின் கருவிகள். சில வேளைகளில் சொற்கள் கருத்தை முழுதுமாக விளக்க முடிவதில்லை. உணர்ச்சி மிகும்போது, சொற்கள் பலவாக இருத்தல் இடையூறாகவும் உள்ளது. சொற்களுக்கு எட்டாத சில உண்மைகளும் உணர்வுகளும் இன்னும் இருந்துவருகின்றன.

உள்ளம் சிறிதளவு துயர் உறும்போது, சொற்களால் அத் துயரத்தைப் புலப்படுத்த முடிகிறது. உள்ளத்து உணர்ச்சி சிறிதளவாக இருப்பதால் அப்போது வாய்ச் சொற்கள் பயனுடையனவாக, பற்பலவாக, வெளிவருகின்றன. உள்ளம் பெருந் துயரத்தில் அமிழ்ந்து ஆழ்ந்துள்ள போது, வாயில் சொற்கள் பிறப்பதில்லை. அந்நிலை பேச்சற்ற நிலையாக உள்ளது. அதிலிருந்து சிறிது தெளியும் போதுதான் ஒருசில சொற்கள் மட்டுமே வெளிவருகின்றன.

மதுரைத் தெருக்களைச் சுற்றி அலைந்தபோது, கண்ணகியின் உள்ளம் துயரத்தில் ஆழ்ந்திருந்ததாகக் கூறமுடியும். துயரத்துடன் பெருஞ்சினமும் கலந்து உள்ளத்தில் குடிகொண்டிருந்த நிலை அது. அதனால் அழ முடிந்தது, அரற்ற

*அக. 342, மதுரைக் கணக்காயனார்.

முடிந்தது, முறையிட முடிந்தது. மதுரைநகரை விட்டு நீங்கியபோது, சினம் அடங்கித் துயரமே குடிகொண்டிருந்தது. அப்போது அழுகை இல்லை, ஆற்றல் இல்லை, முறையீடு இல்லை. "கிழக்கு வாயிலில் கணவனோடு புகுந்தேன். மேற்கு வாயிலில் தனியே செல்கிறேன்."

> கீழ்த்திசை வாயில் கணவனொடு புகுந்தேன்
> மேற்றிசை வாயில் வறியேன் பெயர்கு

எனச் சில சொற்கள் சொல்லவே அவளுடைய துயரநிலை இடம் தந்தது. இந்தச் சில சொற்களில்தான் முன்னைய அழுகை அரற்றுமுறையீடுகளைவிடப் பெருந்துயரம் உள்ளது.

இலக்கியத்தில் துயர உணர்வை – அவலச் சுவையை – ஆராய்வோர் இவ் வேறுபாட்டைத் தெளிய வேண்டும். வாழ்க்கையில் உள்ள நிலையை இலக்கியத்தில் உணர்வது பெரும்பேறு; ஆதலின் வாழ்க்கையைத் தெளிவாக உணர்த்துவது கலையின் தலையாய கடமையாகும். வாழ்க்கைநிலையைத் திரித்தோ மிகுத்தோ உணர்த்த வேண்டின், தெளிவு கருதியே அவ்வாறு செய்தல் வேண்டும். விளையாட்டுக்கோ, வேடிக்கைக்கோ, புனைந்து கூறும் ஆற்றலுக்கோ, கற்பனை பயன்படுவது விழலுக்கு இறைக்கும் நீரே ஆகும். என்றோ எங்கோ எவரிடமோ கண்ட உணர்வை – அமைதியின்றி அரைகுறையாகக் கண்ட உணர்வை – என்றும் எங்கும் நம் உள்ளத்தில் உணரச் செய்வதற்கு – அமைதியாக, தெளிவாக, முழுதுமாக உணரச்செய்வதற்குப் பயன்படும் கற்பனையே யாவரும் போற்றத்தக்க கற்பனையாகும். நெடுந்தொகைப் பாட்டுக்களில் இத்தகைய கற்பனைச் சிறப்பைக் காணலாம்.

மேற்கொண்ட கடமையின் காரணமாகக் காதலியைப் பிரிந்து வெளிநாட்டில் உள்ள காதலன் பற்பல எண்ணி

வருந்துகிறான். ஒவ்வொரு வேளையில் அவனுடைய உள்ளம் பிரிவுத் துயரில் ஆழ்ந்துவிடுகிறது. அப்போது அவன் பெரு மூச்சுடன் கலந்து வரும் சொற்கள் மிகச் சிலவே. ' என் காதலி எங்கோ இருக்கிறாள். நான் அவளைப் பிரிந்து இங்கே உள்ளேன் ' என்னும் எண்ணம்தான் துயரத்தில் ஆழ்ந்துள்ள நிலையில் அவன் எண்ணுவது.

காதலி தொலைவில் உள்ள சிறிய ஊரில் இருக்கிறாள் யான் வேந்தனுடைய இந்தப் பாசறையில் உள்ளேன்.

*சீறூ ரோளே ஒண்ணுதல் ; யாமே...*
*புனைதார் வேந்தன் பாசறை யேமே.**

காதலி உள்ள ஊர், தொலைவில் வன்புலமாகிய காடுகள் சூழ்ந்த நாட்டில் உள்ளது.

*வன்புலக் காட்டுநாட் டதுவே...*
*இரும்பல் கூந்தல் திருந்திழை ஊரே.*†

காதலி இருக்கும் ஊரை, வறண்ட இந்த மலைகள் பல குறுக்கிட்டு மறைக்கின்றன.

*நலம்நல்கு ஒருத்தி இருந்த ஊரே...*
*வறனுறு குன்றம் பலவிலங் கினவே.*‡

---

*அக. 84, மதுரை எழுத்தாளன்.

சீறூர் - சிறிய ஊர், சிற்றூர். ஒண்ணுதல் - ஒளி பொருந்திய நெற்றி உடையவள்.

†அக. 94, நன்பலூர்ச் சிறுமேதாவியார்.

இரு - கரிய. திருந்திழை - திருந்திய அணிகலன்கள் அணிந் தவள்.

‡அக. 109, கடுந்தொடைக் காவினார்.

நலம் - அழகின்பம். வறன் - வறட்சி. விலங்கின - குறுக்கே தடுத்தன.

## ஈவதில் இன்பம்

இல்வாழ்க்கையில் ஈடுபட்ட ஒருவன் தன் அளவில் மகிழ்ந்து வாழ்வதே போதும் என்று இருப்பானுனல், அவனுடைய வாழ்வு தேக்கம் அடையும் ; விரிவும் வளர்ச்சியும் பெறுது. காலப்போக்கில் அந்த இல்வாழ்க்கையும் வெறுப்பை விளைத்துவிடும். ஆகையால் பொதுநலம் நாடி ஏதேனும் தொண்டு செய்ய வேண்டும் என்பது முன்னோர் கொள்கை ; மனைவிமக்களைக் காக்கும் வாழ்க்கையோடு, பிறர்க்கு உதவியாக வாழும் வாழ்க்கையும் ஓரளவு வேண்டும் என்றனர். சிறப்பான இன்பம், பிறர்க்கு உதவுதலில் உள்ளது என்பது பழந்தமிழர் கண்ட உண்மை.

காதலனுய் இல்வாழ்க்கை நடத்தும் தலைவன், அவ் வாழ்க்கை நல்கும் இன்பம் போதும் என்று அமையாமல், இல்லாதவர்க்கு ஈந்து மகிழும் இன்பத்தை நாடுகின்றுன். ஈதல் இன்பத்தை விரும்பி, அது கைகூடுவதற்காகவே பொருள்தேட முயல்கிறுன்.

> ஈதல் இன்பம் வெஃகி மேவரச்
> செய்பொருள் திறவர் ஆகி......*

## பிறர்க்காக வாழ்தல்

யமனுக்கு ஆளாகிச் சாதல் கூடாது, பிறர்க்கு உதவியாக வாழ்ந்து சாதல் வேண்டும் ; அத்தகையவரே நோற்றவர் (புண்ணியம் உடையவர்) என்னும் கருத்துத் தலைவனுல் கொள்ளப்படுகின்றது. வீட்டில் இருந்து பிறர்க்குப் பயன் படாமல் வாழ எண்ணுமல், நாட்டைக் கடந்து பொருள்

---

*அக. 69, உமட்டூர் கிழார் மகனுர் பரங்கொற்றனுர்.
வெஃகி - விரும்பி. திறவர் - திறத்தினர், பகுதியினர்.

தேடி வந்து வறியவர்க்கு உதவ எண்ணும்போது தலைவன் அவ்வாறு கருதுகிறான்.

*நோற்றோர் மன்ற தாமே கூற்றம்*
*கோளுற விளியார் பிறர்கொள விளிந்தோர்எனத்*
*தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்......**

தான் பிரியக் கருதும் காரணத்தை விளக்கும்போது, முயற்சி உடையவரே அறநெறியில் ஒழுகவும் முடியும். சுற்றம் காக்கவும் முடியும் என்கிறான் ; உடம்பு வருந்தாமல் வீட்டில் இருந்தவர்க்கு இரண்டும் இயலாமற்போகும் என்கிறான்.

*அறம்தலைப் பிரியாது ஒழுகலும் சிறந்த*
*கேளிர் கேடுபல ஊன்றலும் நாளும்*
*வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்என......†*

பகைவரின் செருக்கைக் கெடுக்கும் வன்மையும், தம்மைச் சேர்ந்தவர்க்குத் துன்பம் உற்றபோது உதவி செய்து காக்கும் ஆண்மையும், முயற்சி செய்து வெளிநாட்டிற்குச் சென்றேனும் பொருள் தேடுவார்க்கே இயலும் ; வீட்டில் அமைதியாகக் காலம் கழிப்பவர்க்கு இயலா.

---

*அக. 61, மாமூலனார்.

கூற்றம் - கூற்றுவன். கோள்உற - கொள்ள. விளியார் - இறக்காதவர். தாள் - முயற்சி. வலம் - வெற்றி. சேட்புலம் - தொலைவில் உள்ள நாடு. படர்ந்தோர் - சென்றோர்.

†அக. 173, முள்ளியூர்ப் பூதியார்.

தலைப்பிரியாது - நீங்காமல். கேளிர் - சுற்றத்தார். கேடுபல ஊன்றல் - பலதுன்பம் தாங்குதல்.

செறுவோர் செம்மல் வாட்டலும் சேர்ந்தோர்க்கு
உறுமிடத்து உய்க்கும் உதவி ஆண்மையும்
இல்இருந்து அமைவோர்க்கு இல்என்று......

மனைவியைப் பிரிய முடியாமல் முயற்சியைக் கைவிட்டு வாழ்ந்திருத்தல் ஆண்மையும் கடமையுணர்ச்சியும் அற்றவர்க்கே முடியும். நண்பர்களின் அழிவையும் சுற்றத்தாரின் துன்பத்தையும் பகைவரின் மேம்பாட்டையும் பார்த்துக் கொண்டு ஒரே ஊரில் உணர்ச்சியற்ற வாழ்க்கை வாழ்வதற்கு அவர்களால்தான் முடியும்.

நட்டோர் இன்மையும் கேளிர் துன்பமும்
ஒட்டாது உறையுநர் பெருக்கமும் காணூஉ
ஒருபதி வாழ்தல் ஆற்றுப தில்ல...
மென்முலை முற்றம் கடவா தோர்என......†

இவ்வாறு இரவும் பகலும் எண்ணி எண்ணி வருந்தும் தலைவனுடைய உள்ளத்தின் வேதனைத் தீ, முயற்சி என்னும் மழையால்தான் அவிகின்றதாம்.

நள்ளென் கங்குலும் பகலும் இயைந்துஇயைந்து
உள்ளம் பொத்திய உரம்சுடு கூர்எரி
ஆள்வினை மாரியின் அவியா......‡

---

*அக. 231, மதுரை ஈழத்துப் பூதன் தேவனார்.
செம்மல் - தலைமைச் செருக்கு. செறுவோர் - பகைவர்.

†அக. 279, இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார்.
ஒட்டாது உறையுநர் - சேராமல் வாழும் பகைவர். காணூஉ கண்டு. முலைமுற்றம் கடவாதோர் - மனைவியைப் பிரியாதவர்.

‡ஷை—
உரம்சுடு - வலிமையை அழிக்கும். ஆள்வினை - முயற்சி. மாரியின் - மழையால். அவியா - அவித்து.

## அறமும் பொருளும்

பொருளால் பெருமை பெறுவதோடு அல்லாமல் அறமும் பொருந்தி வாழ முடியும் என்று நம்பிக்கைகொண்டு பழந் தமிழர் பொருள் தேடுவதில் ஊக்கம் கொண்டனர்.

அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும்......*

இன்பம் அடையும் வகையிலும் பழந்தமிழ்ச் சான்றோர் அறநெறி தவறாமல் இன்பத்தை நாடினர். எவ்வளவு மிகுதி யாக வேட்கை கொண்டபோதிலும் பழியோடு வரும் இன்பத்தை வேண்டா என்று ஒதுக்குதலே கடமையாகக் கொண்டனர். ஆகையால் பொருள்தேடும் வகையிலும் நல்ல நெறியே நாடித் தீமையைத் தள்ளினர்.

கழியக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வருஉம் இன்பம் வெஃகார்......†

இப்பிறப்பில் அறநெறியில் வாழ்ந்து நன்மையே செய்த வர்க்குத் தீங்கு ஒன்றும் வராது என்பது பண்டைத் தமிழகத்தில் எல்லாரும் அறிந்த பழமொழியாக இருந்தது.

---

*அக. 155, பாலை பாடிய பெருங்கடுங்கோ.

அறன்கடை - அறம் கடந்த நெறி, பாவம். படா - பொருந்தாத. பிறன்கடை - பிறனுடைய வாயிலில். செல்வம் - சிறப்பு.

†அக. 112, நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர் கிழார்.

கழிய - மிக. வெஃகார் - விரும்பார்.

*...இம்மை*
*நன்றுசெய் மருங்கில் தீதுஇல் என்னும்*
*தொன்றுபடு பழமொழி......**

உறவினர்க்கு வந்த கேட்டை நீக்கி அவரைத் தாங்க வேண்டும் ; சூழ்ந்துள்ள சுற்றத்தார் உண்ணுமாறு செய்ய வேண்டும் ; அயலார் உரிமையுடன் நெருங்கிப் பழகுமாறு செய்ய வேண்டும். இந்த மூன்று நோக்கமே பழங்காலத்தில் தமிழரைப் பொருள் தேடுமாறு செய்து, அந்த முயற்சிக்கு ஏற்ற ஊக்கத்தையும் விருப்பத்தையும் அளித்தன.

*கேள்கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும்*
*கேள்அல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்*
*ஆள்வினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து......†*

கருதியதை எப்படியாவது முடித்தே தீர வேண்டும் என்பது பழந்தமிழ்ப் பெரியோரது கொள்கை அன்று. நெறியோடு முயன்று முடிக்க முடியுமானால் முடிப்பர் ; இன்றேல் கருதியதைக் கைவிடுவர். தாம் கேட்டறிந்த உண்மைகளே அங்குசமாகக் கொண்டு, அலையும் மனத்தை அலையாமல் நிறுத்தி, அறமும் பொருளும் கெடாதவாறு ஆராய்ந்து, தம் தகுதியும் நோக்கி, அதன்பிறகே தாம் கருதியதை முடிக்க முயல்வர். பெரியோரின் ஒழுக்கம் அத்தன்மை

---

*அக. 101, மாமூலனார்.

செய்மருங்கில் - செய்யுமிடத்தில். தொன்றுபடு - பழமைப் பட்ட.

†அக. 93, கணக்காயனார் மகனார் நக்கீரனார்.

ஊன்ற - தாங்க. கேள் அல் கேளிர் - உறவல்லாத சுற்றத்தார், அயலார். கெழீஇயினர் - கெழீஇ - பொருந்தி. எதிரிய - ஏற்ற. புகல் - விருப்பம்.

யாகும். நெறியல்லாதவற்றை அவர்களின் உள்ளம் விரும்பாது. ஒருகால் தவறி விரும்புமாயினும் தம் உயரிய ஒழுக்கத்தைக் கைவிடுவதில்லை.

விழையா உள்ளம் விழையும் ஆயினும்
என்றும், கேட்டவை தோட்டி ஆக மீட்டுஆங்கு
அறனும் பொருளும் வழாமை நாடித்
தன்தக வுடைமை நோக்கி மற்றுஅதன்
பின்ஆ கும்மே முன்னியது முடித்தல்
அனைய பெரியோர் ஒழுக்கம்......

## உதவாப் பொருள்

பிறர்க்கு உதவாத பொருள் வீண் என்றும், அதைச் சேர்ப்பது பயனில்லாதது என்றும் பழந்தமிழர் நம்பினர். பரத்தை ஒருத்தி தான் எண்ணியவாறு செய்யத் தவறினால் தன் அழகு பயனற்றுக் கெடுவதாக என்று சினத்துடன் குறிப்பிடும் இடத்தில், 'இரந்தவர்க்கு ஈயாமல் சேர்த்து வைத்தவனுடைய பொருள் பரந்து வெளிப்படாமலே கிடந்து அழிவது போல் என் அழகும் வீணில் வருந்திக் கெடுவதாக' என்கிறாள்.

இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே.†

---

*அக. 236, ஓரம்போகியார்.

விழையா - விரும்பாத. தோட்டி - அங்குசம். வழாமை - தவறாதபடி. தகவுடைமை - தகுதி. முன்னியது - கருதியது.

†அக. 276, பரணர்.

ஈட்டியோன் - சேர்த்து வைத்தவனுடைய. யாய் - தாய். ஓம்பிய - காப்பாற்றிய. நலன் - அழகு.

## இன்பமும் துன்பமும்

இன்பம் வருங்காலத்தில் மகிழ்ந்து மயங்குதலும் துன்பம் வருங்காலத்தில் வருந்திக் கலங்குதலும் அறிவுடைமை அல்ல என்பது பழந்தமிழர் கொள்கை. ' இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் துன்பம் உறுதல் இலன் '* என்பது அவர்கள் உணர்ந்த உண்மை. இன்பம், துன்பம், கூடல், பிரிதல் என்பவை பகலும் இரவும் போல வெவ்வேறாய் மாறி மாறி வருவன என்று அவர்கள் தெளிந்திருந்தனர்.

இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
நன்பகல் அமையமும் இரவும் போல
வேறுவேறு இயல ஆகி மாறுஎதிர்ந்து
உளஎன......†



*திருக்குறள், 629.

†அக. 327, மருங்கூர்ப் பாகைச் சாத்தன் பூதனார்.

அமையம் - பொழுது. இயல - தன்மை உடையன.